**தமிழ் வாழ்வியல்: தடமும் திசையும்**
**விமர்சன கட்டுரைகள்**
© தொகுப்பு: ஞானி
முதல் பதிப்பு : டிசம்பர் 2005
வெளியீடு : **காவ்யா**
16, இரண்டாம் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம், சென்னை - 600 024.
☎ : 23726882
கணினி அச்சு - சுந்தரம் கிராபிக்ஸ், சென்னை - 24.
அச்சாக்கம் - உதயம் ஆப்செட், சென்னை - 5.
அட்டை வடிவமைப்பு - முத்து
பக்கங்கள் - viii + 218 = 226
விலை : ரூ. 115

# தமிழ் வாழ்வியல்: தடமும் திசையும்

தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் நெருக்கடிகள் மிகுந்துவரும் தற்காலச் சூழலில் வைத்து நெடுங்காலத் தமிழ் இலக்கியத்தை இன்று நாம் வாசிக்கிறோம். தமிழ் மக்களுக்குச் சமத்துவமும் இதன் தொடர்ச்சியாகச் சமதர்மமும் நிலைபெறுவதற்கான வாழ்வு தேவை. வள்ளுவரின் அற உணர்வும், இளங்கோவடிகளின் நீதி நிலைபெறுவதற்கான வேட்கையும், சாத்தனாரின் வறுமை யின்மைக்கான உணர்வும், இவற்றோடு சித்தர் இலக்கியத்தில் இடம் பெறும் சாதி, மதம், சடங்குகளுக்கு எதிரான உணர்வும் இன்றைய தமிழ் மக்களின் நெஞ்சில் ஆழப் பதிய வேண்டிய உணர்வுகள். இப்படித் தொடங்கி கம்பர் காவியம், சைவ, வைணவ இலக்கியங்களையும் நம் காலத்தேவைக்கு ஒத்த முறையில் நம்மால் வாசிக்க முடியும். சமய இலக்கியங்கள் என்பனவற்றையும் மனிதத் தேவைகளை முன்னிறுத்திப் பொருள்படுத்த முடியும். சித்தர்களின் தொடர்சியில் வள்ளலாரையும், வள்ளலார் நெறியில் பெரியாரையும் நிறுத்திக் கற்க முடியும். பெரியாரியம், மார்க்சியம் ஆகியவற்றின் மையமெனச் சமதர்மத்தைக் காண்பதன் மூலம் நம் காலத்துக்கும் மக்களின் நல்வாழ்வுக்கும் நாம் நெருங்கிச் செல்ல முடியும். எந்தவகையான ஆதிக்கத்திற்கும் தேவை இல்லை என்பதை இத்தகைய வாசிப்பின் வழியே நம்மால் உணர முடியுமானால் அப்புறம் பெண்ணியம் என்றும் தலித்தியம் என்றும் நம்மால் இயல்பாகப் பேசமுடியும். நெடுங்காலத் தமிழ் இலக்கியத்தில் அங்கங்கே பதிந்திருக்கிற சாதி முதலிய அதிகார மையங்களைத் தகர்த்து நம்காலத் தேவைகளுக்கு ஒத்த முறையில் தமிழ் இலக்கியத்தை வாசிப்பதற்குப் பின் நவீனத்துவ அணுகுமுறையும் நமக்குப் பயன்படும். மனித வாழ்வின் மேன்மைதான் இலக்கியத்தின் உட்பொருள் என்பதை நம்மால் எளிதாகப் புரிந்து கொள்ளமுடியும். அப்படியானால் மனித வாழ்வில் சிக்கல்கள் முதலியன எத்தகைய சமூகச் சூழலில், வரலாற்றுச் சூழலில் ஏற்படுகின்றன என்பதையும் நம்மால் ஆராய்ந்து அறிய முடியும். இலக்கியம் என்று தொடங்கினால் இதன் ஆழத்தில் சமூகமும் வரலாறும் இயங்குவதை அறியமுடியும். மனித வாழ்வு, எத்தகைய சூழலில் அர்த்தமும் அழகும் பெறுகிறது. அல்லது எத்தகைய சூழலில் அர்த்தத்தையும் அழகையும் இழக்கிறது என்பதை அக்கறையோடு நாம் படிக்கிறபோது

இலக்கியத்தின் இயக்கம் நமக்குள்ளும் இருப்பதைப் புரிந்துகொள்ள முடியும். இந்நிலையில் தனி மனிதன் என்ற குறுகிய சூழலில் இருந்து விடுபட்டு நம்மையும் சமூக வரலாற்று இயக்கத்தின் பகுதியென நம்மால் காணமுடியும். இத்தகைய வாசிப்பின் மூலம் வள்ளுவரையும், இளங்கோவையும், கணியன் பூங்குன்றன் முதலியவர்களையும் நமக்குள்ளும் சந்திக்க முடியும். நமக்குள் வாழ்வின் அர்த்தம் கூடுதலாகும். நமக்குள் உரம் பெறுவோம். தமிழின் ஆற்றலுக்கு நாம் வசப்படுவோம். பாரதி, பாரதிதாசன் முதலியவர்களோடு நம்மால் கை கோர்த்துக் கொள்ள முடியும். பணத்திற்கும், பதவிக்கும் நாம் வசப்பட மாட்டோம். தமிழின் நெடுங்கால வரலாற்றின் பகுதியென நம்மை உணர்வோம். தெய்வங்கள் நமக்குள்ளும் இயங்கக் காண்போம். மனித வாழ்வின் வீறு எத்தகையது என்பதைப் புரிந்து கொள்வதோடு எல்லோருக்கும் இத்தகைய வாழ்வு தேவையென்பதையும் உணர்வோம். இப்படி மனித வாழ்வின் அர்த்தம் தேடி இலக்கியம் கற்பதன் மூலம் மெய்யியல் பார்வை நமக்குள் இயல்பாகும்.

இப்படி ஆழமாகவும், விரிவாகவும் கற்பதற்கான ஆழத்தையும் விரிவையும் கொண்டிருப்பது தமிழிலக்கியம். தமிழுக்குத் தான் இவ்வகைச் சக்தி உண்டு என்ற பெருமிதம் நமக்குத் தேவையில்லை. தொன்மையான எந்த மொழி இலக்கியத்தினுள்ளும் இத்தகைய வளம் இயல்பாகத் தங்கியிருக்கிறது. மனித வாழ்வின் பண்பாட்டு மேன்மைகளை இத்தகைய இலக்கியங்கள் தமக்குள் உள்ளுறை ஆற்றல் எனக் கொண்டிருக்கின்றன. இயற்கையோடும், சமூகத்தோடும் மனிதர்கள் தம்மோடும் முரண்படாமல் வாழ்ந்த பழங்காலத்தை இவை தமக்குள் கொண்டிருக்கின்றன. நெருக்கடிகளால் மனிதர் தமக்குள் சிதைந்தும் சின்னாபின்னப்பட்டும் அழிந்து கொண்டிருக்கின்ற இக்கால மனிதனுக்குள் மனித வாழ்வின் ஒருமை, மேன்மை முதலியவற்றை உணர்த்தக் கூடியவை இவ்வகை இலக்கியங்கள். மாபெரும் இயற்கை, வரலாறு, பிரபஞ்சம் ஆகியவற்றின் பேரியக்கத்தினுள் தானும் ஒன்றி விடுவதன் மூலமே மனிதர் தமக்குள் சமதர்மம் மற்றும் விடுதலையையும் பெறமுடியும் என்பதை இவ்வகை இலக்கியக் கல்வி நமக்கு உணர்த்துகிறது. இதன் காரணமாகத்தான் இவை செம்மொழிகள் ஆயின. தமிழையும் இப்படித்தான் இன்று காணும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறோம்.

இத்தகைய பேருணர்வைத் தமிழிலக்கியக் கல்வியின் மூலம் நாம்

பெறவேண்டும். பெற முடியும். இந்தத் தொகுப்பில் உள்ள கட்டுரைகள் இத்தகைய பேருணர்வின் சில கீற்றுக்களையேனும் தமக்குள் கொண்டிருக்கின்றன. இவ்வகையில் தமிழ் இலக்கியத்தைக் கற்பதற்கு எனக்குப் பேருதவியாக இருந்த பலரையும் நான் இங்கு நினைவு கூர்கிறேன். என்றைக்கும் நான் ஒரு தமிழ் மாணவன் என்ற முறையில் நான் இவர்களிடமிருந்து எனக்கான பார்வையைப் பெற்றேன். இவர்களைக் குறித்து நான் விரிவாகச் சொல்லத்தான் விரும்புகிறேன் என்ற போதிலும் இந்த முன்னுரைக்குள் என் உணர்வுகளை அடக்கமுடியாது.

நெடுங்காலத் தமிழ் இலக்கியத்தை நம் காலத் தேவைகளுக்கு ஒத்த முறையில் வாசிக்கவேண்டும், பொருள்படுத்த வேண்டும் என்ற நோக்கில் நான் பல்வேறு சமயங்களில் எழுதிய கட்டுரைகள் இத் தொகுப்பில் இடம் பெறுகின்றன. நண்பர்களின் நூலுக்கு அணிந்துரைகள், இதழ்களில் இடம் பெற்ற கட்டுரைகள் என்ற ஒரு சிலவற்றைத் தவிர பெரும்பாலான கட்டுரைகள் இப்பொழுதுதான் நூல்உருவம் பெறுகின்றன.

என்னிடம் பேரன்பு கொண்ட நண்பர் திரு. காவ்யா சண்முகசுந்தரம் அவர்கள் இக்கட்டுரைத் தொகுப்பை மிகுந்த விருப்பத்தோடு வெளியிடுவதற்காக அவருக்கு என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஒளி அச்சு செய்வதில் எனக்குப் பேருதவியாக இருந்தவர் கோவை மயூரா அச்சக உரிமையாளர் திரு. ரத்தினசாமி அவர்கள். அச்சுப் படிகளில் பிழைத் திருத்தம் செய்வதில் எனக்கு உதவி செய்தவர்கள் நண்பர் திரு.ராஜசேகர், திரு. ஜவஹர் மற்றும் செல்வி. தேவி முதலியவர்கள். இவர்கள் அனைவருக்கும் என் நன்றிகள் உரியவை.

– ஞானி

## உள்ளடக்கம்

# பதிப்புரை

ஞானி அவர்கள் காவ்யாவின் வளர்ச்சிக்காகத் தொடர்ந்து ஆதரவு தந்து வருகிறார். அவரது நூல்களின் வரிசையில் இது எட்டாவது நூல். அடுத்த ஆண்டு அவரது கட்டுரைகளின் மொத்தத் தொகுதியைக் கொண்டு வருவதாக எண்ணம்.

இவரது சமீபத்திய 19 கட்டுரைகளின் தொகுப்பு இது. இவரது திறனாய்வு குறிப்பிடத் தகுந்தது. 'தமிழ் வாழ்வியல்' பற்றி தனிச் சிறப்பு மிக்க நூல் இது.

ஞானி அவர்களுக்கு எங்கள் நன்றி.

**காவ்யா சண்முகசுந்தரம்.**

# தமிழ்முனிவர் தெ.பொ.மீ

பேராசிரியர் தெ.பொ.மீ. அவர்கள் 1901-ல் பிறந்தார். 1980-ல் மறைந்தார். தமிழிலக்கிய ஆய்வில் பெரும் சாதனையாளராகத் திகழ்ந்த தெ.பொ.மீ. அவர்களின் நூற்றாண்டு விழா தற்பொழுது நடைபெறுவது சாலவும் பொருத்தமாகிறது. தெ.பொ.மீ. அவர்களின் குடும்பச் சூழல் அவர் தமிழில் ஊறித் திளைப்பதற்குக் காரணமாக இருக்கிறது. தன் பாட்டனார், தந்தையார் ஆகியவர் தமிழிலும், சைவ சமயத்திலும் தோய்ந்தவர்கள். வடிவேலுச் செட்டியார் என்ற தமிழறிஞரிடம் தெ.பொ.மீ. தமிழும், சைவமும் கற்றவர். வழக்கறிஞராகத் தான் தன் வாழ்வை அவர் தொடங்கினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குச் சென்றார். அங்கு மொழியியல் துறையைத் தோற்றுவித்தார். இறுதி வரை தமிழாய்வில் தன் முழு ஈடுபாடு கொண்டிருந்தார். பல மொழிகளில் தேர்ந்த பயிற்சியுடையவர் தெ.பொ.மீ. வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களும் அவரை அழைத்து, அவர் ஆய்வுப் பணியைச் சிறப்பித்தன. சமயமும், தமிழும் அவருக்குள் ஒன்றாய்க் கலந்திருந்தன. தமிழ் இலக்கிய ஆய்வு என்ற முறையில் அவரது தன்னிகரற்ற பெரும் பணியை தமிழ் ஆர்வலர்கள் என்றும் மதித்து போற்றுவர் என்பதில் ஐயமில்லை.

தெ.பொ.மீ. அவர்கள் பேராசிரியராக பணியாற்றிய காலத்தில் அவரைப் போலவே டாக்டர். மு.வ, தேவநேயப் பாவாணர், வ.சு.ப. மாணிக்கம், இலக்குவனார் போன்ற ஆற்றல் மிகுந்த பேராசிரியர்கள் தமிழ் ஆய்வில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர். மறைமலை அடிகள், சோமசுந்தர பாரதியார், திரு.வி.க., மு.இராகவ அய்யங்கார் முதலியவர்களின் தமிழாய்வுத் தடங்களும் தெ.பொ.மீ. அவர்களுக்குள் உடன்பாட்டு முறையிலோ எதிர்மறை முறையிலோ ஆழமான பதிவினை ஏற்படுத்தியிருக்க வேண்டும். 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் தமிழ் இலக்கியம், இலக்கணம் ஆகியவற்றின் வழியே தமிழ் பெற்ற பெருமிதம் இவர்கள் அனைவரையும் ஊடுருவி இருந்தது. தமிழின் பொற்காலம் என இந்த நூற்றாண்டின் இடைக் காலத்தை நாம் குறிப்பிட முடியும். இவர்களோடு பெரியார், காமராசர், அண்ணா முதலியவர்களையும் நாம் சேர்த்துப் பார்க்க முடியும். இவர்கள் மேதைகள் இவர்கள் மாமனிதர்கள். இந்திய தேசியமும், தமிழ்த் தேசியமும் என எவ்வளவோ ஆற்றல் மிகுந்த இயக்கங்கள் இவர்களுக்குள் இயங்கின. கா. அப்பாதுரையார், ம.பொ. சிவஞானம் முதலியவர்களும்

இவர்களோடு சேர்த்து எண்ணத்தக்கவர்கள். அவர்களின் தமிழ் இயக்கத்தை நாம் மதிப்பிட வேண்டியிருக்கிறது. இவர்கள் ஒவ்வொருவரும் தமக்குள் ஆற்றல் மிகுந்த தனித்தன்மைகளைக் கொண்டிருந்தார்கள். இவர்களில் பலருக்குள் சம காலத்து அரசியல் இயக்கங்களின் தாக்கங்களும் இருந்தன. மேலும் ஒன்றை இங்கு குறிப்பிட வேண்டும். அரசியல் இயக்கங்களுக்கு இடையில் இருந்த முரண்பாடுகளையும் இவர்களுக்குள் காண முடியும். இவர்களின் தமிழ் ஆய்வினுள்ளும் இந்த முரண்பாடுகள தம் பதிவுகளை விட்டுச் சென்றுள்ளன. இன்று வரை இவை குறித்த விவாதங்களுக்கு இடம் இருக்கத்தான் செய்கின்றது. தமிழின் ஆய்வியக்கம் தளர்ந்து சுருங்கிய இன்றைய நிலையில் எல்லாவற்றையும் ஒரு மறு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது. குறிப்பாக இங்கு தெ.பொ.மீ. அவர்களின் ஆய்வுகள் குறித்துச் சிலவற்றைச் சொல்லலாம். தெ.பொ.மீ. யின் கருத்தியல் பள்ளி என இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிற அவரது மாணவர்கள் சிலரை இங்கு குறிப்பிட முடியும். இவர்களுள் முதல்வரென எண்ணத்தக்கவர் அ.ச. ஞான சம்பந்தம் அவர்கள். தெ.பொ.மீ. யின் வாழ்வியல் விவரங்களோடு அவரது ஆய்வையும் இணைத்துப் பல நூற்றுக்கணக்கான விவரங்களை ஆதாரங்களோடு திரட்டி வைத்திருப்பவர் பேராசிரியர் குழந்தை வேலு அவர்கள். இந்த விவரங்கள் தனி நூலாக வெளிவர வேண்டும். தெ.பொ.மீ.யின் ஆய்வுகள் குறித்து இதுவரை வெளியான நூல்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது பேராசிரியர் பா. மருதநாயகம் (புதுவை) அவர்களின் ஆய்வு நூல். தெ.பொ.மீ. அவர்களின் ஆய்வு நூல் இன்றைய சூழலில் திறனாய்வோடு கற்கத் தகுந்தது.

தமிழில் தெ.பொ.மீ. அவர்களை பெரிதும் கவர்ந்தவை என முதன்மையாக சிலப்பதிகாரத்தையும் அடுத்தபடியாக சங்க இலக்கியங்களையும் குறிப்பிட வேண்டும். திருக்குறள் தெ.பொ.மீ. யின் நெஞ்சில் நீங்கா இடம்பெற்ற நூல். கம்பரது இராமாயணம் இன்று தமிழ் இலக்கியத்தின் உச்சங்களில் ஒன்று என போற்றப்பட்டாலும் தெ.பொ.மீ.யிடம் கம்பரது காவியம் சிலப்பதிகாரத்திற்கு நிகரானது என இடம் பெறவில்லை. பக்தி, இலக்கியம் குறித்த ஆய்வுகளில் அவர் எப்பொழுதும் தோய்ந்திருந்தார். திருஞானசம்பந்தர் சமணர்களை கழுவில் ஏற்றியதாகச் சொல்லப்படுவது அவருக்கு உடன்பாடில்லை. எரிபத்த நாயனார் வன்முறையாளராகத் தொடக்கத்தில் தோன்றிய பொழுதிலும் இறுதியில் அவர் தன் வன்முறையைக் கைவிட்டு

அருளாளர் ஆகிறார். இத்தகைய ஆய்வுகளில் தெ.பொ.மீ.யிடம் இடம் பெற்றிருந்த காந்தியத் தாக்கத்தை நாம் காண முடியும். திருக்குறளுக்கு மனு தர்மம் சார்ந்து பரிமேழலகர் எழுதிய உரையை அவர் சிறிதளவும் ஏற்கவில்லை. சங்க இலக்கியத்தை வீரயுகப் பாடல்கள் என்ற கைலாசபதி அவர்களின் ஆய்வு அவருக்கு உடன்பாடில்லை. வள்ளுவரின் பெண்ணியம் குறித்த பார்வையை பெரியார் முதலியவர்கள் கடுமையாகக் குறை கூறிய பொழுது வள்ளுவர் பெண்மையை பெரிதும் போற்றினார் என்று தெ.பொ.மீ. எழுதினார். தமிழ் இலக்கிய ஆய்வில் அவர் தொடாத பகுதி இல்லை. சமகாலத் தமிழ் இலக்கியம் குறித்தும் அவர் தொடர்ந்து படித்தார். ஆங்கிலம் முதலிய மேற்கத்திய மொழிகளிலிருந்து தமிழ் ஆய்வுக்குத் தேவையான திறனாய்வுக் கருத்துக்களைத் தொடர்ந்து அவர் திரட்டிக் கொண்டார். டி.எஸ். எலியட் முதலியவர்களை அவர் போற்றினார். தமது முந்திய தலைமுறையினரின் ஆய்வுகளிலிருந்து தமக்கான திறனாய்வு நோக்கில் தமிழை விடுவித்ததோடு, தமிழை மேம்படுத்தவும் செய்தார்.

தமிழகச் சூழலில் ஆரியமும், திராவிடமும் தமக்குள் கடுமையான எதிர் நிலைகளில் ஊன்றி இருந்த சூழலில் தெ.பொ.மீ. அவர்களைப் பொறுத்தவரை இரண்டு பெரும் நாகரீகங்களும் தமக்குள் கலந்து, கரைத்து விட்டதைத் தொடர்ந்து எடுத்துரைத்தார். காங்கிரஸ் இயக்கத்தில் இருந்து ஒரு கட்டத்தில் அவர் தன்னை விடுவித்துக் கொண்ட போதிலும் இறுதி வரை காந்தியத்தை போற்றுபவராக இருந்தார். ம.பொ.சி. அவர்களோடு தமிழ்த் தேசியம் என்ற உணர்வில் ஒன்றியிருந்தார். தெ.பொ.மீ. அவர்களுக்குள் இடம்பெற்ற இந்திய தேசியமும், தமிழ்த் தேசியமும தமக்குள் முரண்படவில்லை. தொடக்கத்தில் சைவ சார்புடையவராக தெ.பொ.மீ. அவர்கள் இருந்தார். எனினும், அவரிடம் சமயக் காழ்ப்பை அறவே காண முடியாது. சமயம் என்ற வகையில் அவருக்குள் தொடர்ந்து வளர்ச்சி பெற்றது, எல்லாச் சமயங்களையும் தனக்குள் இணைத்துக் கொள்கிற சன்மார்க்க நெறி என்று தான் சொல்ல முடியும். இறுதிக் காலத்தில் அவரிடம் பெரிதும் செயல்பட்ட ஆழ்நிலை தியானம் பற்றி இங்கு குறிப்பிடுவது பொருந்தும். இவருக்குள் செயல்பட்டது குறிப்பிட்ட ஒரு சமயம் அல்ல. சமயங்களுக்குள் இடம்பெரும் சமயத்தன்மை. இதற்காக தெ.பொ.மீ. அவர்களைக் குறை சொல்ல முடியாது. தமிழ் இலக்கியத்தில் வேரோடு இருக்கிற ஒருவர் சமயத்தன்மை என்ற பொதுத் தன்மையிலிருந்து விலகி விடவும் முடியாது.

இலக்கிய ஆய்வை முதலில் ரசனை உணர்வோடு தொடங்கும் தெ.பொ.மீ. அவர்கள் தொடர்ந்து குறிப்பிட்ட இலக்கியத்தின் அறிவுத் தளத்தை ஆராய்கிறார். இறுதியில் குறிப்பிட்ட இலக்கியத்தின் உணர்வு நிலைக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறார். தமிழ் இலக்கிய ஆய்வென்பது அவருக்குள் இறுதியில் ஓர் பேருணர்வாக, பரவசமாக, கடவுட் காட்சியாகத் தென்பட்டது. இவ்வகையில் அவர் தமிழை வழிபட்டார் என்று சொல்ல முடியும். இலக்கிய ஆய்வின் வழியே இவர் இறைமையை தரிசித்தார். ஒரு இலக்கியத்தின் மையம் என அவர் கண்டது இத்தகைய இடங்களைத்தான். இதைத் தான் அவர் உயர்நிலைப்பாட்டு என்று குறிப்பிடுகிறார்.

சிலப்பதிகாரத்தில் அடைக்கலக் காதையும், கம்பராமாயணத்தில் சுந்தரகாண்டமும் இத்தகைய உயர் நிலைகள். கானல் வரி தெ.பொ.மீ. அவர்களின் ஆய்வு இங்கு குறிப்பிடத்தக்கது. கோவலன் கானல் வரிப் பாடலில் கண்ணகியோடு தான் கொண்டிருந்த களவுக் காலத்து உணர்வுகளைத் தான் சிறப்பித்துப் பாடினான் என்று தெ.பொ.மீ. அவர்கள் கூறுவது அவர் வலிந்து மேற்கொள்ளும் கருத்தாகத் தான் நமக்குத் தென்படுகிறது. எனினும் தெ.பொ.மீ. அவர்களின் இலக்கியம் குறித்த பார்வை இந்த ஆய்வில் உச்சநிலைக்குச் செல்கிறது. எல்லா மனிதர்களும் தம் வாழ்வியல் நெருக்கடிகளிலிருந்து முயன்று தம்மை மீட்டுக் கொள்ளும் நிலையில், தமக்குள் தெய்வத் தன்மை பெறுகிறார். அதாவது தெய்வ நிலைக்கு அவர்கள் உயர்கிறார்கள். கண்ணகி இவ்வாறு தெய்வ நிலை பெற்றாள் என்பதை நாம் உடனடியாக ஒப்புக் கொள்கிறோம்.

மாதவியும், தன் முன்னைய வாழ்வின் கசப்பான அனுபவங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதை நாம் புரிந்து கொள்கிறோம். கோவலனும் இவ்வாறு விடுதலை பெற்றான் என்று தெ.பொ.மீ. சொல்வது நமக்குள் கேள்விக்குறியாய் எஞ்சுகிறது. சிலப்பதிகாரப் பாத்திரங்களை இவ்வாறு தமக்குள் மேன்மைப்படுத்திக் கொள்கிறார். தெ.பொ.மீ. இலக்கியத்தினுள் கடவுள் காட்சி என்ற பார்வைக்குள் தெ.பொ.மீ. வசப்பட்டிருக்கிறார். கடவுட் காட்சி, தெய்வீகம் என்ற உணர்வு நிலைக்குள் தன்னைச் செரித்துக் கொண்ட தெ.பொ.மீ. அவர்களிடம் நம்மால் குறை காண முடியாது. எந்த இலக்கியத்தையும் ஒரு வாசகன் அல்லது திறனாய்வாளன் என்பவன் இவ்வாறு தனக்குள் புதிய பொருளோடு வாசிப்பதை நாம் மறுப்பதற்கில்லை.

திருக்குறள் பற்றிய ஆய்வில் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பாலினுள்ளும் அறமே அடிப்படையாக விளங்குகிறது என்று ஆழ்ந்த பொருள் காணும் தெ.பொ.மீ. அவர்கள் காமத்து பாலினுள்ளும் கடவுட் காட்சியைக் காணுகிறார். மகான் அரவிந்தரின் கவிதைக் கோட்பாட்டில் உள்ளம் தோய்ந்திருந்தவர். தெ.பொ.மீ. தூய உணர்வு (Super mind) என்ற பேருணர்வு மனிதனுக்குள் அவனது தியானத்தின் வழியே கீழ் இறங்கி வந்து அவனை முழுமையாக ஆட்கொள்ளும் பொழுது அவன் காணும் பெரும் காட்சி குறித்து அரவிந்தர் விரிவாகப் பேசுகிறார். மனிதனது அறிவுத் தளத்தைக் கடந்து இயங்குவது இந்தத் தூய உணர்வு மனம். அரவிந்தரது கவிதைக் கோட்பாட்டை தமிழ் இலக்கிய ஆய்வுக்கு தெ.பொ.மீ. பயன்படுத்துகிறார்.

சங்க இலக்கியத்தில் தலைவனைப் பிரிந்த நிலையில் தலைவியின் சோகம், இரவில் வரும் இருளை பெரும் வெள்ளமெனக் காண்கிறது பிரபஞ்சத்தையே மூழ்கடிக்கிறது இந்தப் பெரு வெள்ளம். இந்த வெள்ளத்தினுள், தான் காணாமல் போவது போன்ற உணர்வைப் பெறுகிறாள். செம்புலப் பெயல் நீர் போல என்பதனுள்ளும் இத்தகைய பேருணர்வை கவிஞன் வெளிப்படுத்தியுள்ளான் என்று காண்கிறார். தெ.பொ.மீ. இலக்கியம் என்பதைச் சுவைஉணர்வு என்ற தளத்திலிருந்து அறிவு தளத்தில் உயர்த்திப் பிறகு பேருணர்வுத் தளர்த்திற்குள் வாசகன் தன்னைக் கரைத்துக் கொள்வதாகிய கடவுள் நிலை என்ற தெ.பொ.மீ.யின் கவிதைக் கோட்பாட்டை இங்கு காண்கிறோம். இங்கும் தெ.பொ.மீ.யின் சன்மார்க்க நெறி தான் வெளிப்படுகிறது.

சமயத்தையோ அல்லது தியானத்தின் மூலம் மனிதன் தனக்குள் கொள்வதாகிய பேருணர்வையோ மறுப்பவர்களால் தெ.பொ.மீ.யை புரிந்து கொள்ள இயலாது. திராவிட இயக்கத்தாரும், தனித் தமிழ் இயக்கத்தாரும் தெ.பொ.மீயை இறுதி வரை சாடினர். அவர் காங்கிரஸ் இயக்கத்தில் இருந்திருக்கிறார். காங்கிரஸ் இயக்கத்தை விட்டு வெளியேறிய நிலையிலும் காந்தியத்தைக் கொண்டிருந்தார். மாநிலக் கல்லூரிக்கு இராஜாஜி அவரை அழைத்துக் கொண்டார். மொழியியல் ஆய்வைப் பொறுத்த வரை தெ.பொ.மீ. அவர்களின் ஆய்வும் பாவாணர் அவர்களின் ஆய்வும் எதிர் திசையில் இயங்கக் கூடியவை. தமிழின் தொன்மையை தெ.பொ.மீ. மறுக்கவில்லை.

கம்பர் காவியத்தை தீயிட்டு எரிக்க வேண்டும் என்று திராவிட இயக்கத்தார் கிளர்ச்சி செய்த பொழுது தெ.பொ.மீ. மவுனம்

சாதித்தார். தெ.பொ.மீ யின் இலக்கியப் பார்வையைத் திராவிட இயக்கத்தாரால் ஏற்க முடியாது. மதம் பற்றிய பார்வையில் முற்றான எதிர்நிலை கொண்ட பெரியாரியர் இதன் காரணமாகவே பாரதிதாசனின் ஒரு கடவுள் உண்டு என்ற கருத்தைக் கடுமையாகக் குறை சொல்லத் தயங்கவில்லை. சமணரை ஞானசம்பந்தர் கழுவில் ஏற்றவில்லை என்ற தெ.பொ.மீ யின் கருத்தை ஏற்கவும் முடியாது. அரசு ஆதரவு பெற்றவர் தெ.பொ.மீ. பல்கலைக் கழகங்கள் முதலியவற்றில் பெரும் செல்வாக்குப் பெற்றவர். தெ.பொ.மீ. இலக்கியத்தினுள் நடைபெறும் அரசியல் குறித்து இங்கு நாம் அதிகம் பேசுகிறோம். எல்லாக் காலத்திலும் இப்படி ஒரு அரசியல் நடைபெற்றது என்பதை நாம் மறுப்பதற்கில்லை. தீவிரவாதம் மனிதர்களைக் கழுவில் ஏற்றுகிறது. இவ்வாறு தெ.பொ.மீ அவர்களும் கழுவில் ஏற்றப்பட்டார் என்பது இன்றும் நமக்கு வருத்தம் தருகிறது. தன்னை சுயவிமர்சனத்திற்குத் திராவிட இயக்கம் ஆட்படுத்திக் கொள்ளும் பொழுது தெ.பொ.மீ. அவர்களை இவர்கள் விடுதலை செய்ய இயலும். இலக்கியப் பார்வை என்பதை ஆன்மீகத் தளத்திற்கு உயர்த்திக் காண்பது குறித்தும் நாம் சிந்திக்க வேண்டும். தமிழ் இலக்கியம் முழுவதையும் சன்மார்க்கம் என்ற வழியில் ஒருமுகப்படுத்தி தெ.பொ.மீ. அவர்கள் பார்த்தார். மனிதனுக்குள் தழைக்கும் அன்பு தமிழிலக்கியத்தை ஒருமுகப்படுத்துகிறது. சிலப்பதிகாரத்தின் இறுதியில் சேரன் செங்குட்டுவனுக்கு மாடலமறையோன் அருளுரை கூறுகிறான். வன்முறையைக் கைவிட்டு அருள் நெறியை மேற்கொள்கிறான் செங்குட்டுவன். பத்துப்பாட்டின் இறுதிக் கவிதையாகிய மதுரைக் காஞ்சியும் இந்த அருளுணர்வு குறித்து ஆழ்ந்து பேசுகிறது. சங்க இலக்கியத்தில் ஆட்சி புரியும் இந்த அன்பு நெறிதான் வள்ளுவரின் அறமாகவும், பக்தி இலக்கியத்தில் இறைமையாகவும் பொலிவு பெறுகிறது. இந்தப் பேருணர்வில் தான் தமிழ் இலக்கியத்தை மையப்படுத்துகிறார் தெ.பொ.மீ. இத்தகைய ஆய்வு நெறியை நாம் மறுப்பதற்கில்லை. தமிழ் இலக்கிய ஆய்வுக்கு ஓர் ஆழமான திறனாய்வு நெறியைத் தந்தவர் என்ற முறையில் தெ.பொ.மீ. என்றும் நம் மரியாதைக்குரியவர். தமிழ் இலக்கணம், இலக்கியம், வரலாறு, மெய்யியல், மொழியியல் முதலிய எல்லாக் களங்களையும் தனக்குள் இணைத்துக் கொண்டதோடும், எல்லாவற்றினுள்ளிருந்தும் புதிய ஒளியைக் கண்டவர் தெ.பொ.மீ. இவர் ஒரு மேதை என்பதில் ஐயமில்லை.

*23–2–2000*

# பேராசிரியர் சாலை – சாலினியார் தமிழ் வாழ்வு

1

மறத்திற்கும் அறமே துணை என்பது வள்ளுவர் கருத்து. வீரமுடையவன்தான் அன்பு செய்வதிலும் அறத்தைக் கடைப் பிடிப்பதிலும் உறுதியாக இருக்க முடியும். கோழைக்கு அன்பு தெரியாது. அவனால் அறத்தைக் கடைப்பிடிக்க இயலாது.

பேராசிரியர் சாலையார் அவர்கள் அறத்தைக் கடைப்பிடிப்பதில் உறுதியாக இருந்தார். தமிழ்த்துறையில் பெரியவர்கள் என்று மதிக்கப் பட்டவர்களோடு நியாயமாகவே முரண்பட்டார். தேவையானவர்களுக் கெல்லாம் உதவி செய்வதில் அவர் என்றும் பின்வாங்கவில்லை. உறவினர்களை ஆதரிப்பதில் உறுதியாக இருந்தார். தன்னிடம் பணிபுரியும் ஊழியர்களுக்குத் தாயும், தந்தையுமாக இருந்து எல்லாவற்றையும் செய்தார். ஆதரவு இழந்து வருந்துபவர்களுக்குக் கைம்மாறு கருதாமல் உதவி செய்தார். அறநெறியில் உறுதியும் மனத்தில் தெளிவுமில்லாமல் இவற்றையெல்லாம் செய்திருக்க முடியாது. 'ஊழி பெயரினும் தாம் பெயரார்' என்று சாற்றோருக்கு வள்ளுவர் வகுத்த இலக்கணத்திற்குச் சான்றாகத் திகழ்ந்தார்.

இத்தகைய பெரு வீரத்தை அவர் எங்கிருந்து பெற்றார். இந்தக் கருணையை அவர் எப்படிப் பெற்றார். இவர் தன் பாட்டனாரிடமிருந்தும் தந்தையிடமிருந்தும் இந்த வீரத்தையும் கருணையையும் பெற்றார். குடும்பசூழல் ஒரு முக்கியமான களம் என்பதோடு பிறந்த குலம் இன்னொரு வலுவான காரணம். அடித்தள மக்களோடு இவரது இறுக்கமான உறவுக்கும் தளராத உழைப்பிற்கும் எல்லாவற்றையும் எல்லாரோடும் பகிர்ந்து கொள்ளும் பண்பாட்டிற்கும் இவரது குலப்பிறப்புதான் அடிப்படையான காரணம். வாழ்க்கை வசதிகளோடு பிறந்தவர்களுக்கு மனஉறுதி வாய்ப்பது அரிது. வசதியில் குறைந்தவர்களுக்கு மனஉறுதியில்லாமல் முடியாது. மற்றபடி இதுவும் ஒரு தனித்திறன்தான். தன்னை மதிப்பதாகிய தன்மானத்தின் விளைவு இந்த உறுதி. இவ்வகையில் இறுதிவரை இவர் வீரத்துடன் வாழ்ந்திருக்கிறார். இந்த நெடுமரம் நேராகவும் உறுதியாகவும் வளர்வற்கும் நிமிர்ந்து நிற்பதற்கும் இன்றியமையாத இன்னொரு ஆதாரம் இவருக்கென வாய்த்த துணைவியார் சாலினி அவர்கள்.

தமிழ்மரபின் மேன்மைக்கு இவர் ஒரு அற்புதமான சான்று. 'சொக்கன் கதை' இவற்றையெல்லாம் சொல்லுகிறது.

2.

சாலை இளந்திரையன் அவர்கள் தமிழ்ப்பேராசிரியராய்ப் பணிபுரிந்தார். இப்படிச் சொல்லுவது அவரை அடையாளம் கண்டு சொல்லுவது ஆகாது. தமிழியக்கத்தை முன்னெடுத்துச் செல்பவன் தமிழ்ப் பேராசிரியன். இவன் தமிழை வைத்துப் பிழைக்க மாட்டான். தமிழின் ஆற்றலை இவன்தெரிந்தவன். காலந்தோறும் வளர்ந்துவரும் தமிழை நம் காலத்திற்கு உரியதாகப் புதுப்பிப்பதோடு நம் காலத்திற்குரியதாக வளர்தெடுப்பவன் தமிழ்ப் பேராசிரியன். தமிழ் இவனுக்கு முதன்னைமயானது. தமிழ்மக்கள் இவனுக்கு முதன்மையானவர்கள்.

சாதி மதங்களை வலுப்படுத்த தமிழைப்பயன்படுத்தக்கூடாது. சமத்துவத்தை வலுப்படுத்த தமிழைப்பயன்படுத்தவேண்டும். சமதருமத்தை நோக்கி மக்களை இயங்கச் செய்யத்தமிழைப் பயன்படுத்தவேண்டும். தமிழுக்கு இத்தகைய ஆற்றல் உண்டு. தமிழைக் காட்டிலும் தனக்கு, தன் சாதியாருக்கு, தம்மைச்சார்ந்தவர்களுக்கு முதன்மை தருபவன் தமிழறிஞானாக இருக்க முடியாது. தமிழின் வளர்ச்சிக்கு யார்யாரெல்லாம் தடையாய் இருக்கிறார்களோ அவரைத் தகர்த்துத் தமிழை முன்னோக்கித் தாங்கிச் செல்பவன் தமிழறிஞன். தமிழ் என்பது உயர்சாதியினர் பக்கத்தில் ஒதுங்கும் போது தமிழ் மேன்மை பெறும் என்று சொல்ல முடியாது. தமிழை அடித்தள மக்களுக்கு நெருக்கமாகக் கொண்டு செல்ல வேண்டும். மக்களிடம் பழகு தமிழ்தான் உயிரோடு உயிரியக்கத்தோடு இயங்கும் தமிழ். இந்தத் தமிழைக் கண்டு கொள்ள வேண்டும்.

தமிழியக்கத்தில் ஒரு தமிழறிஞர் தன்னைக் கரைத்துக் கொள்வதென்றால் என்ன பொருள்? கல்லூரி வளாகத்தினுள் இவர் முடங்கியிருந்தால் தமிழியக்கம் வளருமா? கல்லூரி வளாகத்தினுள்ளும் இவர் செய்ய வேண்டிய பணிகள் என்ன? கல்லூரி வளாகத்தின் வெளியே இவரது கடமை என்ன? மக்கள் அறியாமையிலும் மூடத்தனத்திலும் முடங்கியிருப்பது அவருக்குச் சம்மதமாக இருக்க முடியுமா? இவரது மனிதநேயம் எங்கெல்லாம் விரிந்துசெல்ல வேண்டும். உலகளவிற்கு இவரது நேயம் விரிய வேண்டாமா?

இவர் கைக்கு வந்துசேரும் வருமானம் முற்றிலும் இவருக்கு உரிமையுடையதுதானா? இவரை என்ன செய்யலாம். வெளியில் நடைபெறும் அறிவியக்கத்தோடு, விடுதலை இயக்கத்தோடு இவர் தன்னை இணைத்துக்கொள்ள வேண்டாமா? இறுதியில் இவரே தனக்குள் ஓர் இயக்கமாகச் செயல்பட வேண்டாமா?

இவர் கவிஞனாக இருக்க வேண்டும். சிறுகதை, நாவல் என்று எழுதிப்பார்க்க வேண்டும். இவர் திறனாய்வாளராக இருக்கவேண்டும். இப்படியெல்லாம் தனக்குள் விரிவு கொள்பவர் தமிழறிஞர். இப்படியெல்லாம் சொல்வதற்குச் சான்றாகத் திகழ்ந்தவர் எத்தனையோ தமிழறிஞர்கள். இவர்களின் வரிசையில் ஆற்றல்மிக்க வேழம் எனத் திகழ்ந்தவர் சாலை இளந்திரையன். இவரது எழுத்துக்களும் செயல்களும் இந்த உண்மையை மெய்ப்பிக்கின்றன. 'சாலையாரின் பிளிறல்' என்ற நூல் சாலையாரின் சிந்தனைத்திறத்தை நமக்கு எடுத்துச் சொல்லுகிறது.

3.

**சா**லையாரின் வாழ்வும் சிந்தனையும் குறித்துத் திறனாய்வு என்ற முறையில் இங்குச் சிலவற்றைக் கூறலாம்.

8ஆம் வயதில் கண்டம் என்று சோதிடர் கூறியது அவர் உயிருக்கு ஆபத்து என்ற அளவில் செயல்பட்டது என்பது உண்மைதான். தந்தையும் மகனும் இதில் பாதிக்கப்பட்டார்கள். சோதிடர் கூறியபடி உயிரிழப்பு நேரவில்லை என்பதனாலேயே சோதிடர் கூற்று முற்றிலும் பொய் என்றாகவில்லை. சோதிடம் ஆய்வுக்குரியது என்பதைத் தான் இங்கு சாலையார் பார்த்திருக்க வேண்டும். இதேபோல பிறர் பொருட்டுத் தான் பெரும்செலவு செய்ய நேர்ந்தபொழுதெல்லாம் எங்கிருந்தோ முன்பு வரவேண்டிய தொகை தங்களுக்கு வந்து சேர்ந்ததென்று குறிப்பிடுவார். இப்படி நேருவது குறித்துச் சாலையார் வியப்படைந்தது போலவே நாமும் வியக்கிறோம். இது குறித்து நாம் சொல்லுவதற்கு எதுவுமில்லை. சமய நம்பிக்கை மிக்கவர் இவ்வகைச் செயல்பாடுகளுக்குள்ளே இறைவனையோ வேறொன்றையோ காண்பார்கள்.

சாலையாருக்கு இறை நம்பிக்கை இல்லை. காலத்தின் தேவையை ஒட்டிச் சாதியும், மதமும் அவை தோன்றிய காலத்தில் நலம் விளைத்திருக்கலாம். இன்று இவை தேவையில்லை என்ற சாலையார்

கருத்தினுள் பகுத்தறிவைக் காணமுடியும். இதற்குமேல் மதம் குறித்து அவர் ஆய்வு செய்யவில்லை. பாரதிதாசனைப் பொறுத்தவரை, இறைவன் உண்டா? இல்லையா? என்ற கவலை எனக்கில்லை என்றார். இறைவனைப் பற்றிய ஆய்வை ஒதுக்கிய நிலையில் தமிழ் இலக்கிய ஆய்வை நம்மால் சரிவரச் செய்யஇயலாது. கற்பை வற்புறுத்தியதன் மூலம் சமுதாயத்தில் பெண் பெறவேண்டிய இடத்தை மதம் பெண்ணுக்குத் தரவில்லை. சமணமோ சைவமோ இவ்வகையில் வேறுபடவில்லை என்று சாலையார் குறிப்பிடுவது ஏற்கத்தக்கதுதான். சமுதாயத்தில் பெண்ணுக்கு இருக்கவேண்டிய இடம் மறுக்கப்பட்டது குறித்து இன்னும் ஆழமான ஆய்வு தேவை.

சாலினியார் பிறந்து வளர்ந்த குடும்பச்சூழலில் சமயத்தின் தாக்கம் மிகுதி. அவர் தாயார் சிவகாமி அம்மையார் சமய அமைப்புக்களைச் சிறப்பாக நிர்வாகம் செய்தவர். சாலினியாரும் சமய இலக்கியங்களில் ஈடுபாடு மிக்கவராக இருந்தவர். சாலையாரைத் திருமணம் செய்து கொண்ட பிறகு தன் இறைநம்பிக்கையை மெல்லமெல்லக் கை விடுகிறார். இது எவ்வாறு சாத்தியமாயிற்று என்பது பற்றி சாலையாரோ, சாலினியாரோ விரிவாக எழுதினரா என்பது தெரியவில்லை. மணிமேகலையின் தவத்தைச் சாலினியார் பாராட்டுகிறார். மணிமேகலையின் வாழ்வைக் 'கருகிய மொட்டு' என்று மூத்த மாணவர் குறைசொன்ன பொழுது மணிமேகலையின் வாழ்வு 'வாடாமலர்' என்று ஆய்வு செய்தார் சாலினியார். சாலினியாரின் அண்ணியார் சமயநம்பிக்கையில் தோய்ந்தவர். சாலையார் குடும்பச்சூழலில் எவ்வகைக் கசப்புணர்வும் இல்லாமல் அந்த அண்ணியார் தேவையான எல்லாவற்றையும் செய்தார். இதன் சாத்தியம் குறித்து இவர்கள் ஆய்ந்திருக்கவேண்டும்.

தெ.பொ.மீ., வ.சுப. மாணிக்கம், மு.வரதராசனார் முதலியவர்கள் தமிழின் ஆக்கத்திற்குப் பேரளவு பணிபுரிந்தவர்கள். இவர்களிடம் சாலையார் தாம் கண்ட சில குறைகளை எடுத்துரைக்கிறார். தெ.பொ.மீ. தனக்கு வேண்டிய மாணவர்களை உயர்பதவிக்குப் பரிந்துரை செய்தார். மு.வ.வை முதலியார் என்றே விடாப்பிடியாகக் குறிப் பிடுகிறார். மதுரைப்பல்கலைகழகத்தில் சாலையார் நுழையாமல் தந்திரமாக மு.வ. தடுத்தார். மு.வ.நிலத்தரகராகவும் இருந்தார். கலைஞர் எழுதிய சங்கஇலக்கியம் குறித்த நூலை பெரிதாகப் பாராட்டினார் வ.சுப. மாணிக்கம் கலைஞர் ஏதாவது

தனக்குச் செய்வார் என்று நம்பித்தான் இப்படி அவர் பாராட்டினார். மு.வ முதலியவர்களின் சாதிப்பற்றைச் சாலையார் குறைசொல்லுகிறார். இதே குறையைச் சுந்தரவடிவேலு முதலியவர்களிடமும் காண்கிறார். சென்னைப் பல்கலைக் கழகத்திலும் முதலியார் சாதிக்கே முக்கியத்துவம்.

இவ்வாறெல்லாம் சாலையார் குறைசொல்வதை வரவேற்கத்தான் வேண்டும். கலைஞர் குறித்து சாலையாரின் கடும்சினம் நம்மால் புரிந்துகொள்ளக்கூடியதுதான். சென்னையிலும், மதுரையிலும் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டின்போது ஆய்வுக்கருத்தரங்கின் உள்ளும் வெளியிலும் கழக அரசின் போக்கைச் சாலையார் கடுமையாகவே தாக்குகிறார். இவற்றிற்கெல்லாம் சாதியை மட்டுமே காரணம் சொல்ல முடியாது. ஆணவம், அறியாமை, பதவி, அதிகாரம் என்பனவற்றைக் கடந்தும் நாம் பார்க்கவேண்டும். தமிழ் வரலாற்றை அழிக்கும் வகையில் இவர்கள் தம்மை முன்னிலைப் படுத்திச் செயல்பட்டார்கள். தமிழுக்குத் தர வேண்டிய முதன்மையை இவர்கள் தரவில்லை. இது மட்டுமல்ல சாலையாரின் அறிவும், துணிவும் இவர்களை அதிர்விற்கு உள்ளாக்கியதையும் நாம் காணமுடியும்.

பார்ப்பனர் என்று சாலையார் அவ்வப்பொழுது சிலரைச் சாடுகிறார். ஆரியம் என்றோ திராவிடம் என்றோ வரிந்துகட்டிக் கொள்வதை சாலையார் ஏற்றுக்கொள்ளவில்லை. இவர் விரும்புவது உலகமானுடம். பாரதிதாசன் வழியே தமிழிலக்கியத்தில் வளர்ச்சிபெற்ற உலகமானுடம் என்ற பண்பாட்டை அதன் உச்ச அளவிற்குத் தனக்குள்ளும் கவிதையிலும் சாலையார் வளர்த்தெடுத்தார் என்பதில் ஐயமில்லை. பெரியாரைப் போற்றுவது போலவே காந்தியாரைச் சாலையார் போற்றினார். சாலையாரின் வீறு மகத்தானது. இத்தகைய வீறு மு.வ.விடம் இல்லை. தெ.பொ.மீயிடம் இல்லை.

சென்னையில் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாட்டின் போக்கைக் கண்டு வெறுத்து இந்தியப்பல்கலைக் கழகத் தமிழாசிரியர் பேரவையைச் சாலையார் முன்னின்று பிறரையும் இணைத்துக்கொண்டு தோற்றுவித்தார். பிரிதொரு சமயம் உலகப் பண்பாட்டு இயக்கத்தைத் தோற்றுவித்தார். தமிழ்ப்பகைவர்களுக்கு எதிராக இவர் வீறுடன் செயல்பட்ட தொடக்கநிலையில் இவருக்குக் கைகொடுக்க முடியாத பேராசிரியர்கள் பிறகு கிடைத்த பதவிகளில்

ஒட்டிக்கொண்டதோடு சாலையாரை ஒதுக்கவும்செய்தனர். இத்தகையவர்களிடம் அறத்தின் வீறு இல்லை. தன்னலம் துறக்கும் மனஉறுதி இவர்களுக்கு இல்லை. பணத்திற்கும், அதிகாரத்திற்கும் இவர்கள் நெஞ்சில் எப்போதும் இடமுண்டு. அரசதிகாரத்தை இவர்கள் எப்பொழுதும் மறுக்கமாட்டார்கள். இவர்களால் தமிழின் ஆக்கத்திறன் வளராது.

4.

**சாலையாரின் இலக்கியத் திறனாய்வு :**

தமிழில் பக்தி இலக்கியத்தைக் காட்டிலும் சங்க இலக்கியத்தின் மேன்மை குறித்துச் சிறப்பாக எழுதினார் சாலையார். சென்னை–உலகத் தமிழ் மாநாட்டின்போது சென்னை நகரில் அரசு நிறுத்திய சிலைகளை உருவ வழிபாடு என்றமுறையில் திறனாய்வு செய்தார். பல்லவர் மற்றும் சோழர் காலத்தில் தோன்றி வளர்ந்த சமயம் சார்ந்த இலக்கியத்திற்கும் உருவச் சிலைகள் முதலியவற்றிற்கும் தரப்பட்ட முக்கியத்துவத்தை மறுத்தார். தமிழ்ப் பண்பாட்டின் மேன்மையை சங்க இலக்கியத்தில் தான் காணமுடியும் என்று செறிவாக எழுதினார். சங்கச் சான்றோர் களிடமும் பெருமக்களிடமும் தழைத்திருந்த அறப்பண்புதான் தமிழ்ப் பண்பாட்டின் அடித்தளம் என்று எடுத்துரைக்கிறார் சாலையார். சங்க இலக்கியச் சான்றோர் பண்பாட்டினுள் சாலையார் தம்மையே காண்கிறார் என்று நாம் பெரும் மகிழ்ச்சியுடன் சொல்லமுடியும். அறமும், அன்பும் , அருளும், வீரமும் வேறுபாடில்லாமல் ஒன்றுபட்டு இயங்குவது தமிழர்பண்பாடு. வள்ளுவரிடத்தில் இப்பண்பாட்டின் வீச்சை நாம் உணரமுடியும். சாலையாரிடம் வீறுடன் விளங்கிய அறத்தையும், அருளையும் நாம் பலபடப் பாராட்டமுடியும்.

சாலையாரின் கவித்திறத்தின் மூலம் எது என்று ஆராய்ந்தால் பாரதியாரைக் காட்டிலும் பாரதிதாசனைச் சொல்வதுதான் பொருந்தும். தமிழினின் ஒரே கவிஞன் கனக சுப்புரத்தினம் என்று சாலையார் மதிப்பிட்டார். தமிழிலக்கியப் பரப்பு முழுவதையும் முன்வைத்து ஆராய்ந்து செய்த மதிப்பீடு என்று இதை நம்மால் சொல்லமுடியவில்லை. ஆனால் இன்றைய சூழலில் தமிழன் தனக்கான தேசத்தையும், விடுதலையையும் பெற பாரதிதாசனை முன்னிலைப்படுத்துவதில் சிறிதளவும் தவறில்லை. கவிஞர் என்ற

முறையில் பாரதிதாசன் இவரோடு பெரியார், மார்க்சியம் ஆகியவற்றை இணைத்துக் கொண்டாலொழிய தமிழன் தன் விடுதலையை இன்று சாதிக்க முடியாது. பெரியாரியத்திற்கோ மார்க்சியத்திற்கோ சாலையார் தன்னை கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை என்பதையும் நாம் இங்கு குறிப்பிடவேண்டும். சாலையாரின் வளர்ச்சியில் இந்த ஒருங்கிணைவு நேரவில்லை.

தொடக்கத்தில் சாலையார் கவிதைகள் எழுதினார். கவிதை இலக்கியம் புலவர்களுக்குரியது, படிப்பாளிகளுக்குரியது. இவ்வகைக் கவிதை இலக்கியம் பாமரர்களுக்குப் போய்ச் சேரவில்லை. குறைந்த அளவிற்கே படித்த அடித்தளமக்களுக்குப் போய்ச்சேரவில்லை. இந்த உண்மையில் தனக்குத் தெளிவு ஏற்பட்டபோது உரைவீச்சு என்ற புதிய இலக்கிய வகையைக் கண்டறிந்து எழுதினார் சாலையார். உரை வீச்சுகளின் வழியே தன் உள்ளக் கிடக்கைகளை சாலையார் மிக விரைவாக வெளிப்படுத்தினார். உரைவீச்சு என்ற வடிவத்தை மிகச்சிறப்பாகப் பயன்படுத்தியவர் சாலையார். மக்கள் நாயகத்தில் நம்பிக்கை கொண்ட சாலையார் மக்களை நோக்கி இலக்கியம் செல்வதற்கான வடிவத்தை கண்டறிந்ததில் வியப்பில்லை.

திரும்பத், திரும்ப இந்த உண்மையைச் சொல்லாம். தமிழ் இயக்கத்தின் ஆற்றல் மிக்க மறவர் சாலையார். சாலையாருக்குள்ளிருந்து ஒரு ஒருங்கிணைந்த தமிழியக்கத்தை வளர்ப்பது நம் கடமை. தமிழறிஞர்கள் என்றும் தமிழ்ப் பேராசிரியர்கள் என்றும் தமிழினத் தலைவர்களென்றும் இன்று செயல்படும் பலரையும் சாலையார் என்ற உரைகல் கொண்டு நாம் உரசிப்பார்க்கவும் வேண்டும்.

5.

**சா**லையார் இலக்கிய ஆய்வு :

தமிழில் வழங்கும் பழமொழிகள் குறித்து முனைவர் பட்டத்திற்கான ஆய்வை இவர் செய்திருக்கிறார். பழமொழிகளில் கவிதை நயம் மட்டுமல்லாமல் தமிழ்ச் சமூக வாழ்வின் சிக்கல்களையும் பார்த்திருக்கிறார். கவிதை இயங்கும் தளத்தின் ஒரு அற்புத வடிவம் பழமொழிகள். அடித்தள மக்கள் மத்தியில் அவர்கள் வாழ்விலிருந்து ஊற்றெடுத்துப பெருகிய கவிதைகள் இந்தப் பழமொழிகள். மண்ணையும், மக்களையும் மனமாற நேசிக்கும்

ஒருவர்தான் இந்த அரிய ஆய்வைச் செய்யமுடியும். சாலையார் செய்திருக்கிறார்.

தமிழின் ஒரே கவிஞனென சுப்புரத்தினக் கவியை இவர் மதிப்பீடு செய்வதறகாகச் சொல்லும் காரணம் சிறப்பானது. பாரதிதாசனைப்போல மானுடத்தைப் பாடிய கவிஞர் வேறு எவரும் இல்லை என்பது ஒரு காரணம். இந்தக் கருப்பொருளையே தன் கவிதைகளுக்கு முழு அளவிலான அடிக்கருத்தாக சாலையார் கொண்டிருந்தார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. தமிழனின் வாழ்வின் அனைத்துவகைச் சிக்கல்களையும், வேறு எந்த தமிழ்க் கவிஞனைக் காட்டிலும் விரிவாகப் பாடியவர் பாரதிதாசன். சிக்கல்களைப் பாடியதுமட்டுமல்ல, தமிழையும் தமிழனையும் தன் நெஞ்சில் இருத்தி அற்புதமான கவிதைகளை பாரதிதாசன் செய்திருக்கிறார். இப்படி பாரதிதாசனின் தனித்தன்மை, மேன்மை முதலியவற்றைக் கண்டறிந்திருக்கிறார் சாலையார்.

திரு.வி. க. பலவகையான சிறப்புகளைக் கொண்டவரெனினும் தமிழ்ப் பத்திரிக்கை உலகத்தின் முன்னோடி என்ற வகையில் திரு.வி.க.வின் முதன்மைச் சிறப்பை எடுத்துரைக்கிறார் சாலையார். தமிழில் திறனாய்வைத் தோற்றுவித்து வளர்த்ததோடு, தமிழை தமிழ்க் கவிதையை, தமிழ் இலக்கியத்தை நம் காலத்திற்கு நெருக்கமாகக் கொண்டுவந்தவர் என்ற வகையில் அறிஞர் செல்வகேசவரை தமிழின் திறனாய்வு முன்னோடி என மதிப்பிடுகிறார். கதை எழுதுவதன் பல்வகையான போக்குகளைத் தமிழ்க்கதைக்குள் கொண்டுவந்தவர் என்ற முறையில் விநோதரசமஞ்சரி எழுதிய வீராச்சாமி அவர்களைப் பாராட்டுகிறார் சாலையார். தமிழிலக்கியத்தின் வாழ்வோடு தன்னை இணைத்துக் கொண்ட சாலையார் தற்காலத் தமிழிலக்கிய முன்னோடிகளை இவ்வாறு கண்டறிவதிலும் பாராட்டுவதிலும் வியப்பில்லை.

தமிழியக்கத்தின் வரலாற்றில் ஒரு தனி எழுச்சி எனச் சாலையாரை நாம் கண்டறிகிறோம். அறிவியக்கப்பேரவையை தோற்றுவித்து பல ஆண்டுகள் சாலையார் தம்மை அதில் முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டு பணிபுரிந்தார். தமிழ் வாழ்வின் மேன்மையைத் தவிர வேறு எதையும் அவர் எதிர்பார்க்கவில்லை.

6

நீதிக் கட்சியினரில் பலர் சமூக நலத்தை முழுமையாகத் தன் நெஞ்சில் தாங்கி அயராது உழைத்ததைப் பாராட்டும் சாலையார் பணத்திற்கோ, பதவிக்கோ இவர்கள் தம்மைப் பறிகொடுத்திடவில்லை என்கிறார். காங்கிரஸ்காரர்களும், திராவிட இயக்கத்தவர்களும் பதவிக்கு வந்த நிலையில் மக்கள் நலனை புறக்கணித்துவிட்டு செல்வம் திரட்டுவதையே நோக்கமாகக் கொண்டதைச் சாலையார் காய்கிறார். பணத்திற்கோ, பதவிக்கோ தம்மை இழக்காத பண்பாட்டைத் தமிழ்ப்பண்பாடு என்று போற்றும் சாலையார், இப்படி பணம் தமிழ்ச் சமூகத்தில் ஊடுருவி தமிழ்ச்சமூகத்தின் பண்பாட்டை நாசப்படுத்திவருவதைக் கண்டறிந்து சொல்கிறார். அதிகாரமும், பணமும் தமிழினம் சார்ந்த கட்சிகளையும், தலைவர்களையும் பாழ்படுத்தியதன் விளைவாக தமிழியக்கம் சீரழிந்ததும், சிதைந்ததும் நம் கால வரலாறு. இந்தியாவில் பெருகிவந்த சீர்கெட்ட முதலாளியப் போக்கின் விளைவுதான் இது என்று சாலையார் கண்டிருக்கவேண்டும்.

இதற்கு மாறாக பெரியார் பாணியில் பார்ப்பனர் இயக்கத்தின் வருகையினால் தான் தமிழ்ச்சமூகம் தன் ஆற்றலை இழந்தது என்று தமிழ்வரலாறு கூறத் தொடங்குகிறா சாலையார். பல்லவர் மற்றும் சோழர் காலம் முதற்கொண்டே ஆரிய ஆதிக்கம் தமிழ் நிலத்தை நாசப்படுத்தியதெனச் சொல்கிறார். பாண்டியர், சோழர் போன்ற மன்னவர்களின் ஆதிக்கத்திற்கும் மக்களுக்கும் இடையில் ஏற்பட்ட பிளவு காரணமாகத்தான் ஆரியருக்கு இங்கு இடம் கிடைத்தது. தனியுடமையும், அரசதிகாரமும் இன்றும் மக்கள்மீது சுரண்டலையும், ஒழுக்குமுறையையும் திணிப்பவை. தனியுடமையையும், அரசதிகாரத்தையும் மக்கள் என்றும் மனமுவந்து ஏற்றுக்கொள்ள முடியாது. இவற்றிற்கெதிரான இயக்கத்தில் மக்கள் என்றும் இருப்பர். மக்களைத் தொடர்ந்து சுரண்டுவதற்கும், ஒடுக்குவதற்கும் மக்களை உடன்படச்செய்யவேண்டும். இந்தப்பணியைச் செய்வதற்காகத்தான் பாாப்பனரின் கருத்தியல் இங்கு தேவைப்பட்டது. இதன்காரணமாகத்தான் பார்ப்பனர்களை தமிழ்/தெலுங்கு மன்னர்கள் இங்கு கொண்டுவந்தனர். உடமையும், அரசதிகாரமும் கருத்தியலும் இப்படித்தான் கைகோத்துக்கொண்டன.

வரலாற்றுக் காலம் முழுவதும் நடைபெறுவது இதைத்தவிர வேறில்லை. திராவிட இயக்கத்தவரின் ஆட்சி இப்படித்தான்

செயல்படுகிறது. வடவர் மற்றும் அன்னியரின் சுரண்டலை இங்கு அனுமதிக்கிறது. சீர்கெட்ட முதலாளித்தை மக்களுக்குப் பரிந்துரைக்கிறது. நிலம், நீர் முதலியவற்றை நாசமாக்குகிறது. மத்திய அரசோடு இணைந்துகொண்டு மக்கள் மீது ஒடுக்கு முறையைத் திணிக்கிறது. தமிழ் மக்களின் தன்மானத்தை அழிக்கிறது திராவிட அரசு. தனியுடைமையும் அரசதிகாரமும் பார்ப்பனியமும் இங்கு இணைந்து செயல்படுவதைத்தான் பார்க்கிறோம். பார்ப்பனருக்கு இடம் கொடுத்துத்தான் தமிழன் அழிந்தான் என்பது ஒருபக்கப் பார்வை. தமிழ் மொழியை பேசுவதாகவும் தமிழர் நலன்களை மேம்படுத்துவதாகவும் சொல்லிக்கொண்டே தமிழனை அடிமைப் படுத்திய வரலாறுதான் இங்கு நடந்திருக்கிறது. சாதியையும், மதத்தையும் பார்ப்பனியத்தையும் சாடும் இந்த தமிழறிஞர் கூட்டம் தனியுடமையைச் சாடுவதில்லை. அரசதிகாரத்தைச் சாடுவதில்லை. வாய்ப்புக் கிடைத்த பொழுதெல்லாம் இவர்களும் செல்வத்தையும், அதிகாரத்தையும் சேர்த்துக் கொள்கிறார்கள். சீர்கெட்ட முதலாளியத்தை இவர்களும் தாங்குவதோடு வளர்க்கவும் செய்கிறார்கள். இத்தகைய போக்கு தமிழ்ச் சமுதாயம் முழுவதும் பரவியிருக்கிறது. தமிழர்களின் குடும்பம் முதலிய எல்லா அமைப்புகளுக்குள்ளும் நுழைந்து ஆட்சி செய்கிறது. காசே தான் கடவுள் ஆகிவிட்டது. பதவியில் உள்ளவர்கள் கடவுளுக்கு நிகரானவர்கள். கலைஞர் இப்படித்தான் தமிழினத்தின் உச்சத்தில் இருக்கிறார். அண்ணா பெற முடியாத சக்தியை கலைஞர் பெற்றார். தமிழ்ச்சமூகம் இப்படித்தான் சிதைந்து சீரழிந்தது. இந்த வரலாற்றைச் சாலையார் காணவில்லை. தமிழியக்கம் என்பது தமிழோடு நின்றுவிடுவதில்லை. தமிழ் மக்களின் சமூக வாழ்வு, விடுதலை என்று பல தளங்களிலும் செயல்படுவது தமிழியக்கம். சாலையார் பெரியாரோடு பாரதிதாசனோடு நின்று விடுகிறார். சமதருமம் வெற்றிபெறாத இடத்தில் சாதியும், மதங்களும் தழைக்கின்றன. பணம், பதவிக்கு முன்னர் மனித வீறு தலைகுனிகிறது. இது நம் கால வரலாறு.

7.

இடது சாரிகளைச் சாலையார் திறனாய்விற்கு உட்படுத்துகிறார். முற்போக்கு இலக்கியம், பிற்போக்கு இலக்கியம் என்று தொடக்கநிலையில் பேசலாம் என்பவர். இலக்கியத்தை மதிப்பீடு

செய்வதற்கு இந்த அடிப்படையை இறுதிவரை கடைப்பிடிக்கமுடியாது என்று சரியாகவே சொல்லுகிறார். இலக்கியம் என்பது எப்போதும் நற்போக்கு இலக்கியமாகத்தான் இருக்கமுடியும் என்கிறார். எஸ்.பொ. முதலியவர்களைச் சரியாகவே பாராட்டுகிறார். இலக்கியத்திற்குள் இயங்கும் பேராற்றலைப் புரிந்து கொள்ளாமல் வள்ளுவர், இளங்கோ, கம்பர் முதலியவர்களையும் பிற்போக்கு வட்டாரத்தில் சேர்த்த இடது சாரிகளைச் சாலையார் திறனாய்வு செய்ததில் வியப்பில்லை.

கட்சி சார்ந்த இடது சாரிகள் அரசதிகாரத்தில் பங்குபெற்றத் துடிப்பதைச் சாடும் சாலையார், இடது சாரிகளாகத் தோற்றம்தரும் இவர்கள் உண்மையில் வலது சாரிகளாகத்தான் செயல்படுகிறார்கள் என்கிறார். பெரியாரியத்தைக் கண்டுகொண்ட அளவிற்கு இவர் மார்க்சியத்தை ஏன் காணவில்லை என்பது ஒரு புதிர்தான். தமிழ்ச் சமூகத்தினுள் செயல்படும் அழிவுச்சக்திகளுக்கிடையில் சாலையார் ஏன் ஏற்றம் பெறவில்லை என்பதை நாம் புரிந்துகொள்ள முடியும். பாரதிதாசன் பெயரில் பகிர்ந்தளிக்கப்பட்ட பரிசை இவர் எப்படி ஏற்றுக்கொண்டார் என்பதை இவரே சொல்லியிருக்கிறார். தமிழ்க்கவிஞர்களில் இவரையும் ஒருவராக்கிவிட்டனர் ஆட்சியாளர்கள். தன் கட்சிக்காரர்களுக்கு மட்டுமே பதவி, விருது முதலியவற்றைத் தருகிற கலைஞர், பெயரளவிற்கு எப்பொழுதோ ஏதோ ஒரு பரிசைக்கொடுத்து இவரை ஒதுக்கினார்.

## 8.

### சாலையார் நினைவு மலர்

சாலையாரின் மறைவையொட்டி வெளியிடப்பட்ட நினைவு மலரில் நண்பர்கள், பேராசிரியர்கள் எனப் பலரும் எழுதியுள்ளனர். சாலையாரின் தமிழ்ப்பற்று, தமிழ் ஆய்வு, கவிதைத்திறன், அறிவியக்க பேரவைச் செயல்பாடு, கொடைத்திறன் என்று சாலையாரின் பண்பு மற்றும் அறிவாற்றலை நினைவுகூர்ந்தும் பாராட்டியும் எழுதியுள்ளனர்.

சாலையாரை நக்கீரப்புலவர் என்றும் பாராட்டுகின்றனர். இவ்வாறெல்லாம் பாராட்டுவது அவரவர் எல்லைக்குள்ளிருந்தே பாராட்டுவதாக அமைகிறது. இப்படிப் பாராட்டிவிட்டு அவரவர் தன் மனச்சான்றை நிறைவு செய்து கொள்வதாகக் கருதிக்கொள்ள

முடியும். இவர்களுள் பலரும் தமிழை வைத்து வாழ்ந்தவர்கள். தமிழுக்கு இவ்வளவுதான் தங்களால் செய்யமுடியுமென்று ஒதுங்கி வாழ்பவர்கள். சாலையாருக்கு நன்றி தெரிவிப்பதோடு இவர்கள் நின்று விடுகிறார்கள். தமக்கென செல்வம், பதவி ஆகியவற்றின் எல்லைக்கப்பால் இவர்கள் தம் வாழ்வு குறித்து சிந்திப்பதில்லை. தமிழியக்கம் என்றும் வரலாற்றில்வைத்துச் சாலையாரை இவர்கள் பார்க்கவில்லை. தமிழ்தான் தமக்குச் சோறுபோடுகிறது. தமிழின் பெருமையில் ஒரு பகுதியைக் கவர்ந்து கொண்டதால்தான் தங்களுக்கான மேன்மை கிடைத்துள்ளது என்று இவர்கள் சிந்திக்கவில்லை. சாலையார் எல்லாவற்றையும் தமிழுக்கும், பிறருக்கும் தந்தவர். இப்படி ஏன் தங்களால் செய்ய முடியவில்லை என்று கூட இவர்கள் சிந்திக்கவில்லை. இவர்களால் இப்படி சிந்திக்கமுடியாது. தமிழ் வாழ்வின் விளைச்சலில் ஒரு பங்கை கவர்ந்துகொண்டவர்கள் சிலர். தமிழியக்கத்தோடு இவர்கள் இல்லை. இவர்களுக்காகவும் சேர்த்துத்தான் சாலையார் பாடுபட்டார். தமிழின் அழிவுச் சக்திகள் என்று இவர்களைச் சொல்வதில் நாம் தயங்கவேண்டியதில்லை. இவர்களையெல்லாம் நம்பாதவராக சாலையார் வாழ்ந்தார். சாலையார் வாழ்வு ஒருவகையில் வெற்றி. இன்னொரு வகையில் அவலம்.

9.

**சா**லையார் – *தமிழியக்கம் :*

நெடுங்காலத் தமிழியக்க வரலாற்றில் கோபாலகிருஷ்ண பாரதியார், வேதநாயகர், வள்ளலார் என எழுந்தது தமிழ்மறுமலர்ச்சிக்கான வரலாறு. அடுத்த கட்டத்தில் சங்க இலக்கியங்கள் முதலியவை கண்டறியப்பட்டு தமிழ் இலக்கிய வரலாற்றில் இன்னொரு கட்டம் தொடங்கியது. திராவிட இயக்கம் அடுத்தகட்டம். தமிழ்த்தேசியம் இன்றைய காலகட்டம். தமிழ்த்தேசிய இயக்கத்தில் வைத்துச் சாலையாரை இனம் காண முடியுமா? என்று நாம் பார்க்க வேண்டும். தமிழ் இயக்கத்தை மக்களுக்கு மிக நெருக்கமாகச் சாலையார் எடுத்துச் சென்றார் என்று பேசும்பொழுது தலித்தியம், பெண்ணியம் என்ற பெயரில் சாலையார் பேசாவிட்டாலும் இவற்றின் உள்ளடக்கத்தைச் சாலையாரின் எழுத்துக்களில் இனங்காணலாம்.

பெரியாரின் சிந்தனைகள் சாலையாருக்குள் சிறப்பாக இடம்பெற்றன. வீரமணியைக் காட்டிலும் குத்தூசி குருசாமிக்குத் தான் சாலையார் நெருக்கமாக இருந்தார். பெரியாரின் சொத்துக்களுக்கு வாரிசாகும் வேட்கையோடு வீரமணி இருந்திருக்கிறார். சாலையாரை இவர் பெரியாரிடம் நெருங்க விடவில்லை. எத்தகைய வழிபாட்டையும் பெரியார் விரும்பாதது போலவே சாலையாரும் தமிழ்த்தாய் வாழ்த்தைக்கூட ஏற்கவில்லை. இந்த வகையில் தான் அவர் பெரிய மனிதர் என்று எவரையும் வழிபாடு செய்யாத வணங்காமுடியாக இறுதிவரை அவர் இருந்தார்.

நெடுங்காலப் பாரம்பரியம் உடையது தமிழ்மொழி. இந்த நெடுங்காலப் பாரம்பரியம் தமிழ் மக்களின் பாரம்பரியம், பண்பாட்டுச் செழுமைக்கு ஆதாரமாக இருக்கிறது. தமிழ் மக்களின் மனிதநேயம் சாதி, இனம், மொழி, நாடு என்பவற்றைக் கடந்து இயங்குவது என்பதைச் சாலையார் கண்டறிந்து போற்றுகிறார். இத்தகைய மனித நேய வேர்கள் சங்க இலக்கியத்தில் ஆழமாகப் பதிந்துள்ளன. இவ்வாறு சங்க இலக்கியத்தின் தனித்திறனைச் சாலையார் கண்டறிந்து போற்றியது போலப் பிறர் எவரிடத்தும் இந்தப் புரிதலைக் காணமுடியாது. சாலையாரைப் பொறுத்தவரை இது வெற்றுப் பெருமிதமாக இல்லை.

சங்க காலப் பெரும் புலவர் ஒருவர் மீண்டும் இங்கு வவது பிறந்தது போல இயல்பாக இந்த பெருமிதத்தைச் சாலையார் கொண்டிருந்தார். திராவிட இயக்கப் புலவர்கள், கம்பரைப் புரிந்துகொள்ளவும் இல்லை. பாராட்டவும் இல்லை. சாலையார் பாராட்டுகிறார். எப்படி இருந்தாலும் சமயத்திற்கு நேர் எதிராகச் சாலையார் இருந்ததன் காரணமாகத் தமிழ் இலக்கியத்தின் ஒரு பெரும்பரப்பைச் சாலையார் மதிக்கஇயலவில்லை. தமிழியக்கத்தின் வளர்ச்சிக்குக் குந்தகமாகவே இன்றும் இந்தப் போக்கு செயல்படுகிறது.

10.

**சா**லையார் அரசியல் ஆணவம் :

தமிழ் - தமிழன் - தமிழ்நாடு என்ற தலைப்பில் வெளியாகியுள்ள சாலையாரின் நூலை அவரது அரசியல் ஆவணம் என்று நாம் உறுதியாகக் குறிப்பிட முடியும். தில்லியில் பேராசிரியர் பதவியிலிருந்து விலகிவந்த நிலையில் சாலையார் எழுதிய கட்டுரைகள் இவை.

திராவிட நாட்டுக் கோரிக்கையை தி.மு.க. கைவிட்டதைச் சாலையார் கண்டிக்கிறார். திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு அரசியல் தெரியாது. பொருளியல் தெரியாது. சமூகவியல் தெரியாது என்பதை அழுத்தம் திருத்தமாகச் சொல்லுவதோடு இப்படிச் சொல்வதற்கான காரணங்களையும் அடுக்குகிறார்.

தமிழினத்திற்குத் தன்னுரிமை தேவை என்று சொல்லும் சாலையார் உண்மையான கூட்டாட்சி குறித்தும் பேசுகிறார். விடுதலை என்பதையும் சாலையார் நெருங்கிச் செல்லுகிறார். ஈழத் தமிழக விடுதலை குறித்துச சாலையார் ஏற்கெனவே பேசியிருக்கிறார். தன்னையும் நக்சலைட் என்று அறிவித்துக் கொண்டவர் சாலையார். இவரின் பெருமிதமும் வீரமும் இந்தக் கட்டுரைகளில்தான் வெளிப்படையாகத் தெரிகின்றன.

மார்க்சியம் பேசும் இடதுசாரிகளைச் சாலையார் கண்டிப்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியும். இவர்களின் தொழிற்சங்க நடவடிக்கைகள் முதலாளி வர்க்கத்திற்குச் சாதகமானவை. பேச்சில் இடதுசாரிகளாகத் தோற்றம் தரும் இவர்கள் செயலில் வலது சாரிகளாகத் தெரியவந்திருக்கிறார்கள் என்கிறார் சாலையார்.

**சாலையார் திறனாய்வு :**

சாலையார் குறித்து இப்பொழுது சில விமர்சனங்களை இங்கு முன்வைக்க வேண்டியிருக்கிறது. இடதுசாரிகளை ஒதுக்கிவிட்டு மார்க்சியத்தைச் சுயமாகச் சாலையார் கற்றிருக்க முடியும். சாலையார் இதைச் செய்யவில்லை. மார்க்சியத்தைத் திரிப்பதிலும் புரட்டுவதிலும இடது சாரிகள் இந்தியாவில் மட்டுமல்ல சோவியத் ஒன்றியத்திலும் வெற்றி பெற்றார்கள். இடது சாரிகள் சொல்வதுதான் மார்க்சியமாக இருக்க முடியுமென்று சாலையார் கருதியிருக்க வேண்டாம். இன்னொன்றையும் சொல்ல வேண்டும். பெரியாரியம் குறித்துச் சாலையாருக்கு ஆழமான திறனாய்வு இல்லை. வீரமணியைச் சாலையார் சரியாகவே புரிந்துகொண்டார். குத்தூசி குருசாமியைப் பாராட்டினார். பெரியாரைப் போலவே சாலையாரும் பார்ப்பனர்களைச் சாடிக் கொண்டிருந்தார். இவற்றையெல்லாம் கடந்து சாலையாரின் சிந்தனை சென்றிருக்க முடியும். இப்படிச் சென்றிருந்தால் தமிழ் இலக்கியம் குறித்தும் சாலையாரின் ஆய்வுகள் இன்னும் வளமாக இருந்திருக்கக்கூடும்.

தமிழியக்கத்தின் மாபெரும் ஆற்றலை உள்வாங்கிச்

செயல்பட்டவர் என்ற முறையில் சாலையாருக்கு இணையாக பெருஞ்சித்தரனார் ஒருவரைத்தான் குறிப்பிடமுடியும். சங்ககாலத்துத் தமிழ்ச் சான்றோரின் நேர்வடிவம் என சாலையாரைத்தான் குறிப்பிட முடியும். இவர் உண்மையான தமிழ்ச்சான்றோர்.

**பேராசிரியர் சாலினியார் :**

1.

**சா**லையாரின் வீறுமிக்க தமிழியக்கத்தில் தன்னைக் கரைத்துக் கொண்டவர் சாலினியார். சமயப்பற்று மிகுந்த குடும்பத்தில் பிறந்து வளர்ந்த சாலினியார், சாலையாரின் பாதிப்பால் சமயப் பற்றைத் துறந்தது, அவர் வாழ்வைப் பொறுத்தவரை ஒரு திசை மாற்றம்.

தமிழ் வாழ்விலிருந்து சமய இலக்கித்தையோ சமயத்தையோ ஒதுக்கிவிட இயலாது. தமிழ்ச் சமுதாயத்தில் சித்தர்களின் பேரெழுச்சியைத் தமிழிலக்கிய வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே காணமுடியும். கல்லூரி வாழ்வில் 'கருகிய மொட்டு' என மணிமேகலைத் துறவறத்தைத் திறனாய்வு செய்து எழுதிய மூத்த மாணவருக்கு எதிர்நிலைஎடுத்து மணிமேகலையை 'வாடாமலர்' என்று மதிப்பிட்டு எழுதினார் சாலினியார். காரைக்கால் அம்மையார், திலகவதியார், மங்கையர்கரசியார், ஆண்டாள் முதலியவர்கள் தமிழ் வாழ்வின் ஒரு குறிப்பிட்ட போக்குக்கு அடையாளமாய்த் திகழ்நதவர். மணிமேகலையும் இத்தகையவர். தமிழ் வாழ்வில் கண்ணகிக்கும் அதைப்போலவே மாதவிக்கும் முக்கியமான இடம் உண்டு. சமயம் என்பதை ஆரியர்தான் தோற்றுவித்தனர் என்பது வரலாற்றுக்கு ஒத்த உண்மையன்று. சமயம் இல்லாமல் எந்தச் சமுதாயத்தையும் நாம் காண்பதற்கில்லை. கடவுள், ஆன்மா முலியவை கருத்தாக்கங்கள். வரலாற்றுச் சூழலில் இவை தோற்றம் பெறுகின்றன. சமயத்தை முற்றாக மறுப்பது வரலாற்று ஆய்வாக இருக்கமுடியாது. பெரியார் சமயத்தை மறுத்தார். ஆரியர் தோற்றுவித்தார் என்பதற்காக மறுத்தார்.

திராவிட சமயங்களும் உண்டு. ஆரிய சமயத்தைக் காட்டிலும் திராவிட சமயங்கள் உலகியல் சார்ந்தவை. மனிதச் சார்புடையவை.

சமயத்திற்குள்ளும் சமூக வாழ்வை மேம்படுத்துவதற்கான கூறுகள் இருக்கின்றன. சமயத்தின் பிற்போக்குத் தன்மையை மட்டுமே சாலையார் பார்த்தார். சாலினியார் ஏன் சமயத்தை மறுத்தார் என்பதைச் சாலினியார் விளக்கவில்லை. கணவரோடு முரண்படக்கூடாது என்பதற்காகச் சமயத்தை ஒதுக்கினாரா? என்பது தெரியவில்லை. தமிழியல் ஆய்வில் சமயம் குறித்த ஆய்வை சாலினியார் செய்திருக்க முடியும்.

2. சாலினியார் – தமிழ்க்கல்விப்பணி

தமிழியக்கத்தின் வீறுமிக்க இன்னொரு பணி எனச் சாலினியார் தமிழ்க்கல்விப் பணியை தேர்ந்துகொண்டார். குடும்பச் சூழல் இதற்கு முதன்மையான காரணம். 40/50களில் தமிழ்ச்சூழலில் தமிழ்ப்பற்று ஏறுமுகத்தில் இருந்தது. இந்தத் தமிழ்ப்பற்றால் பாதிக்கப்படாதவரென எவரும் இருக்கமுடியாது. ஆசிரியர் பணியின்பால் இளம்வயதிலேயே தனக்கேற்பட்ட ஆர்வத்தைச் சாலினியார் எடுத்துரைக்கின்றார். திருமண வாழ்வில் கணவரோடு முற்றாக இணைந்து அனைத்துக் கடமைகளையும் அற்புதமாகச் செய்தார். சமுதாய நலத்திற்கெனத் தன் வருமானம், வாழ்வு என எல்லாவற்றையும் இருவரும் துறந்தனர் என்று சொல்ல முடியும்.

தில்லியில் திருவேங்கடவன் கல்லூரியில் தமிழ்த்துறையைச் சாலினியார் தோற்றுவித்தார். அயல்மொழிச் சூழலில் தமிழ்க்குடும்பங்களில் இருந்துவரும் குழந்தைகள் தமிழில் எழுத, பேச அஞ்சுவது இயல்பு. இன்று பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் குழந்தைகளிடம் தமிழ்ப்பற்று இல்லை. எழுத்துப் பயிற்சியும் இல்லை. பிழைபட எழுதுவதை இன்று ஏற்கவேண்டிய ஒரு அவலமான சூழல் ஏற்பட்டுள்ளது. தமிழின் ஆற்றலைத் தமிழ் மாணவர்களுக்குள் எழுப்பும் பேராசிரியர்கள் இன்று இல்லை. தன்னலத்தில் பலர் உறைந்து போயிருக்கின்றனர். தமிழை இனி வாழ்விக்க முடியுமா? என்பது இன்றைய நிலை. தமிழ்க்கல்வி, தமிழ் இயக்கம், தமிழ்த்தேசியம் என்றெல்லாம் இன்று மீண்டும், மீண்டும் உணர்வெழுச்சி அலைகளை தோற்றுவித்தாக வேண்டும் என்ற கட்டாயத்தில் நாம் இருக்கிறோம். இவ்வகை உணர்வோடு சாலினியார் செயல்பட்டார். கல்லூரி வாழ்வில் குழந்தைகளோடு தன்னை முற்றாகக் கரைத்துகொண்டு அவர்களுக்கு நண்பராய்,

நல்லாசனாய், தாயாய் இருந்து தமிழ்ப் பணி செய்தார் சாலினியார். ஒரு கல்லூரியில் தமிழ்த்துறையை தோற்றுவிப்பது ஒரு ஆணால்தான் முடியும் என்ற மூட நம்பிக்கையைச் சாலினியார் தகர்த்தார். இளங்கலை வகுப்பு மட்டுமன்றி முதுகலை வகுப்பும் தோற்றுவித்தார். தமிழ்ப்பண்பாட்டுக் கண்காட்சி நிறுவினார். இறுதியில் கல்லூரி முதல்வராகவும் பணியாற்றினார். ஒரு பெண் என்ற வகையில் எங்கும் இவர் தயங்கி நிற்கவில்லை. இதற்குச் சாலையாரையும்தான் நாம் பாராட்ட வேண்டும். தமிழியக்கத்தின் ஒரு முக்கியமான கிளை, மாணவர் மத்தியில் ஆசிரியராய்ப் பணிபுரிவது. இவ்வகையில் சாலினியார் தமிழகத்திற்கு வழிகாட்டியாய்த் திகழ்ந்தார்.

3. சாலினியார் படைப்புகள்:

சாலினியார் தன் படைப்புப் பணி குறித்தும் சுருக்கமாக எழுதியுள்ளார். கல்லூரியில் சிலம்பின் சொல்வளம் என்று ஆய்வு செய்ததைக் குறிப்பிடுகிறார். பண்பாட்டின் சிகரங்கள் என்ற தன் கட்டுரைத் தொகுப்பைக் குறிப்பிடுகிறார். சேரன் செங்குட்டுவன், கனக விசயரை வென்றான். ஆனால் மாடலன் சொற்கேட்டு கனகவிசயரை விடுதலை செய்து அவர்களை விருந்தினராக ஏற்றுக்கொண்டு கண்ணகிகோயில் வழிபாட்டில் கலந்துக்கொள்ளச் செய்தான். இவ்வகையில் அவன் தமிழ்ப் பண்பாட்டின் சிகரம். தான் யார் என்பதை வெளிப்படுத்திக்கொள்ளாமலே புலவர்களுக்குப் பசிதீர்த்துத் தன் முத்துமாலையையும் பரிசளித்துக் காட்டுக்குள் மறைந்தான் ஆய் அண்டிரன். புகழைக் கூட துறந்த இவன் பண்பாட்டின் சிகரம்.

தமிழர்கள் மத்தியில்தான் பண்பாட்டின் சிகரங்களைச் சாலினியார் கண்டுபிடித்தார் என்றில்லாமல் இராஜபுத்திர மன்னனிடமும் பண்பாட்டின் சிகரத்தைக் கண்டார். காந்தியாரிடமும் தான் கண்ட பண்பாட்டு மேன்மையை விரிவாக எடுத்துரைத்தார். இறுதியாகப் பெரியாரைக் குறிப்பிட்டார்.

பண்பாட்டின் சிகரங்களை இவர் விளக்கிச் செல்லும் பொழுது ஓர் உண்மை நமக்குள் தெளிவாகத் தென்படுகிறது. சாலையாரும், சாலினியாரும் தமிழ்ப்பண்பாட்டின் சிகரங்கள். இனம் இனத்தோடு சேரும், பாம்பின் கால் பாம்பு அறியும் என்பதைப் போல தமக்குள்

இருக்கும் பண்பாட்டு மேன்மையை பிறருக்குள் இவர்கள் கண்டார்கள்.

வாழ்க்கை வரலாற்று இலக்கியம் குறித்தும் சாலினியார் ஆய்வு செய்திருக்கிறார். தமிழில் ஒரு புதுவகை ஆய்வை இப்படி தொடங்கி வைத்திருக்கிறார் சாலினியார்.

5.

வள்ளுவருக்கு வாய்த்த வாசுகி மாதிரி என்பதைச் சாலையார் ஏற்கவில்லை. பெரியாருக்கு வாய்த்த நாகம்மை மாதிரி, குத்தூசி குருசாமிக்கு வாய்த்த துணைவியார் மாதிரி சாலையாருக்கு வாய்த்தவர் சாலினியார். இப்படித்தான் சாலையார் எழுதியிருக்கிறார். இப்படிக் குறிப்பிடும் பொழுது சாலையாருக்குள் சாலினியார் ஒடுங்கியிருந்தார் என்றுதான் இந்தத் தொடர் பொருள்படுகிறது. இப்படித்தானா! என்பது நமக்குள் எழும் கேள்வி. கல்லூரிக்கு வெளியில் உலகளாவிய தமிழ்ச் சூழலில் சாலையாரோடு இணைந்து அறிவியக்கப் பணியை மேற்கொண்டவர் சாலினியார். தில்லியில் ஒரு பெரியவர் குறிப்பிட்டது போல *She is a Man* என்பது உண்மை.

# எஸ்.பொ. : வாழ்வும் வரலாறும்

## 1. எஸ்.பொ. : காட்டு மனிதர்

எஸ்.பொ. தன்வரலாற்று நூலின் அறிமுக உரையில் அனுர குறிப்பிடுகிறபடி எஸ்.பொ. தன் காலம் முழுவதும் ஒரு காட்டு மனிதராகவே வாழ்ந்து கொண்டிருக்கிறார். காட்டு மனிதர் என்பவர்களை நாம் தற்காலத்தில் மரியாதைக்குரிய மக்களாக மதிக்கிறோம். காட்டு மனிதன் ஒரு கடுமையான உழைப்பாளி. பணம், அதிகாரம் முதலியவற்றை மதிக்காதவன். உறவுகளுக்காகவே உயிரைத் தருபவன். சுவையான உணவுகளைத் தேடித் தேடி உண்பவன். அவன் மதுப் பிரியனாகவும் இருப்பவன். காமத்தை வாழ்வின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று எனக் கருதுபவன். இயற்கையோடு இணைந்து வாழ்பவன். அலைவதிலும் தளர்ச்சி கொள்ளாதவன். இவன் மண்ணையும் மரங்களையும் நேசிப்பவன். இந்த ஆதிமனிதன் மார்க்சியர்களுக்கு விருப்பமானவன்.

இத்தகைய அருங்குணங்களைக் கொண்ட எஸ்.பொ. அவர்களை காட்டு மனிதன் என்று குறிப்பிடுவதில் தவறில்லை. இந்த அருங்குணங்களை கொண்டு இருப்பதனாலேயே அவர் தன்னை மார்க்சியராகக் கருதுகிறார். மண்ணை நேசிப்பதன் காரணமாக மக்களையும், மக்களின் மொழியாகிய தமிழையும் ஆழமாக நேசிக்கிறார். ஒரு அசலான மார்க்சியர் என்ற முறையில் தமிழ்த்துவம் பற்றி ஆழ்ந்த அக்கறையோடு பேசுகிறார். ஒரு காட்டு மனிதன் அளவு கடந்த சக்திகளைத் தனக்குள் கொண்டு இருப்பவன். தனக்கு மரியாதை வேண்டி தனக்குரிய கடமைகளைச் செய்யாதவன். பதவிகளுக்காக சமரசம் செய்து கொள்ளாதவன். இக்காரணங்களாலேதான் கட்சி மார்க்சியரோடு இவரால் ஒத்துச் செல்ல முடியவில்லை.

நாகரிக உலகத்திற்கு வசப்பட்டவர்கள் தம்மை முதன்மைப்படுத்திக் காரியங்களைச் செய்வார்கள். ஒரு வகையில் நாகரிக உலகம் காட்டு மனிதனை மதிப்பது இல்லை. நாகரிக உலகத்திற்கு அவனை இழுத்து வந்து அவனது ஆற்றல்களை, நற்பண்புகளை அழித்து தங்களைப் போலவே அவனையும் மாற்றவே விரும்புகிறது. இதைத்தான் இலங்கையில் உள்ள கட்சி மார்க்சியர்களும் வேளாளச் சாதியினரும் செய்தனர்.

யாழ்ப்பாணத்தில் எஸ்.பொ. ஆசிரியராகப் பணி செய்ய இயலவில்லை. காரணம் யாழ்ப்பாணத்துப் போலித்தனமான வேளாளர் நாகரீகம், சிறுபான்மைத் தமிழனாகிய எஸ்.பொ.வுக்கு வேலை தர மறுத்து விட்டது. இதன் காரணமாக அவர் மலை நாட்டுக்குப் பணிபுரியச் சென்றார். அங்குள்ள இசுலாமியரோடு நல்ல இணக்கம் கொண்ட நிலையிலும் தனக்குரிய தேசம் கிழக்கு இலங்கை தான் என்று தீர்மானித்தார். மட்டக்களப்பு வட்டாரம் தான் மண்ணின் மரபுகளை உறுதியாகப் பற்றி நிற்கிற பகுதி. இங்கு மக்கள் உள்ளத்தில் சாதி வெறி இல்லை. பாட்டும் கூத்தும் என நாட்டார் மரபுகளைப் பற்றி நிற்கிற மக்கள் மட்டக்களப்பில் வாழ்பவர்கள்.

'வரலாற்றில் வாழ்தல்' என்ற 2000 பக்கம் கொண்ட தன்வரலாற்று நூலில் குறைந்த அளவுக்கு நுறு பக்கங்களிளாவது வகை வகையான உணவுகளைப் பற்றி எஸ்.பொ. விவரிக்கிறார். யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, கொழும்பு, நைஜீரியா – இப்படி எங்கு தங்கி இருந்தாலும் அந்தந்த பிரதேசத்து உணவு வகைகளை விரும்பி உண்டு மகிழ்கிறார். மக்கள் மீது இவர் கொண்டிருக்கிற நேயம் நூல் முழுவதும் பரவிக் கிடக்கிறது. இந்த வகையிலும் எஸ்.பொ. ஒரு காட்டு மனிதர். அப்பையா என்ற இன்னொரு காட்டு மனிதனின் சரியான வாரிசு எஸ்.பொ. இந்த இடத்தில் எஸ்.பொ.வின் நாத்திகம் குறித்தும் சொல்லலாம். எஸ்.பொ.வுக்குக் கடவுள் நம்பிக்கை அறவே இல்லை. எனினும் தன் நாத்திக உணர்வைத் தன் மனைவி, குழந்தைகள் யார் மீதும் திணிக்கவும் இல்லை. தன் மனைவியின் அழகான சைவப் பற்றை இவர் மதிக்கிறார். குழந்தைகளும் கூட சைவ உணர்வை தமக்குள் பெற்றவர்கள். மதம் குறித்து இவருக்குப் பெரிய மரியாதை இல்லை. இதற்காக எந்த ஒரு மதத்தின் மீதும் வெறுப்புக் காட்டவும் இல்லை. தான் நாத்திகர் ஆன கதையை இவர் இந்த நூலில் சொல்லவில்லை. மார்க்சியர் என்ற முறையில் இவர் நாத்திகராக இருப்பதில் தவறில்லை. எனினும் ஒரு மார்க்சியருக்கு மதம் பற்றி அழகான பார்வை தேவை. இப்படி ஒரு பார்வை இவரிடத்தில் ஏனோ ஏற்படவில்லை. புலன் கடந்த சில உணர்வுகளை மார்க்சியர் ஏனோ தம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வதில்லை.

இந்த வரலாற்று நூலில் எஸ்.பொ. சில வாழ்வியல் அனுபவங்களைக் குறிப்பிடுகிறார். தான் பிறந்த போது கோவில் குருக்களிடம் எஸ்.பொ.வின் எதிர்காலம் குறித்து அப்பையா கேட்டிருக்கிறார். 40 வயதுக்குப் பிறகு எஸ்.பொ. வெளிநாடுகளுக்குச்

செல்வார். பிரபுக்களிடம் மரியாதைப் பெறுவார் என்று குருக்கள் கூறிய வாசகம் மெய்யானதைச் சற்று வியப்போடு எஸ்.பொ. குறிப்பிடுகிறார். மேலும் சில செய்திகள். கிழக்கு வாசல் கொண்ட வீடுதான், தான் குடியிருப்பதற்கு ராசியான வீடு என்கிறார். தன் மரியாதைக்குரிய நண்பர் ராமச்சந்திரன் மட்டக்களப்பில் இருந்து பேருந்தை ஓட்டிச் சென்ற போது விபத்துக்குள்ளாகி இறந்தார். ஒரு பெட்டியில் அவரது உடம்பு மட்டக்களப்புக்கு வந்து சேருகிறது. ராமச்சந்திரன் யாழ்ப்பாணத்துக்காரர். அவரது சகோதரர் நாகராஜன், யாழ்ப்பாணத்திலிருந்து மட்டக்களப்பிற்கு ஒரு சவப்பெட்டி அனுப்புகிறார். இரண்டு சவப்பெட்டிகள் அங்குள்ள மக்களுக்கு அதிர்ச்சி தருகிறது. இது கூடாது என்று கலங்குகின்றனர். மக்கள் கலங்கியப்படி நாகராசன் சிறிது காலத்திலேயே இறக்கிறார். அடுத்து, சிறிது காலத்தில் அவரது மனைவியும் மின் அதிர்வு sகுள்ளாகி இறக்கிறார். இவற்றையெல்லாம் வியப்புணர்வோடு மட்டும் எஸ்.பொ. கூறுவதோடு நிறுத்திக் கொள்கிறார். இத்தகைய வாழ்வியல் புதிர்கள் குறித்து மார்க்சியருக்கு அக்கறை தேவை.

தத்துவ நோக்கில் மார்க்சியத்தை மட்டுமல்லாமல் வாழ்வியலை ஊன்றி ஆராயும் போது புலன் கடந்த உணர்வுகள் குறித்து நாம் கவனிக்கத் தவற முடியாது. மார்க்சியம் இந்த வகையில் தன்னை மழுங்கடித்துக் கொள்ள வேண்டியதில்லை. மார்க்சியர் தனக்குப் பெருமை பாராட்டிக் கொள்கிற விஞ்ஞானப் பார்வை முடங்கி இருக்க வேண்டியதில்லை.

## 2. எஸ்.பொ. குடும்பம்

'வரலாற்றில் வாழ்தல்' என்ற தன் வரலாற்று நூலில் எஸ்.பொ.வின் குடும்பத்தைச் சார்ந்தவர் நம்மைப் பெரிதும் கவர்கின்றனர். அப்பையா எப்பொழுதும் மவுனமாகவே இருந்து எல்லாருடைய நலன்களையும் முழுமையாக நிறைவேற்றுபவர். இவருடைய மவுனம் ஒரு தவம் எனச் சொல்லுவதற்குரியது. எஸ்.பொ. மட்டக்களப்பில் ஈஸ்வரத்தை ஒரு வித்தியாசமான சூழலில் உடனடியாக மணம் முடித்துக் கொள்கிறார். பெற்றோர் சம்மதத்தைப் பெறுவதற்கு வாய்ப்பு இல்லை. ஆனால் சிறிது காலம் கழிந்த பிறகு அப்பையா மட்டக்களப்புக்கு வருகிறார்.

மணமக்களுக்குச் செய்ய வேண்டியதை நிறைவாகச் செய்கிறார். தன் உறவுக்காரர்கள் இதை ஒப்புக் கொள்ளவில்லை. எனினும் தன் பொறுப்பை நிறைவேற்றுகிறார்.

எஸ்.பொ.வின் தாயாருடைய அற்புதமான பண்பை எந்த ஒரு இலக்கியத்திலும் நாம் காண்பதற்கில்லை. நல்லூர் கந்தசாமிக் கோயிலுக்குள் தாங்கள் நுழைய முடியாது. காரணம் தாங்கள் சிறுபான்மைத் தமிழர் – நளவர் சாதியினர். தமிழ்நாட்டில் பனையேறும் மக்களுக்கு நிகரான சாதி நளவர் சாதி. தெய்வ பக்தி நிறைந்த அவர் தன் இல்லத்திற்கு எதிரிலேயே ஒரு சிறிய கோவிலை உருவாக்குகிறார். தனக்குப் பிடித்த கடவுளை அங்கு வைத்து வழிபடுகிறார்கள். சென்னையில் படிக்கச் சென்று கிறிஸ்தவனாக தன் மகன் திரும்பியபோது இவருக்கு எந்த அதிர்ச்சியுமில்லை. கிறிஸ்துவ சமயத்திற்கு உரிய கடவுளையும் தன் கோவிலில் வைத்துக் கொள்ளலாம் என்கிறார். இறுதிக் காலத்தில் யாருடன் எதுவும் பேசாமல், கோவிலிலேயே தவம் இருந்து இவர் உயிர் விடுகிறார். எத்தகைய அனுபவம் இவரை இப்படி ஆக்கியது என்பதுப் பற்றி எஸ்.பொ. எதுவும் சொல்லவில்லை. ஒரு வகையில் இவருடைய கதை ஒரு சைவ சமயத்து நாயனார் கதைக்கு நிகரானது. இவரை அறிந்து நம்மால் வியப்படைய முடியுமே ஒழிய இவரது உள் உணர்வுக்குள் நுழைந்து இவரை நம்மால் புரிந்துகொள்ள இயலாது.

இனி எஸ்.பொ.வின் துணைவியார் ஈஸ்வரத்தை பற்றிச் சொல்ல வேண்டும். ஈஸ்வரம் வேளாளர் சாதிப் பெண். மட்டக்களப்பில் அவரது தந்தையார் வன்னியர் குல சிங்கம். பெருமிதமான வாழ்க்கை நடத்துபவர். அவரது மக்கள் அவரே கூறுகிறபடி சண்டியர். ஈஸ்வரத்தை எஸ்.பொ. காதலிக்கிறார். தொடக்கத்தில் ஈஸ்வரம் முகம் கொடுக்கவில்லை. இலக்கிய இதழ்களில் எஸ்.பொ.வின் பெயர் சிறப்பாக இடம் பெறுவதைப் பார்த்து இவரை நேசிக்கிறார். இதையறிந்த வன்னியர் சிங்கம் இவரை அழைத்து வேண்டாம் என்று மரியாதையோடு சொல்கிறார். தன் மக்களைச் சண்டியர் என்கிறார். ஆனால் ஈஸ்வரத்தைப் பொறுத்தவரை மறுநாள் காலை எஸ்.பொ.வை. வரவழைத்து அவரோடு சென்று அன்றே பதிவுத் திருமணம் செய்து கொள்கிறார். வன்னியர் சிங்கமும் தன்மகளின் விருப்பத்தை மதித்து ஏற்றுக் கொள்கிறார்.

ஈஸ்வரமும் ஆசிரியையாகப் பணியாற்றுபவர். அவரது தாயார் அற்புதமான மனுஷி. இறுதிவரை தன் மகளோடு இருந்து மக்களுக்கு

பணிபுரிகிறார். ஈஸ்வரத்திற்கும் எஸ்.பொ.வுக்கும் சில சந்தர்ப்பங்களில் மன வேறுபாடுகள் எழத்தான் செய்கின்றன. எல்லாச் சமயங்களிலும் ஈஸ்வரம் விட்டுக் கொடுக்கிறார். குழந்தைகளிடம் அளவற்ற பிரியம் கொண்டவர். குறிப்பாக புத்ரவிடம்.

இந்த நூலில் அனுர, புத்ர, மித்ர, இந்திர, மேகலா ஆகிய குழந்தைகளைப் பற்றி நிறைய எழுதுகிறார். மித்ரவின் ஆளுமை வியக்கத்தக்க ஆளுமை. அவர்தான் புலிப்படையில் சேர்ந்து மாவீரர் ஆகிறார். பிறப்பதற்கு அவசரப்பட்டு சில மாதங்களுக்கு முன்பே பிறந்த மித்ர, இந்த குடும்பத்திலேயே மிக மிக வித்யாசமான மனிதர். துள்ளித் திரிகிற குழந்தைப் பருவம். படிப்பு பெரிதில்லை என்ற மனநிலை. சென்னையில் இளம்பிறை ரகுமானோடு கொஞ்சகாலம் தங்கி அப்புறம் படிப்பை கைவிட்டுக் காணாமல் போனார். 5 ஆண்டுகள் கழித்து நைஜிரியாவிலிருந்து திரும்பி வரும் தந்தையை மும்பை விமானத் தளத்தில் ஓடோடி வந்து தழுவிக் கொள்கிறார். ஆஸ்திரேலியாவில் வாழும் தந்தைக்கு புத்ரவின் அகால மரணம் வந்து சேர்கிறது. எவருடைய நெஞ்சையும் கலங்கடிக்கிற செய்தி.

நூலின் இறுதியில் ஆஸ்திரேலியாவில் தன் பேத்திகளோடு மிகுந்த மகிழ்ச்சியோடு வாழ்கிற வாழ்க்கையை எஸ்.பொ. விவரிக்கிறார். இந்தச் சித்திரிப்புக்கள் அற்புதமானவை. குடும்பத்து உறவுகளைப் போலவே இவரது நட்பு வட்டம் பற்றி விவரிப்பது நமக்கு இயலாது. அந்தளவுக்கு பெரிய நட்பு வட்டம். கூடவே இவரது இளமைக்கால காதல் கதைகள்.

எஸ்.பொ.வின் வாழ்க்கையில் சில நிகழ்ச்சிகளை இங்கு சுருக்கமாகக் குறிப்பிடலாம். உயர் கல்விக்காக தமிழ்நாட்டுக்கு வருகிறார். முதலில் தாம்பரம் கிருத்தவக் கல்லூரி, பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகம். ஒரு ஆசிரியருக்கு எதிராகத் துண்டு அறிக்கை வெளியிட்டதற்காக பல்கலைக்கழகத்திலிருந்து வெளியேறுகிறார். சென்னையில் அறிவாற்றலோடு பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெறுகிறார். மாணவர் உலகில் எஸ்.பொ.வுக்கு நிகர் எஸ்.பொ. தான் இன்னொருவர் இல்லை. பேராசிரியர்களும் மரியாதை செய்கிற அறிவாற்றல், நாடகத்திறன். அந்தக் காலத்திலேயே திராவிட இயக்கத்தோடு முரண்பாடு, திராவிட இயக்கத்தவர் உண்மையான தமிழ் நேயம் உடையவராக இல்லை என்ற குறிப்பு நமக்கு வியப்பாகத்தான் இருக்கிறது. சென்னையில்

தாம்பரத்து கிறித்தவப் பெண்ணோடு ஒரு காதல். இந்தக் காதல் பற்றி எஸ்.பொ. அற்புதமாக எழுதுகிறார். இந்த நூலிலேயே கவிதை உணர்வுச் செறிவு மிக்க பகுதி இது. அப்புறம் அந்தப் பெண்ணை எஸ்.பொ. தான் கைவிடுகிறார். காரணம் சொல்லவில்லை.

தாய்நாட்டுக்குத் திரும்பி வருகிறார். மலை நாட்டுக் கல்வி நிறுவனம் ஒன்றில் வரலாற்று ஆசிரியப் பணி. உடன் பணியாற்றும் முசுலிம் பெண்கள், இருவர் அல்ல மூவர். இவரிடம் கொண்ட அழுத்தமான காதல். மலை நாட்டு வாழ்க்கையில் தன் வேர்களைத் தொலைத்துக் கொள்ள இவர் விரும்பவில்லை. மட்டக்களப்புக்குத் திரும்பி வருகிறார். இடையில் யாழ்ப்பாணத்தில் தன் சாதிக்காரி சிவமணியோடு நல்ல உறவு. இது நீண்ட கதை. தன் அக்காளுக்கு திருமணம் முடிந்த பிறகுதான் எஸ்.பொ.வை மணந்து கொள்ள முடியும். இது எஸ்.பொ.வுக்கு உடன்பாடு இல்லை. உறவை வெட்டிக் கொண்டு சென்னைக்கு திரும்புகிறார். இதுவரை தன் கற்பைக் காத்து வந்த எஸ்.பொ. தன் கற்பை முழு அளவில் உதறிக் கொள்கிறார். எத்தனையோ பெண்களோடு உறவு கொண்டு பால்வினை நோய்க்கு ஆளாகி அப்புறம் மருத்துவம் செய்து கொள்கிறார்.

யார் எவ்வளவு தூண்டினாலும் கல்லூரியில் உயர்கல்வியை இவர் முடிக்கவில்லை. பட்டங்கள் இவருக்குத் குறியாக இல்லை. பட்டங்கள் இல்லாவிட்டால் என்ன? காலம் முழுவதும் எல்லாத் துறைகளிலும் இவரது சாதனைகள் வியக்கத்தக்கவை. சிறுகதை, நாவல், நாடகம், திறனாய்வு, வரலாற்று ஆய்வு, அரசியலில் இவரது ஆளுமை, இலங்கையில் எல்லாப் பெரிய மனிதர்களோடும் இவருக்கு உறவு, வியக்கத்தக்க ஆளுமை. தன் வளர்ச்சிக்கு எத்தனையோ குறுக்கீடுகள், இடையூறுகள். தோல்விகளும் இடையிடையே வருகின்றன. அப்புறம் வெற்றிகள். தன் ஆற்றலை யாராலும் அழிக்க முடியாது என்பதில் உறுதியான நம்பிக்கை. இவரை அழிக்க முயல்பவர்கள் ஆக்கம் பெறவில்லை.

மித்ர புலிப்படையில் சேர்ந்தார். காயப்பட்ட போராளிகளுக்கு அனுர மருத்துவ உதவி செய்தார். இதன் காரணமாக சிங்கள அரசின் பார்வை இவர்கள் மீது திரும்புகிறது. ஆகவே இலங்கையை விட்டு வெளியேற வேண்டிய சூழல். அனுர ஆஸ்திரேலியாவுக்குப் போய்ச் சேருகிறார். நைஜிரியாவில் சிலகாலம் ஆசிரியராகப் பணி புரிந்தார். எஸ்.பொ. வரலாறுதான் இவர் கற்ற முதல் பாடம் என்றாலும் வரலாற்று ஆசிரியராகவும், தமிழ் ஆசிரியராகவும்,

ஆங்கில ஆசிரியராகவும் பல்வேறு கல்வி நிலையங்களில் பணியாற்றினார். இலங்கையின் வரலாறு குறித்த இவரது ஆய்வைச் சிங்கள அறிஞர்களும் மறுக்கவில்லை.

நூலில் பிரம்மசரியம் என்று ஒரு இயல். திருமணமாகி 17 ஆண்டுகள் இவரோடு வாழ்ந்த பிறகு இவரது துணைவியார் ஈஸ்வரம், இனிக் காலம் முழுவதும் பிரம்மசரியம் மேற்கொள்வதாக உறுதியாகக் கூறிவிட்டார். எஸ்.பொ.வுக்கு வேறு வழியில்லை. ஏன் இப்படி என்பது இவருக்குப் புரியவில்லை. "காந்தியின் சத்தியசோதனை" பற்றி இங்கு விரிவாகப் பேசுகிறார். மனித வாழ்வில் இப்படியும் சில நிகழ்வுகள் காட்டு மனிதர் எப்படித்தான் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாரோ! நமக்குப் புரியவில்லை. இன்னும் ஒன்று. எஸ்.பொ. ஒரு குடிகாரராகப் பலகாலம் வாழ்ந்தவர். நூலில் ஏராளமான விவரங்கள். இவரது இந்த அனுபவம் பற்றி இனிக் குடிக்கவே கூடாது என்று மருத்துவர் அறிவுரை. அப்புறம் அதையும் மீறிச் சிலச் சமயம் மிதமாகக் குடிக்கிறார்.

## 3. எஸ்.பொ. – வரலாற்றில் வாழ்தல்

எஸ்.பொ. சுமார் 2000 பக்க அளவில் உள்ள இரண்டு தொகுதிகள் கொண்ட இந்த நூலுக்கு 'வரலாற்றில் வாழ்தல்' என்ற தலைப்பிட்டு இருக்கிறார். தன் வரலாற்றைத் தானே எழுதுவதற்குத் துணிவு தேவை. அத்துடன் ஆழமான, விரிவான, வாழ்வியல் அனுபவங்கள் தேவை. அன்றியும், தன் வரலாற்றை எழுதுபவர், ஒரு சாதனையாளராகவும் இருந்தாக வேண்டும். இப்படி எழுதும்போது தன்னைத் தானே பெருமைப்படுத்திக் கொள்வதாகவும் தன் வரலாறு அமைந்துவிடக்கூடும். இப்படி எழுதுவது ஒரு விபத்தாகி விடலாம்.

எஸ்.பொ. என்னக் காரணங்களை முன் வைத்து தன் வரலாற்றை இத்தனை விரிவாக எழுதி இருக்கிறார்? 70 ஆண்டு தன் ஆயுட்காலத்தை எழுதி வைப்பதில் யாரும் தவறு காண முடியாது. எஸ்.பொ. எழுதுவதற்கு அழுத்தமானக் காரணங்கள் பல உள்ளன. தன் பெருமை சொல்வதற்காக எழுதவில்லை என்று பலமுறை கூறுகிறார். நாமும் நம்புகிறோம். ஒரு சமயம் எஸ்.பொ. விரிவாகத் தன் வரலாற்றை எழுதி வைக்கவில்லை என்றால் எஸ்.பொ.வினுடைய விரிவான, செறிவான ஆளுமையை நம்மால் அறிய முடியாது. எஸ்.பொ.வோடு நானும் பழகியிருக்கிறேன்.

ஆனால் என் கைகளுக்கு அடங்காத, எட்டாத பேராற்றலோடு இப்பொழுது எனக்கு எஸ்.பொ. தெரிகிறார். நான் என்னதான் முயன்றாலும் அவரது ஆளுமையைத் தொட முடியாது.

"வரலாற்றில் வாழ்தல்" என்று இந்த நூலுக்குச் சரியாகவே தலைப்பிட்டுள்ளார் எஸ்.பொ. நாம் எல்லோரும் வரலாற்றில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். வரலாற்றில் நம்மை எந்த அளவுக்கு நாம் கண்டு அறிந்து இருக்கிறோம்? 20 ஆம் நூற்றாண்டில் நான் வாழ்கிறேன் என்றால் இந்தியாவில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் எத்தகைய வரலாற்றுச் சூழல் என்னை பாதித்திருக்கிறது? வரலாறு உலக அளவில் ஆனது. வரலாற்றில் நாம் வாழ்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளாமல் தன் கல்வி, தன் குடும்பம், தன் பதவி, தன் தொழில் என்ற அளவில் தன்னைச் சுருக்கிக் கொள்பவர் வரலாற்றைத் தனக்குள் வாழ்ந்தவர் ஆகமாட்டார். வரலாறு எத்தனை வளங்களை, ஆற்றல்களை, அறிவை, கலை உணர்வை நம்முன் கொட்டி வைத்திருக்கிறது! இவற்றில் எந்த அளவுக்கு நமக்குள் சேகரித்துக் கொள்கிறோம்? எந்த அளவுக்கு அதிகம் சேர்க்கிறோமோ அந்த அளவுக்கு வலிமையுடையதாக அழகியதாக நம் வாழ்க்கை மாற முடியும். எந்தக் கலாச்சார சூழலுக்குள், எந்த மொழிக்குள் நாம் வாழ்கிறோமோ இயன்ற அளவுக்கு அவற்றை நமக்குள் செரித்துக் கொள்ள வேண்டும். இதற்காக நாம் என்னவெல்லாம் செய்ய வேண்டும்? படிக்க வேண்டும். ஓயாமல் படிக்க வேண்டும். பல திசைப் படிப்பறிவு நமக்குத் தேவை. நூற்றுக்கணக்கானவரிடமிருந்து நமக்கு அறிவை சேகரித்துக் கொள்ள வேண்டும். மண்ணின் மரபில் நாம் ஊற வேண்டும். வரலாறு நமக்குள் எழுந்து நிற்க வேண்டும். நான் தனியன் இல்லை. வரலாறு எனக்குள் இயங்குகிறது. நான் யாருக்கும் மடங்க மாட்டேன். என் வாழ்க்கை என்னோடு தொடங்கியதில்லை, முடிவதும் இல்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் மனித வரலாறு எனக்குள் இயங்குகிறது, என்னை உருவாக்கியுள்ளது. வரலாறு பேராறு. இந்த ஆற்றில் நான் குளித்து எழுகிறேன். எனக்குள் எத்தனை பேரை நான் தரிசிக்கிறேன். சாக்ரட்டீஸ், புத்தர், ஏசு என்று சொல்லத் தொடங்கினால் எத்தனை நூறு பேர்களை நாம் சொல்ல முடியும்? நவீன கால உலகில் வாழ்கிறேன். மார்க்சியம்தான் என் வாழ்வுக்கு உயிர்ப்பு ஆகிறது. மார்க்ஸ் கண்டுபிடித்த பிறகுதான் சமதர்மம் எனக்குத் தெரிய வந்தது என்பது உண்மை இல்லை.

மனித வரலாற்றில் சாரமாக விளங்குவது சமதர்மம். வள்ளுவர் முதலியவர்கள் இயல்பாக இந்தச் சமதர்ம உணர்வைப் பெற்றிருக்கின்றனர். ஆதிப் பொதுமைச் சமூகம் வரலாறு நெடுகிலும் ஆழ்ந்த நீரோட்டமாக எல்லலோருக்குள்ளும் தொடர்கிறது. என்னென்னவோ சக்திகள் இந்த நீரோட்டத்தை மறைக்கின்றன. தனியுடமை, அரசதிகாரம், சாதி, மதம் முதலியவை இந்த சக்திகள். இவை மனிதனின் ஆளுமையை அழிக்கவும் செய்கின்றன. இவற்றைக் கடந்து வரலாற்று நீரோட்டத்திலிருந்து சமதர்ம உணர்வைத் தனக்குள் மனிதன் வளர்த்துக் கொள்ள வேண்டும். தமிழன் இந்தப் பேற்றை கூடுதலாகவே பெற்றுள்ளான். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இந்த ஆளுமையை தமிழன் தனக்குள் பெற்றுள்ளான்.

5000 ஆண்டு என்றும் 10,000 ஆண்டு என்றும் தமிழனின் தொன்மை குறித்துச் சொல்வதில் தவறில்லை. சமதர்மம் என்ற பேருணர்வு தமிழ் சமூகத்தினுள் நிலைப்பெற்று இருந்ததன் காரணமாகவே இவன் ஆரியத்திற்கு அடிபணியவில்லை. இன்றளவும் சமநீதிக்காக, சமூக நீதிக்காகத் தமிழன் போராடுகிறான். இந்தப் பேருணர்வை தனக்குள் தாங்கியவன் தான் அசலான தமிழன். இந்தப் பேருணர்வின் ஆளுகையைத் தனக்குள் கண்டு வளர்த்துக் கொள்ளாதவன் போலித் தமிழன். இவன்தான் தன்னையும், தன் தமிழையும், தன் நிலத்தையும், தன் அரசியலையும், பொருளியலையும் அன்னியருக்கு விட்டுக் கொடுப்பவன். தமிழ் என்று சொல்லியே தமிழனை அழிப்பவன் இந்தப் போலித் தமிழன்.

எஸ்.பொ. தமிழனின் இந்த வரலாற்றைத் தனக்குள் வாழ்கிறார். தமிழ்த்துவம் என்று இதற்கு பெயரிடுகிறார். இந்துத்துவதத்திற்கு இது எதிரானது என்று பலமுறையும் சொல்லுகிறார். நாம் ஏற்கிறோம். தமிழகத்தில் திராவிடம் என்று பேசியவர்கள் தமிழை வளர்க்கவில்லை. வாழ்விக்கவில்லை. தமிழ் மக்களை இவர்கள் அலங்கார பேச்சுகளின் மூலம் ஏமாற்றுகிறார்கள். இந்த உண்மையை தமிழ்நாட்டில் கல்விகள் கற்ற அந்தக் காலத்திலேயே இவர் உணர்ந்து, அறிந்து எடுத்துரைக்கிறார்.

தமிழை, தமிழ் இலக்கியங்களை இவர் கொண்டாடுகிறார். இவர் தமிழ்த்துவம் என்று கூறுவதை நாம் தமிழியம் என்று தற்காலத்தில் சொல்லுகிறோம். தமிழ்த் தேசியம் என்று இவர் தொடர்ந்து பேசுகிறார். இலங்கையில் இடதுசாரிகள் என்றும்,

முற்போக்குவாதிகள் என்றும், மார்க்சியர் என்றும் – அறியப்பட்டவர்களிடம் தொடக்க முதலே தமிழ்த் தேசியம் என்ற பேருணர்வு இல்லை. தந்தை செல்வ நாயகம் தமிழ்த் தேசியம் என்ற விதையை ஈழத்தமிழன் நெஞ்சில் விதைத்தார். அது இன்று ஆலமரமாக கிளை பரப்பி வளர்ந்துள்ளது. தமிழ் மக்களுக்கு ஒரு தாயகம் என்ற முறையில் மாபெரும் போரை அது கிளப்பி உள்ளது. இந்தப் போர்க் குரல் என்றைக்கும் ஓயாது. இந்த உண்மையை மார்க்சியர் அறிந்திருக்க வேண்டும். இந்த உண்மைக்கு மார்க்சியர் முகங்கொடுக்காததற்கு என்ன காரணம்? ஈழத்தில் மட்டுமா இந்த போக்கு! தமிழகத்திலும் மார்க்சியர் இதைத்தானே செயல்படுத்தினர். ஜீவாவுக்கு இவர்கள் என்ன மரியாதை தருகின்றனர்? ஜீவாவின் தமிழ்த் தேசியம் இவர்களுக்கு எந்த அளவில் உடன்பாடு. இதே கேள்வியை கைலாசபதி முதலியவர்களை நோக்கி எஸ்.பொ. ஓயாமல் கேட்கிறார். 'ஒரு தேசம் – இரண்டு மொழி' என்பது இவ்வர்களின் கோட்பாடு.

இலங்கையின் வரலாற்றை எஸ்.பொ. ஆராய்கிறார். இவர் கல்லூரியில் படித்தது வரலாற்றுப் பாடம். இலங்கையில் பல கல்வி நிலையங்களில் வரலாற்று ஆசிரியராகவும் பணி புரிந்திருக்கிறார். ஒரு வகையில் இவர் தமிழ்ப் பேராசிரியராக இல்லாதது தமிழுக்கும் நன்மையாக விடிந்து இருக்கிறது. தமிழ் மட்டுமே கற்பவர் சுயமான வரலாற்று ஆய்வில் ஈடுபடுவது இல்லை. தமிழின் பெருமை பேசுவதே அவர்களுக்குப் போதுமானது. தொடக்க முதல் தமிழ் உணர்வு மிக்கவர் எஸ்.பொ. இலங்கையின் ஆதிக்குடிகள் யாராக இருந்திருக்கக் கூடும்? என்ற கேள்விக்கு இவர் சொல்லும் பதில், இலங்கையின் ஆதிக்குடிகள் வேடர்களும், நாகர்களும் என்கிறார். இவர்களின் மொழி தமிழ் அல்லாமல் வேறு என்னவாக இருந்திருக்கக் கூடும்? தொன்மைக் காலத்தில் இந்தியாவில் பரந்து வாழ்ந்தவர்கள் நாகர்கள். இவர்களை திராவிடர் என்கிறார் அம்பேத்கர். இவர்களைத் தமிழர்கள் என்று எஸ்.பொ. கூறவில்லை.

தமிழர்களைப் போலவே சிங்களவர்களும் வந்தேறிகள் என்கிறார். மணிமேகலையில் கூறப்படும் மணிப் பல்லவத் தீவு முதலியவை இலங்கையைச் சேர்ந்த தீவுகள். இலங்கை என்பது தொடக்க கால முதலே ஒரு தேசமாக இருந்ததில்லை. தமிழர்கள் நெடுங்காலம் ஒரு தேசமாக வாழ்ந்திருக்கிறார்கள். சிங்களவர்களும் அதே போல வாழ்ந்தவர்கள். கண்டி என்பது இன்னொரு தேசம். இப்படி நிறைய

விவரங்கள் சொல்லுகிறார். போர்சுக்கீசியர் உல்லாந்தர் வருகையைத் தொடர்ந்து ஒரு தேசம் ஏற்பட்டு விடவில்லை ஆங்கிலேயர் இலங்கையை விட்டுச் சென்றவுடன் தமிழர்கள் தமக்கான தேசத்தில் வாழமுடியும் என்று நம்பி இருந்தனர். சோல்பெரி ஆணைக்குழு இலங்கையை ஒரு தேசமாக்கியது. பண்டார நாயகா இலங்கை அரசின் ஆட்சி மொழியாக இருந்த ஆங்கிலத்தை அகற்றினார். இது ஒரு முற்போக்கான திட்டம். தமிழும் சிங்களமும் இனி ஆட்சி மொழி ஆக முடியும். ஆனால் இது நடைபெற முடியவில்லை.

இலங்கையின் தேசிய மதம் பௌத்தம் ஆயிற்று. இலங்கை சிங்களவர் நாடாயிற்று. தரப்படுத்தல் முறை வந்தது. தமிழர்களின் வாழ்வு நெருக்கடிகளுக்கு உள்ளாயிற்று. தமிழர் மெல்ல மெல்ல விழித்துக் கொண்டனர். தமிழர் பகுதிகளில் சிங்களக் குடியேற்றங்கள் நடைபெற்றன. தமிழர் தன் தாயகத்தை மீட்கப் போரில் குதித்தனர். ஜெயவர்தனா ராஜீவ்காந்தியை ஏமாற்றினார். இந்திய அமைதிப்படை தமிழர் பகுதிகளில் புரிந்த அக்கிரமங்களுக்கு அளவில்லை. ஸ்ரீமதி பண்டாரநாயகா பௌத்த துறவிகளின் உதவியோடு ஆட்சிக்கு வந்தார். இலங்கையின் நெடும் கால வரலாற்றில் பௌத்தத் துறவிகள் ஆட்சியில் உள்ள அதிபரின் மனைவியோடு கொண்டிருந்த உறவை விரிவாகச் சொல்கிறார்.

இந்திய வரலாறு பற்றியும் எஸ்.பொ. அங்கங்கே தன் கருத்துக்களைக் கூறுகிறார். நேருவைச் சாடுகிறார். இலங்கையில் வாழ நேர்ந்த இந்தியர்களுக்கு நேரு நியாயம் செய்யவில்லை என்கிறார். திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசியலைக் கடுமையாக விமர்சனம் செய்கிறார். சிங்கள அரசோடு ஒத்துழைத்த மார்க்சிய கட்சியினரைச் சாடுகிறார்.

"வரலாற்றில் வாழ்தல்" என்ற எஸ்.பொ.வின் தன் வரலாற்று நூல், அவரே அடிக்கடி கூறுகிறபடி, மறைக்கப்பட்ட வரலாற்றை, உண்மைகளைக் கண்டறிந்து வரலாற்றை நேர்ப்படுத்துகிற ஒரு முயற்சியாக இருக்கிறதே என்கிறார். வரலாற்றை நேர்படுத்துவதற்குத் தேவையான ஆதாரங்களை வெளிப்படுத்துகிற ஆவணங்களைத் தொகுக்க வேண்டும் என்று பல இடங்களிலும் சொல்லுகிறார். முற்போக்கு எழுத்தாளர் சங்கம் பற்றி சுபேர் இளங்கீரன் எழுதிய நூலில் உள்ள கடுமையான தவறுகளை விடாப்பிடியாகச் சுட்டிக் காட்டுகிறார். முற்போக்கு எழுத்தாளர்

சங்கம் தோன்றுவதற்கு முன்பே, யாழ்ப்பாணம், மட்டக்களப்பு போன்ற பகுதிகளில் செயல்பட்ட மார்க்சியர்களை ஆவணப்படுத்துகிறார். இராமநாதன் முதலியவர்களை குறிப்பிடுகிறார். இந்தப் பட்டியல் மிக விரிவானது. கைலாசபதி தான் முதல் மார்க்சியத் திறனாய்வாளர் என்பது உண்மையில்லை. அரசைச் சார்ந்து இயங்கிய கைலாசபதி அவர்கள், டொமினிக் ஜீவா போன்ற இரண்டாம் தரப் படைப்பாளிகளுக்கு இலங்கை சாகித்ய மண்டலப் பரிசுகளை வழங்கச் செய்தார். எஸ்.பொ.வின் வீரியம் மிகுந்த படைப்புகளை புறக்கணித்தார். கே. டேனியல், டொமினிக் ஜீவா முதலியவர்கள் எஸ்.பொ.வின் நெறிபடுத்துதலோடு நல்ல படைப்புகளைத் தந்தவர்கள். படைப்பு இலக்கியத்திற்குள் அரசியலை முதல்நிலைப்படுத்தியதன் மூலம் தமிழ் இலக்கியத்திற்கு கைலாசபதி முதலியவர்கள் ஊறு செய்தார்கள். இவர்களின் அரசியலும் தமிழ் மக்களின் நலன்களுக்கு எதிராகவே இருந்தது.

கைலாசபதியின் நண்பராகிய இந்திர பாலா தமிழர் பகுதிகளில் தொடக்க கால முதலே சிங்களவர் இருந்தனர் என்று வரலாற்றைத் திரித்துக் கூறினார். சுயமான படைப்பு முயற்சிகள் தங்களுக்குத் தேவை என்ற முறையில் தென்னிந்தியப் பத்திரிக்கைகளின் படையெடுப்பை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தடுத்தது என்பது இன்னொரு வரலாற்றுத் திரிபு.

ஈழத்தமிழர் என்றவுடன் யாழ்ப்பாணத் தமிழர் தான் முன்னிலைக்கு வருகின்றனர். யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த வேளாளர்கள் தான் இந்த வரலாற்றுத் திரிபுக்குக் காரணமாகின்றனர். ஆறுமுக நாவலர் தமிழ் உரை நடை வளர்ச்சிக்குச் சேவை செய்தார் என்ற உண்மையை மறுப்பதற்கில்லை. கிறித்தவர்களுக்கு எதிராக அவர் சைவத்தை உயர்த்திப் பேசினார். வேளாளர் சாதியை உயர்த்திப் பிடித்தார். 'செட்டிச்சியின் கதை' என்று சிலப்பதிகாரத்தை ஒதுக்கி வைத்தார். ஆறுமுக நாவலரைப் போலவே தமிழின் ஆக்கத்திற்குப் பெருமளவில் பாடுபட்டவர் விபுலானந்தர். அவர் மட்டக்களப்பைச் சேர்ந்தவர் என்பதனால் அவரை யாழ்ப்பாணத்தார் பொருட்படுத்தவில்லை. தமிழர்களின் யாழ் என்ற அற்புதமான இசைக் கருவியை மீண்டும் கண்டறிந்தவர் விபுலானந்தர். மட்டக்களப்புப் பகுதியில் தமிழின் மிகச் சிறந்த இலக்கியம் என்று சிலப்பதிகாரத்தை முன் வைத்தார்.

உலகத் தமிழ் மாநாட்டை யாழ்ப்பாணத்தில் தான் நடத்த வேண்டுமென்ற தமிழ் உணர்வாளர்களின் கருத்தை சிங்கள அரசு தொடக்கத்தில் புறக்கணித்ததோடு கொழும்பில் தான் நடத்த வேண்டும் என்று கூறினார்கள். கைலாசபதி போன்றவர்கள் சிங்கள அரசின் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். உலகத் தமிழ் மாநாட்டில் அவர்களது பங்களிப்பு சிறப்பானதாக இல்லை.

எஸ்.பொ. விடாப்பிடியாக வற்புறுத்துகிற இன்னொரு உண்மை - மார்க்சியர் - முற்போக்காளர்கள் அல்லாத அசலான தமிழ் அறிஞர்களின் ஆய்வுகளை நாம் மதிக்க வேண்டும் என்பதாகும். தமிழின் நெடுங்கால மரபைப் புறக்கணித்து விட்டு படைப்பிலக்கியத்தை முன் நிறுத்துவது எந்த வகையில் தமிழுக்கு வளம் சேர்ப்பதாக இருக்க முடியும்? யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலும் தன் காலத்திற்கு முன் வாழ்ந்த தமிழ்ப் பெரும் புலவர்களின் ஆக்கங்களை மறைப்பது எப்படி நீதியாகும்? அன்றியும், தம் சமகாலத்தில் வாழ்ந்து தமிழின் ஊழியத்தில் தம்மை முற்றாக இணைத்திருக்கிற கணபதிப் பிள்ளை, வித்யானந்தன், மகாவித்வான் நடராஜா, தனஞ்செய சிங்கம் முதலிய நூற்றுக்கணக்கான தமிழ் அறிஞர்களை ஒதுக்கிவிட்டு கைலாசபதி தன் சீடர்களையும் தன்னையும் முன்னிறுத்துவது எந்த வகையில் நியாயமாகும்? நூல் நெடுகிலும் இத்தகைய கேள்விகளை விடாப்பிடியாக கேட்கிறார் எஸ்.பொ. ஏராளமான தமிழ் அறிஞர்கள் பற்றி தொடர்ந்து குறிப்பிடுகிறார். இப்படி எல்லாம் செய்வதன் மூலம் வரலாற்றை நேர்படுத்துகிறார் எஸ்.பொ.

எஸ்.பொ. குறிப்பிடும் தமிழ் அறிஞர்கள், படைப்பாளிகள் ஆகியவர்களின் ஆய்வுகள் மற்றும் படைப்புகளை இந்த நூலில் இருந்து நாம் நிதானமாகத் தொகுக்க வேண்டும். உண்மையில் வரலாற்றை நேர்படுத்துகின்ற எஸ்.பொ.வின் இந்த முயற்சி தான் இந்த நூலில் ஆக்கத்திற்கான முதற்காரணம். கைலாசபதி, சிவத்தம்பி முதலியவர்களின் திறனாய்வுகளை எஸ்.பொ. குறை காண்கிறார். எனினும் இத்தகைய ஆய்வுகள் இந்த நூலில் விரிவாக இல்லை.

மேலும் ஒன்று. முற்போக்கு வட்டாரத்தில் செயல்படுகிற இலக்கிய ஆய்வாளர்கள் மற்றும் திறனாய்வாளர்களில் பெரும்பாலானவர்கள் படைப்பில் ஈடுபடுவது இல்லை. படைப்பாக்கத்தில் அனுபவம் பெறாதவர்கள் இலக்கிய ஆய்விலும திறனாய்விலும் ஈடுபட்டு உண்மை காண்பது பெரும்பாலும் இயலாது. அன்றியும்,

மார்க்சியத்தோடு உறவு கொள்வதென்பது அரசியலை முதன்மைப்படுத்துவதாக இருக்க வேண்டுமென்பது கட்டாயமில்லை. இப்படி அரசியலை முதன்மைப்படுத்தும்போது இலக்கிய ஆக்கத்திற்கு ஊற்றாக இருக்கிற மனிதனின் ஆழ்மனத்தோடு உறவு கொண்டிருக்கிற படைப்பு இயக்கத்தைக் காண முடியாது. இன்னுமொன்று, மார்க்ஸ் உலகில் தோன்றிய பிறகுதான் மனித விடுதலைக்கான போராட்டங்கள் நடைபெற்றன என்பதில் சிறிதளவும் உண்மை இல்லை. வர்க்கப் போராட்டம் என்பது எல்லாக் காலங்களிலும் எத்தனையோ வடிவங்களில் நடைபெறுகின்றன. வள்ளுவர், இளங்கோ முதலியவர்களை மக்கள் சார்பினர் என மறுத்து, வணிகர் என ஆராய்வது நேர்மையான ஆய்வு முறையன்று. மதமென்ற வடிவத்தின் உள்ளும் நடைபெறுவது வர்க்கப் போராட்டம் என்று கண்டார் எங்கெல்ஸ். தமிழகத்திற்கு மட்டும் இந்த விதி பொருந்தாது என்று ஒதுக்கி விடுவது தமிழ் இலக்கியம் பற்றிய ஆய்வைக் குறைபடுத்தும். இலங்கையில் எஸ்.பொ. முதலியவர்களின் தீவிரமான படைப்பு இலக்கியங்களை முற்றாக புறக்கணித்து முற்போக்கு வாதிகளென்று தம்மைச் சார்ந்தவர்களுக்குப் பரிசுகளும் பதவிகளும் பரிந்துரை செய்ததன் மூலம் தமிழுக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் கைலாசபதி முதலியவர்கள் கேடு செய்திருக்கிறார்கள். எஸ்.பொ. விடாப்பிடியாக கூறும் இந்தக் குற்றச்சாட்டை நம்மால் மறுக்க முடியாது. எஸ்.பொ.வைக் குறித்து புறம் பேசுகின்றவர்களின் உள்நோக்கத்தை நம்மால் எளிதில் அறிந்து கொள்ள முடியும்.

எஸ்.பொ.வின் 'வீ' தொகுப்பில் உள்ள எந்த கதையும் முற்போக்கு இலக்கியம் ஆகாது என்று ஒரு முறை பேரா. சிவத்தம்பி கூறினார். எஸ்.பொவின் 'தீ' முதலிய படைப்புகளில் காமவிகாரங்களே மேலோங்கி உள்ளதனால் இவை முற்போக்கு இலக்கியம் ஆகாது என்று மார்க்சியர் மதிப்பிட்டனர். எஸ்.பொ. இதற்கு பதில் கூறியுள்ளார். காமம் என்பதும் மனிதனுக்கு ஒரு முக்கியமான அனுபவம். இதில் எத்தனையோ விகாரங்களுக்கு இடமிருக்கிறது. மார்க்சியர் என்று தம்மை கருதிக் கொள்பவர்களும் இந்த விகாரங்களை மறைப்படதோடு தங்களைப் புனிதர்கள் என்று இவர்கள் காட்டிக் கொள்கின்றனர். மறைக்கப்பட்ட காம விகாரங்கள் மனிதனுக்குத் தீங்கு செய்கின்றன. இவற்றை எழுத்தில் வடிப்பதன் மூலம் சமூகத்தை கெடுத்து விட முடியாது.

இன்னும் ஒன்றை இங்கு குறிப்பிட வேண்டும். நற்போக்கு இலக்கியமென்று எஸ்.பொ.வும் அவரைச் சார்ந்தோறும் பேசினார்கள். நற்போக்கு இலக்கியம் என்பது மார்க்சியத்திற்கு எதிரானது என்ற முறையில் முற்போக்குவாதிகள் விமர்சனம் செய்தார்கள். முற்போக்கு இலக்கியம் என்றால் என்ன என்பதற்குக் கறாரான வரையறைகள் சொல்வதற்கில்லை. சமூகத்தை முன்னால் நகர்த்துவது முற்போக்கு இலக்கியம் என்றால் இலக்கியம், அரசியல் பேசியாக வேண்டும். கூடவே முதலாளி முதலியவர்களைச் சாட வேண்டும். பாட்டாளிகளைப் புனிதப்படுத்த வேண்டும். வாசகனுக்கு நம்பிக்கை ஏற்படுத்தும் முறையில் தீர்வு சொல்ல வேண்டும். இவை எல்லாம் இலக்கியம் என்பதோடு நேரடியாகத் தொடர்பு கொண்ட கூறுகள் என்று சொல்வதற்கில்லை. இலக்கியம் என்பது மனித வாழ்வை வாழ்வின் அவலத்தை வாழ்வியல் சிக்கல்களைச் சொல்ல வேண்டும். நெருக்கடிகள் மனிதனை மனித தரத்திலிருந்து தாழ்த்துவதையோ, உயர்த்துவதையோ சொல்ல வேண்டும். இலக்கியம் என்பது மனிதனுக்குள் ஒரு ஆழமான உணர்வு. இருக்கிற சூழல் மனிதனுக்கு நிம்மதி தராதபோது அதற்கு எதிரான மனித முயற்சி பற்றி இலக்கியம் சொல்ல வேண்டும். இவற்றையெல்லாம் உள்ளடக்கியது நற்போக்கு இலக்கியம். நற்போக்கு என்பது பிற்போக்காக இருக்க முடியாது.

எஸ்.பொ.வின் இந்தத் தன்வரலாற்று நூலை மேலும் பலர் ஆழமாக படித்து விவாதிக்கும் முறையில் ஒரு தனி கருத்தரங்கு அமைப்பது தேவை. எஸ்.பொ. பற்றி மார்க்சியர் தயங்கித் தயங்கித்தான் பேசுகின்றனர். பலமுறை வற்புறுத்திய பிறகு அறிவும் துணிவும் மிகுந்த ஜெயகாந்தன் சில வாக்கியங்களில் தன் மதிப்பீட்டை முடித்துக் கொள்கிறார். கே. டானியல் தான் தமிழ் இலக்கியத்தின் பிதாமகர் என்று உரத்துப் பேசிய அ.மார்க்ஸ், அவரோடு உரையாடுவதற்காகவே அவர் இசைவோடு சென்ற எஸ்.பொ.வை. சந்திக்கவில்லை. இவை மட்டுமல்லாமல், முற்போக்குவாதிகள் படைக்கும் இலக்கியத்திற்கும் அப்பால் இவர்கள் பார்வை செல்வதில்லை. என்னதான் மார்க்சியத்தோடு இணைந்து நெருக்கமாகச் செயல்பட்டாலும் இன்குலாப் முதலியவர்களை இவர்கள் பொருட்படுத்தவில்லை. இந்த வகையில் மார்க்சியத்தை இவர்கள் வரட்டுத்தனமாக மாற்றுகின்றனர். இதன் காரணமாகவே மூன்றாம் தர இலக்கியவாதிகளை முன்னிறுத்துகிறார்கள். இலக்கியம்

குறித்து ஆழமான பார்வை இவர்களுக்குள் இல்லை. எஸ்.பொ.வின் படைப்பாற்றலைக் கண்டு கொள்ளாத அளவுக்கு பார்வையற்றவர்களாக இருக்கிறார்கள். இதன் காரணமாகத் தான் ஆளுமையையும் வளர்த்துக் கொள்வதில்லை.

இந்த நூலில் எஸ்.பொ. தொடர்ந்து வெளியிடும் இன்னொரு கருத்து 21-ஆம் நூற்றாண்டில் புலம்பெயர்ந்த ஈழத் தமிழர்களின் படைப்புக்கள்தான் தமிழில் முதலிடம் பெறும் அல்லது ஈழத்தமிழ் படைப்பாளிகள்தான் தமிழில் சிறந்த படைப்பாளிகளாக விளங்குவார்கள். இப்படி எஸ்.பொ. மலேசியக் கருத்தரங்கு ஒன்றில் தன் கருத்தை வெளியிட்டபோது, பிரபஞ்சன் முதலியவர்கள் இவரின் கருத்தைக் கடுமையாக மறுத்து பேசியிருக்கின்றனர். இந்த விவாதம் இன்னும் தொடர்வதாகவே நாம் கருதலாம்.

தமிழ்நாட்டின் அரசியல் முதலிய சூழல் பற்றி நாம் பெருத்த நம்பிக்கையோடு பேசுவதற்கில்லை. தமிழகத்தில் ஆற்றல்மிக்க படைப்பாளிகள் தொடர்ந்து சிறப்பான படைப்புக்கள் தருகின்றனர் என்பதையும் மறுப்பதற்கில்லை. இந்த படைப்புகளின் தரம் பற்றி இப்போது நாம் பேச வேண்டாம். இவை தமிழனுக்கான, தமிழனின் ஆக்கத்திற்கான, தமிழனின் விடுதலைக்கான படைப்புகளாக இருக்கின்றனவா? என்ற கேள்வியை முன்னிருத்தி நாம் பதில் சொல்லக் கடமைப்பட்டவர்கள். இவை இப்படியில்லை என்பதை உறுதியாகச் சொல்லிவிடலாம்.

ஈழத்தமிழ் படைப்பாளிகள் ஒரு கடுமையான போர்ச் சூழலில் இருந்து படைக்கிறார்கள். இவர்களுக்கு இழப்பதற்கென்று எதுவும் இல்லை என்ற சூழலில் பெரும்பாலும் வாழ்கிறார்கள். வாழ்வா? சாவா? என்ற கூர்மையான கேள்வியோடு இன்னும் வாழ்கிறார்கள். வாழ்க்கை வசதிகள் இவர்களுக்குப் பேரளவும் இல்லை. புலம் பெயர்ந்து சென்ற இவர்கள் அங்கெல்லாம் எத்தனையோ எடுபிடி வேலைகளில் ஈடுபட்டு இருக்கிறார்கள். இவர்களுக்குத் தான் தம் தேசம் பற்றி, கலாச்சாரம் பற்றி, தம் மொழி பற்றி உணர்வு இருக்கிறது. இவை எல்லாவற்றையும் இவர்கள் திரும்பப் பெற்றாக வேண்டும். இதற்காக இவர்கள் படைப்பில் ஈடுபடுகிறார்கள் என்றால் வாழ்வில் உயிர்த்துடிப்பு இத்தகைய படைப்புகளில் தான் வெளிப்படும். உண்மையில் தமிழ் என்னும் அற்புதமான மொழியை இவர்கள் தான் இனி உலகில் காப்பாற்றி வைப்பார்கள். தமிழன் என்ற பெயருக்கும் தகுதிக்கும் முதல் உரிமை உடையவர்கள் இவர்கள்தான்.

இவர்களினுள்ளும் போலிகள் இருக்க வாய்ப்பு உண்டு. இவர்களை வைத்துப் படைப்பு இலக்கியத்தின் ஆற்றல் குறித்து நாம் பேச வேண்டியதில்லை.

தமிழகத்தைப் பொறுத்தவரை ஈழப் படைப்பாளிக்கு, நேர்ந்திருக்கிற நெருக்கடிகள் இங்குள்ள தமிழனுக்கில்லை. தமிழில் எழுதும் படைப்பாளிக்கு வரலாறு பற்றி, மெய்யியல் பற்றி, தமிழின் மீட்சி பற்றி உலக அளவிலான நெருக்கடிகள் பற்றி அக்கறை இல்லை. இவனால் இன்னும் வம்புவழக்குகள், தற்பெருமைகள் முதலியவற்றில் வாழ்ந்து விடமுடியும். வரலாற்றில் தமிழனுக்கு என்ன நேர்ந்தது என்ற அறிவு இவனுக்குத் தேவையில்லை. இவனுக்கு மார்க்சியம் ஆகாது. பெரியாரும் இவனுக்குப் பிடிபட முடியாது. ஈழத்தில் நடைபெறும் விடுதலை இயக்கம் இவனுக்கு ஒத்துக் கொள்ளாது. அடித்தள மக்களை சுரண்டி வாழ்வதற்கான வாய்ப்புக்கள் இவனுக்கு நிறையவே உள்ளன. ஆதிக்கத்தோடும் இவன் இருக்கிறான். இவனும் தமிழனைச் சுரண்டி, தன் மகிமை சொல்லி, அவனை முட்டாளாக்கி, தன்னை வழிபடச் செய்து வாழ்கிறவன்.

இப்படி எவ்வளவோ சொல்வதற்கு இடம்மிருந்த போதிலும் 21–ஆம் நூற்றாண்டில் என்னவெல்லாம் நேரும் என்று சொல்வதற்கில்லை. தமிழகத்திலும் சில அற்புதமான படைப்பாளிகள் இருக்கின்றனர். இவர்களை நாம் குறைத்துப் பேசுவதற்கில்லை. இவர்களின் படைப்புகளும் 21–ஆம் நூற்றாண்டில் முதல் நிலைக்கு வரக் கூடும்.

சனவரி 2004

## தொல்காப்பிய ஆய்வுகள் குறித்து...

ஆய்வுக்கென ஒரு குறிப்பிட்ட நோக்கம் இல்லாமல் ஆய்வைச் செய்ய முடியாது. வெறும் முனைவர் பட்டம் பெறுவதற்கான ஆய்வு குறித்து இங்கு சொல்ல வேண்டியதில்லை. ஏதோ ஒரு வகையில் சமூக அக்கறை இல்லாமல் ஆய்வுகள் செய்யப்படுவதும் இல்லை. தமிழ்ச் சூழலில் பழைய இலக்கியங்கள் குறித்த ஆய்வுகளுக்குப் பல குறிப்பிட்ட நோக்கங்கள் இருக்கின்றன. பழம்பெருமை பாராட்டுவது என்பதுவும் ஒரு நோக்கம். மேற்கத்தியருக்கு நாங்கள் சளைத்தவர்கள் இல்லை என்று நமக்கு நாமே மெய்ப்பித்துக் கொள்வதும் கூட ஒரு நோக்கம். உண்மையில் பழந்தமிழ் இலக்கியங்களில் நம் காலத்திற்கும், நம் தேவைகளுக்கும் ஒத்த முறையில் மீட்டுக் கொள்வதற்கு எவை உள்ளன என்று கண்டறிவதும் ஒரு நோக்கமாக இருக்க முடியும். ஆய்வுக்கு இப்படிச் சில நோக்கங்கள் அமைவதை நாம் புரிந்து கொள்ள முடியும்.

இன்னும் ஒரு நோக்கம். இன்றையச் சூழலில் இந்திய அளவில் மட்டுமல்ல உலக அளவிலும் ஒரு கடுமையான நெருக்கடிச் சூழலில் தமிழ் மக்களாகிய நாம் இன்று வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நெருக்கடிச் சூழல் என்று குறிப்பிடுவது கூட இங்கு பொருந்தாது.

கடுமையான நெருக்கடிகளுக்குள் நாம் மாட்டிக் கொண்டிருக் கிறோம் என்று சொல்வதே பொருந்தும். இங்கு நெருக்கடிகளை இப்பொழுது நான் விவரிக்க வேண்டியதில்லை. நிலம், நீர் முதலிய இயற்கை மட்டுமல்லாமல் உழவர்கள், கைவினைஞர்கள் முதலியவர்களை முதற்குடிமக்களாகக் கொண்டுள்ள தமிழ்ச் சமூகம், இந்த நெருக்கடிகளின் தாக்குதலை, கடுமையை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. தமிழ் மக்களின் பொருளியல், அன்னியர் கைவசப்படுவது அதிகரித்து வருகிறது. அரசியலில் தமிழ் மக்களுக்குரிய இடம் ஒடுக்கப்படுகிறது. மனித வாழ்வில் ஊழல்கள் மலிந்து வரும் நிலையில், அறம் முதலிய உணர்வுகள் அழிக்கப்படுகின்றன. இப்படிச் சுருக்கமாகச் சொல்வது இப்போதைக்குப் போதும். இத்தகைய நெருக்கடிச் சூழலைப் புறக்கணித்து விட்டு இன்று பழம் பெருமை பேச முடியாது. பழங்காலச் சூழலில் நாமும் தான் சிலவற்றைச் சாதித்தோம் என்று சொல்லி மகிழ்வது போதாது. இந்த நெருக்கடிகளை நாம் எப்படி எதிர் கொள்ளப் போகிறோம் என்ற உணர்வோடு தான்

ய்வுகளைச் செய்ய முடியும் இத்தகைய நோக்கம் இல்லாமல் சய்யப்படும் ஆய்வுகள் குறித்து நாம் கவலை கொள்ள வண்டியிருக்கிறது.

தொல்காப்பியம் குறித்து அண்மையில் சில தரமான ஆய்வுகள் ந்துள்ளன. எப்பொழுதுமே தமிழ் உணர்வுடைய நம்மவரை தால்காப்பியம் ஈர்க்கத்தான் செய்கிறது. இப்படி ஈர்ப்பதற்குச் சில ரணிகளை நம் ஆய்வாளர்கள் திரும்பத் திரும்ப சால்லுகிறார்கள். எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமல்லாமல் னித வாழ்வுக்கும் தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். ப்படிச் சொல்வதற்கான தேவை என்ன என்ற முறையில் பொருள் லக்கணத்தை ஆய்வாளர்கள் எடுத்துக் கொள்ளுகின்றனர்.

தொல்காப்பியம் எழுதப்பட்ட தொன்மைக் காலம் குறித்தும் ராட்டிச் சொல்கின்றனர். 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் லைக்கான நூல் தொல்காப்பியம். இப்படிச் சொல்வது கூட முத்தமான தமிழ் உணர்வாளர்களுக்கு உடன்பாடில்லை. இவர்கள் 00 / 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டது தொல்காப்பியம் என்று கூற ரும்புகின்றனர். இந்தியாவில் தமிழ் இனத்தின் தொன்மையை ற்றும் மேன்மையைச் சொல்வதற்கு தொல்காப்பியம் தோன்றிய லத்தை இப்படிச் சொல்கின்றனர்.

பொருள் இலக்கணம் என்பது மனித வாழ்வு குறித்த இலக்கணம் ன்பதைக் காட்டிலும், இலக்கியம் குறித்த இலக்கண நூல் என்று சால்வது இன்னும் கூடுதலாகப் பொருந்தும் என்றும் சில ய்வாளர்கள் கூறுகின்றனர். தொல்காப்பியத்திற்கு முற்பட்ட தமிழ் லக்கண நூல் இருந்திருக்கக்கூடும் என்பதற்கும் தொல்காப்பியரின் ல கூற்றுக்களை ஆதாரமாக்குகின்றனர். சங்க இலக்கியத்திற்குத் தால்காப்பியம் முற்பட்டதா? அல்லது பிற்பட்டதா? என்றும் ய்வுகள் உள்ளன. இந்தியாவின் மிகத் தொன்மையான மொழி டமொழிதான், தொன்மையான நாகரிகம் ஆரிய நாகரிகம் தான் ன்றெல்லாம் பலர் உரிமை கொண்டாடிய சூழலில் தால்காப்பியம் குறித்து இப்படி எல்லாம் சொல்ல வேண்டி ருந்தது. இப்படிச் சொல்வதற்கான வரலாற்றுத் தேவையை நாம் றுப்பதற்கில்லை. எந்த வகை ஆய்வும் சமகால வரலாற்றின் தவையை உள்வாங்கிக் கொண்டதாகத்தான் இருக்கவும் முடியும். ரலாற்றுத் தேவையை ஒதுக்கிவிட்டுச் சுயமான ஆய்வு என்று தையும் செய்வதும் சாத்தியம் இல்லை.

தொல்காப்பிய ஆய்வை இந்த நோக்கில் இன்றும் சிலர் முதன்மைப்படுத்துவது நமக்கு உடன்பாடில்லை. நாம் எதிர்கொண்டுள்ள நெருக்கடிகள் இன்னும் கூடுதலானவை. மேற்கத்தியரின் ஆதிக்கத்தையும் இன்று நாம் எதிர்கொள்ள வேண்டி இருக்கிறது. பழம் பெருமை சொல்லி இன்று நாம் ஆமையைப் போல ஒடுங்கிக் கொள்ள முடியாது. இன்று தமிழையும், தமிழ் மக்களையும் வாழ்விப்பதற்கான உறுதியான நோக்கங்களை எந்த வகை ஆய்வினுள்ளும் நாம் முன்னிறுத்த வேண்டும். எந்தப் பெருமை சொல்லியும் இன்று நாம் வாழ்ந்து விட முடியாது. மரபினுள் இருக்கும் ஆற்றலை இன்று நாம் சரியான முறையில் உள்வாங்கிக் கொள்வதும்கூடப் போதுமானதாக இருக்கவும் முடியாது. இன்றைய சூழலுக்குத் தேவையான ஆய்வுகளிலும் நாம் ஈடுபட வேண்டும். எல்லாக் களங்களினுள்ளும் இவ்வகை ஆய்வுகள் தொடர வேண்டும். மொழி, இலக்கியம் என்ற வகையில் கூட நம் ஆய்வுகளை சுருக்கிக் கொள்ள முடியாது. இன்றைய வாழ்வியல் என்பது அரசியல், பொருளியல் முதலிய எவ்வளவோ களங்களை உள்ளடக்கியது. இன்று தமிழன் தலை நிமிர்ந்து உறுதியுடன் நின்றாக வேண்டும். இதற்குப் பழந்தமிழ் ஆய்வுகள் பயன்படுமா? என்ற கேள்வியோடு இன்றுள்ள நெருக்கடிகளை நாம் எதிர்கொள்ள வேண்டும்.

2.

**அ**ண்மையில் நான் படித்த தொல்காப்பியம் குறித்த ஆய்வுகள் எனச் சிலவற்றை இப்பொழுது பார்க்கலாம். முதலில் தொல்காப்பியத்தையும், 'சாரகசம்கிதை' என்னும் வடமொழியில் எழுதப்பட்ட மருத்துவ நூலையும் ஒப்பிட்டுப் பேராசிரியர் நெடுஞ்செழியன் எழுதி உள்ள நூலை இங்கு குறிப்பிடலாம். சாரகசம்கிதையைப் பார்ப்பனர்கள் மதிக்கவில்லை. மருத்துவம் என்பது நோய்கள் குறித்த ஆய்வுத் துறை. நோய்கள் அறுவறுப்பானவை. ஆகவே பார்ப்பனர் மருத்துவர்களை மதிக்கவில்லை. ஆனால் மனித உடலுக்கு வரும் நோய்கள் குறித்து ஆய்வு செய்யாமல் இருக்க முடியாது. இந்த ஆய்வில் ஈடுபட்டவரைத் தாழ்ந்த சாதியர் என்று தான் பார்ப்பனர் ஒதுக்கி வைத்தனர். மருத்துவ ஆய்வு செய்ய வேண்டுமானால் மனித வாழ்வை, உடம்பைப் பொருட்படுத்தி ஆக வேண்டும். நோய்கள் குறித்த ஆய்வுகள் முதலியவற்றை செய்வதற்கான தர்க்கமும், மெய்யியலும் இருந்தாக வேண்டும். சாரகசம்கிதையில் இடம்பெறுவது சாங்கியம்,

நியாயம், சார்வாகம் என்பவை. அவை பொருள் முதல் சார்புடையவை. சாணக்கியரின் அர்த்த சாஸ்திரமும் இவற்றைத் தான் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. சாங்கியம முதலியவற்றை வேதியர்கள் மதிக்கவில்லை. சாங்கியம் முதலியவற்றை ஒழிப்பதற்காக வேதியர்கள் போராடினர். சாங்கியத்தை பகவத் கீதை மறுக்கிறது.

சாரகசமகிதையில் வெளிப்பட்டுள்ள பொருள் முதல் மெய்யியலுக்கும் நியாயத்திற்கும் (நியாயம் என்பது தர்க்கம்) எது மூலமாக இருக்க முடியும் என்ற ஆய்வைப் பேராசிரியர் நெடுஞ்செழியன் விரிவாகவே செய்கிறார்.

தொல்காப்பியம் தான் மூலமாக இருக்க முடியும் என்று முடிவு காண்கிறார். இது குறித்த விவரங்களுக்குள் இப்போது நான் செல்லவில்லை. தொல்காப்பியத்தில் நிலம், நீர் முதலிய பூதங்கள் சொல்லப்படுகின்றன. உயிர் வகைகள் குறித்துத் தொல்காப்பியர் சொல்லுகிறார். அறம், பொருள், இன்பம் என்பதற்குத் தொல்காப்பியர் அழுத்தம் தருகிறார். இன்பத்தை வாழ்வின் முதல் நோக்கமாகச் சொல்லுகிறார். களவு, கற்பு ஆகியவற்றை உள்ளடக்கிய மனித வாழ்வை முதன்மைப்படுத்துகிறார். அகம், புறம் என்று பேசுகிறார். நூல் ஆக்கத்திற்குரிய உத்திகள் பற்றிச் சொல்லுகிறார். கலை பற்றியெல்லாம் தொல்காப்பியர் விரித்துரைப்பதை வைத்துப் பார்க்கிறபொழுது இவரது பொருள் முதல் சார்பு உறுதிப்படுகிறது. இப்படி விவாதிக்கிறார் பேராசிரியர் நெடுஞ்செழியன். சாரகசம்கிதையில் தர்க்க நெறிகள் உள்ளடங்கிய 32 வகை உத்திகள் விரிவாகச் சொல்லப்படுகின்றன. இவற்றைத் தொல்காப்பியத்தினுள் பெருமளவுக்குக் காண முடியும் என்கிறார் நெடுஞ்செழியன்.

சாங்கியம் என்பது தமிழர்கள் உருவாக்கிய மெய்யியல் என்பது முன்பே சில ஆய்வாளர்களால் மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. வைசேடிகம் என்பது அணுக்கொள்கையை உள்ளடக்கியது. இதன் மூல ஆசிரியர் தமிழர் என்பது குறித்து அறிஞர் குணா முன்பே கூறி உள்ளார். தமிழர்களின் சித்த மருத்துவத்தின் தொன்மை குறித்து நாம் இங்கு சொல்ல வேண்டியதில்லை. ஆரியர்களின் ஆயுர்வேதம் என்ற மருத்துவமுறை சித்த மருத்துவத்திலிருந்து வளர்ச்சி பெற்றது என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

இங்கெல்லாம் மாறுபட்ட கருத்துக்கள் குறித்தும் நாம் ஒன்றைச்

சொல்ல முடியும். இந்தியாவின் தொன்மை நாகரிகம் தமிழர் நாகரிகம் தான் என்பதில் நாம் வேறுபடுவதற்கு இடமில்லை. ஆனால் ஆரியரின் நுழைவுக்குப் பிறகு தமிழர்களின் மேன்மையை ஆரியர்கள் தொடர்ந்து அழித்து வந்தனர் என்பது வரலாறு. இத்தகைய சூழலில் வைத்துத் தான் நாம் எதையும் பார்க்க வேண்டியிருக்கிறது. ஆரியர்கள் மேன்மைப்படுத்தாத ஒன்றை நாம் தொன்மையான தமிழர்களோடு சார்த்தித்தான் பேச வேண்டி இருக்கிறது. இன்னும் ஆரியர்களுக்கும், தமிழர்களுக்கும் இடையிலான போராட்டம் ஓய்ந்து விடவும் இல்லை. இந்தச் சிக்கலிலேயே நாம் ஊன்றி இருப்போம். என்றால் நமக்குள்ளே நாம் புதையுண்டு போகத் தான் நேரிடும்.

பேராசிரியர் நெடுஞ்செழியன் ஆய்வில் நாம் ஒன்றை எடுத்துக் கொள்ள முடியும். தமிழர்களின் தொன்மையான மெய்யியல் பொருள் முதல் சார்புடையது. இதற்கான தர்க்கத்தைத் தமிழர்கள் கொண்டிருந்தனர். தொன்மையான நாகரிகம் எதனுள்ளும் இயங்கியலின் சில அழுத்தமான கூறுகளைக் காண முடியும். மழை இல்லாமல் மாநிலத்தில் தவம் இல்லை, தானமும் இல்லை என்று வள்ளுவர் கூறுவதனுள் இயங்கியலைக் காண முடியும். வள்ளுவரின் உள்ளும் இயங்கியலின் மேலாண்மையை விரிவாக எடுத்துரைக்க முடியும். நெடுஞ்செழியன் இப்படியெல்லாம் ஆராய்கிறார். ஆனால் நவீன காலத்திற்குரிய மார்க்சியம் சொல்லும் இயங்கியலின் அனைத்துக் கூறுகளையும் பழந்தமிழ் இலக்கியங்களின் உள்ளிருந்து வகுக்க முடியாது எனினும் இதில் ஊன்றி இருக்கிறார் நெடுஞ்செழியன். இது நமக்கு உடன்பாடில்லை.

3.

அடுத்து நண்பர் பூந்துறையன் (திரு. இரத்தினமூர்த்தி) எழுதி உள்ள முனைவர் பட்டத்திற்கான ஆய்வேடு குறித்து இங்கு நாம் பார்க்கலாம். இன்றைய புதுக்கவிதையின் அனைத்துக் கூறுகளையும் தொல்காப்பியத்திலிருந்து வகுத்துக் கொள்ளும் முனைப்போடு பூந்துரையன் ஆய்வு செய்கிறார். புதுக் கவிதையின் முக்கிய உறுப்பென்று படிமத்தைச் சொல்லுகிறோம். படிமம் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தங்களை உள்ளடக்கியதாக இருக்கிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் உள்ளுரை, இறைச்சி, குறிப்பு என்றெல்லாம் கூறப்படுவனவற்றைப் படிமம் என்பதனோடு ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் பார்க்க முடியும். உவமை, உருவகம் என்பன கவிதைக்குரிய இன்றியமையாத உறுப்புக்கள் அல்ல எனினும்

இவை இல்லாமல் கவிதையில் இயக்கம் இல்லை. எதுகை, மோனை என்பனவும் இத்தகையவை. ஓசை நயம் என்பது கவிதையின் இயக்கத்திற்கு இன்றியமையாதது. ஓசை நயத்தில் வகைப்பாடுகள் என்று எவ்வளவோ சொல்வதற்கு இடம் உண்டு எனினும் சில வகை ஓசை நயத்தை மறுத்துவிட்டு கவிதை செய்ய முடியாது. கவிதை என்பதற்கு வடிவம்,, உத்திகள் என்பனவும் இல்லாமல் முடியாது. கவிதைக்குரிய உரிப்பொருள், கவிதையின் உயிராகிறது. இந்த உயிரைத் தாங்குவதற்கு உடல் வேண்டும். உயிர் வாழ்வுக்கு ஆதாரமாக இருப்பது நிலமும், காலமும் மற்றும் இவற்றிலுள்ள கருப்பொருள்கள். நிலம், காலம் முதலியவற்றை வரலாற்றோடு தொடர்புபடுத்திச் சொல்லுகிறோம்.

மாறுபடும் வரலாற்றுச் சூழலுக்கு ஏற்றபடி வாழ்வின் வரையறைகள் முதலியவை மாறுபடுகின்றன. அன்பில்லாமல் வாழ்க்கை இல்லை. களவும், கற்பும் இல்லாமல் வாழ்க்கை இல்லை. இல்லறம் போலவே துறவும் வாழ்வின் ஓரியக்கம். அரசும் ஆதிக்கமும் இல்லாமலும் வாழ்க்கை இல்லை வரலாறு இல்லை. இன்று மட்டுமல்லாமல் பழங்காலச் சூழலிலும் அரசுக்குப் போர்கள் தேவைப்படுகின்றன. போர்ச் சூழல்களுக்குள் மனிதர்களை அரசுகள் இழுத்து விடுகின்றன. போர்க் காலத்தில் மட்டுமல்லாமல் வாழ்வுக் களங்களினுள்ளும் வெற்றிகளும், தோல்விகளும் இயல்பாக ஏற்படுகின்றன. இவை எல்லாம் மனித வாழ்வின் உரிப்பொருள்கள், உயிர்ப் பொருள்களாகின்றன. தொல்காப்பியர் கூறும் பொருள் இலக்கணம் என்பதைத் தொல்காப்பியரின் நெறியில் நாம் எவ்வளவோ வளர்த்திருக்க வேண்டும். இடைக் காலத்தில் நாம் செய்யவில்லை.

கவிதையை இன்றும் நாம் அர்த்தப்படுத்தும் பொழுது காலம், இடம் என்பனவற்றை கவிதைக்குரிய களம் எனக் கண்டறிந்து பொருள் படுத்துகிறோம். கவிதை ஒரு குறிப்பிட்ட வாழ்வுச் சூழலிலிருந்து தோன்றுகிறது என்ற முறையில் இப்படிக் கவிதையை வைத்துப் பொருள்படுத்துகிறோம். கவிதைக்குள் செறிவு தேவை. தேவை இல்லாத சொற்கள் கவிதைக்குள் இருக்க வேண்டியதில்லை. ஆகவே கவிதையின் ஒவ்வொரு அசைவையும் பொருட்படுத்திக் கற்கிறோம். ஒவ்வொரு சொல்லும், எழுத்தும் கூட கவிதை உணர்வை நமக்குள் தூண்டுகிறது.

சொற்களை முன்னும் பின்னும் மாற்றி பொருள்படுத்துகிறோம். கவிதைப் பொருளை எப்பொழுதும் புதுமை செய்கிறோம். இன்று செய்யும் கவிதைக்குள்ளும் பழங்காலத் தொன்மங்கள் முதலியவை உள் வந்து விடுகின்றன. ஏற்றத்தாழ்வான ஓசை நயங்களோடு கவிதையை வாசிக்கிறோம். கவிதை வாசிப்பில் தாளம் முக்கியம்.

இப்படி எல்லாம் நண்பர் பூந்துறையன் இன்றைய புதுக் கவிதைக்குள் தொல்காப்பியர் வகுத்த கவிதைக்கான கூறுகளைக் காண்கிறார். தொல்காப்பியரின் பொருள் அதிகாரத்தில் இடம்பெறும் எல்லா இயல்களையும் தற்காலப் புதுக் கவிதையில் இடம்பெறும் வரையறைகளோடு வைத்து வாசிக்கிறார். பூந்துறையன் அவர்களின் ஆய்வை (எனக்கு உரிய முறையில் இங்கு நான் தொகுத்துள்ளேன்). பூந்துறையன் அவர்களின் நோக்கம் மேற்கிலிருந்து நமக்கு அறிமுகமாகி உள்ள புதுக்கவிதையை நமக்கு அன்னியமான கவிதை முறை என்று நாம் காண வேண்டியதில்லை என்பது மட்டுமல்ல மேற்கத்தியரிடம் இருந்து தான் நாம் கவிதை கற்றுக் கொள்ள வேண்டும் என்பதும் இல்லை. நவீன கவிதைக்கான இயக்கத்தை தொல்காப்பியமே தனக்குள் கொண்டுள்ளது. மேற்கத்தியரின் ஆய்வு முறையை இப்பொழுது நாம் பயன்படுத்திக் கொள்கிறோம். இதற்கு நாம் அடிமைப்பட வேண்டியதில்லை. இந்த ஆய்வு முறையின் மூலம் நம்மை நாமே தெரிந்து கொள்கிறோம் / புரிந்து கொள்கிறோம்.

மேற்கத்தியர் நம்மை அடிமைப்படுத்தவே முந்துகின்றனர். அவர்களுக்கு நாம் இடம் கொடுக்க முடியாது. இப்படி ஒரு பார்வையைப் பூந்துறையன் தனக்குள் கொண்டிருக்கிறார். இதற்கான தூண்டுதலை தனக்குத் தந்தவர் என்று தமிழவனைக் குறிப்பிடுகிறார். அன்றியும் தமிழ்த் தேசிய உணர்வோடு தன் ஆய்வைத் தொடர்கிறார்.

தொல்காப்பியர் கூறும் பொருள் வரையறைகளை இன்றைய புதுக்கவிதைக்கு அப்படியே பூந்துறையன் பொருத்திக் காண்கிறார். இது எந்த அளவுக்கு சரி என்ற கேள்வியோடு நாம் தொடர வேண்டி இருக்கிறது. தொல்காப்பியர் கூறும் முதல் கரு உரி என்பதனை அவர் கூறும் வடிவிலேயே நம்மால் வைத்துக் கொள்ள முடியாது. முதல் கரு என்பதனை வரலாற்றியக்கத்தினுள் வைத்து நாம் காண வேண்டும். அகம், புறம் என்பதனை மூன்றாகப் பிரிவுபடுத்தி தொல்காப்பியர் கூறுவதை இன்று நாம் அதே வடிவில் ஏற்க

வேண்டியதில்லை. அகமும் புறமும் ஒன்றை ஒன்று ஊடுருவி இருக்கின்றன. அகத்திற்கும், புறத்திற்கும் உள்ள உறவு குறித்து தொல்காப்பியர் கூறுவது மிகக் குறைந்தளவுக்கே பொருந்துகிறது. திணை மயக்கம் என்று தொல்காப்பியர் தான் கூறியிருப்பதை அவரே தன் காலத்திற்கும் முதன்மைப்படுத்தி இருக்க வேண்டும். அன்றைய வாழ்விலும் கூட கைக்கிளையும், பெருந்திணையும் அகத்திணையைக் காட்டிலும் வாழ்வில் அழுத்தம் பெற்று விட்டன. அதைப் போலவே வாகை, காஞ்சி, பாடாண் போன்ற திணைகள் இடைக் காலத்திலும் சரி, இன்றும் சரி கூடுதலான அழுத்தம் பெற வேண்டியவை. இடைக் கால வாழ்வில் பக்தியும் நம் கால வாழ்வில் அரசியல் முதலியனவும் உரிப்பொருளாகின்றன. உரிப்பொருள் என்பதை இன்னும் விரிவுபடுத்தித தொல்காப்பியரே கண்டிருக்க முடியும்.

புறத்திற்கும் உரிப்பொருள்கள் உண்டு. மெய்ப்பாடுகள் எட்டனுள் அடங்குபவை அல்ல. இப்படி எல்லாம் பொருள் இலக்கணத்தை இன்னும் விரிவுபடுத்த முடியும். காப்பியம், புராணம் முதலிய இலக்கிய வகைகளை தொல்காப்பியர் கூறும் வரையறைகளுக்குள் அடக்க முடியாது. தொடர்நிலைச் செய்யுள் என்ற அளவில் இவற்றைச் சொல்வதற்கில்லை. இன்றைய புதுக்கவிதையின் உள்ளும் எவ்வளவோ பேசுகிறோம். இவற்றை எல்லாம் தொல்காப்பியரின் வரையறை களுக்குள் ஒடுக்க முடியாது. கவிதை / இலக்கியம் குறித்த நமக்கு வளமான மரபு உண்டு என்ற அளவில் நிறுத்திக் கொள்வதே நல்லது. நம் காலத்துக்குரிய உரி முதலிய பல்வகைப் பொருள்களோடு தொல்காப்பியத்தை நமக்கு இயலுமானால் வளர்த்தெடுப்பதே தேவை.

4.

அடுத்ததாகப் பேரா. கமலம் அவர்களின் ஆய்வு நூலை எடுத்துக் கொள்வோம். தொல்காப்பியத்தின் உள்ளேயே குறிஇயல், தொடர்பியல், பிரதியியல் முதலிய நவீனக்கவிதை / இலக்கியக் கோட்பாடுகள் இருக்கின்றன என்ற முறையிலானது இவரது ஆய்வு. மிகத் திறம்பட எழுதப்பட்டுள்ள இந்த ஆய்வு நூலுக்குத் தூண்டுதலாக தமிழவன் இருந்திருக்கிறார். தொல்காப்பியத்தை நவீன கால ஆய்வு முறைக்கு ஒத்ததாகக் காண்பதற்கு இந்த நூல் பயன்படுகிறது.

தொல்காப்பியம் ஒரு பிரதி மட்டுமே, தொல்காப்பியம் கூட மூலப்பிரதி அல்ல. தொல்காப்பியத்திற்குப் பொருள் காணும்

முறையில் உரையாசிரியர் செய்த ஒவ்வொரு பிரதியும் தொல்காப்பியத்திற்கு இன்னொரு துணைப் பிரதி. இப்படித்தான் வள்ளுவருக்கு பரிமேழலகர் செய்த உரை முதலியவற்றையும் நாம் காண வேண்டும். தொல்காப்பியர் தலைவன், தலைவி முதலியவர்களுக்கு இடையில் நிகழும் பல்வேறு வகையான கூற்றுக்கள், சுட்டுக்கள் முதலியவற்றைத் தொடர்பியல் / தகவலியல் என்ற முறையில் நாம் புரிந்து கொள்ள முடியும். மௌனத்தின் மூலமும் ஒன்றைச் சொல்ல முடியும். உடலியக்கமும் ஒரு செய்தியைச் சொல்லும். எந்த ஒரு குறியும் ஏதாவது ஒரு பொருள் உணர்த்தும். எல்லாமே குறியீடுகள் ஆகி விடவும் கூடும். குறிகளின் தொகுப்புதான் ஒரு மொழி. முன்னம் என்பது தொல்காப்பியர் சொல்லும் எத்தனையோ கோட்பாடுகளில் ஒன்று. எதையும் புரிந்து கொள்வதற்கு அதற்குரிய காலம், இடம் ஆகியவற்றோடு பொருத்தித்தான் புரிந்து கொள்ள முடியும். பகுதி, பகுதியாகப் பிரித்து காண்பதைப் போலவே எல்லாவற்றையும் முழுநோக்கில் தொகுத்தும் பார்க்க வேண்டும்.

இப்படி எல்லாம் விரிந்து செல்கிறது கமலம் அவர்களது ஆய்வு. தொல்காப்பியத்தில் உள்ளும் கவிதை, வாழ்வு குறித்து ஏராளமான கலைச்சொற்கள் உள்ளன. நவீனக் கோட்பாட்டாளர்களும் தொடர்ந்து புதிய கலைச் சொற்களைப் படைக்கின்றனர். ஆங்கில மூலத்திலிருந்து உருவாக்கப்படுபவை இந்தக் கலைச் சொற்கள். இதன் காரணமாக இடையிடையே ஆங்கிலச் சொற்களை பெருமளவில் பயன்படுத்துகிறார். இந்த அளவுக்கு ஆங்கிலச் சொற்கள் இடையில் அவசியம் இல்லை. தொல்காப்பியத்தை நம் காலத்து மேற்கத்திய நவீனக் கோட்பாடுகளுக்கு இடையில் கொண்டு வந்திருக்கிறார் என்பதைத்தான் இந்த நூலின் ஆக்கம் என்று கூறலாம். இதற்கு மேல் ஆய்வு செல்லவில்லை. எங்களுடைய பழம் சரக்கும் இன்னும் புதியது தான் என்று ஆய்வாளர் மெய்பிக்கிறார். தொல்காப்பியரின் எந்தக் கோட்பாட்டினுள்ளும் ஆய்வாளர் செல்லவில்லை. தொல்காப்பியரை நாம் விரிவுபடுத்திக் காண வேண்டும். தொல்காப்பியரினுள்ளும் முடக்கங்கள் இருக்கின்றன. இவற்றை இப்பொழுதேனும் நாம் கண்டறிவதோடு, முடக்கம் தீர்க்க முயற்சி கொள்ள வேண்டும். தமிழவன் இன்று வரை இதைத் தொடங்கவில்லை. சங்க இலக்கியத்திற்கே கூட இன்னொரு தொல்காப்பியம் தேவைப்படலாம். இதைச் செய்வதற்கான தேவை

நமக்கு இன்றிருக்கிறது. தொல்காப்பியத்தைக் கொண்டாடிக் கொண்டிருந்தால் இதைச் செய்ய முடியாது.

உலக அளவிலான கவிதைக் கோட்பாடு ஒன்று இன்று உருவாகி வருகிறது என்று பார்க்கும் தமிழவன் தொல்காப்பியத்தினுள்ளும் இப்படி ஒரு உலகளாவிய கவிதைக் கோட்பாட்டைக் கண்டறிய முடியும் என்று கருதுகிறார். தொல்காப்பியரின் ஐந்திணைக் கோட்பாடு தான் இதற்கு ஆதாரமாக இருக்க முடியும் என்பது அவரது கருத்து. நாமும் மறுக்கவில்லை. காப்பியம், நாவல் முதலிய இலக்கிய வகைகள் பலவற்றையும் உள்ளடக்கியதாகக் கோட்பாடு அமையுமா என்பது குறித்து நாம் ஆராய வேண்டும்.

# கொங்கு நாடும் – சமணமும்

1. புலவர் இராசு அவர்களின் அரிய ஆராய்ச்சியின் விளைவாக வெளி வந்துள்ள இந்நூல். கொங்கு நாட்டில் சமணம் பற்றிய – வரலாற்று ஆவணம் என்று சொல்லத் தகுந்த சிறப்புடையது. வரலாற்றின் ஆய்வுக்கு இந்த நூல் பயன்படும். மற்றபடி கோட்பாட்டு அடிப்படையில் கொங்கு நாட்டின் வரலாற்று இயக்கத்தில் சமணத்தில் இடம் அல்லது சமணத்தின் பங்களிப்பு குறித்து, ஆசிரியர் ஆய்வு செய்யவில்லை.

2. எனினும் தமிழ்நாட்டில் பல நூற்றாண்டு கால அளவில் சமணம் பெற்றிருந்த செல்வாக்கு குறித்து இந்த நூலில் புதிய விவரங்கள் பல அடங்கியுள்ளன. கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் பத்திரபாகு முனிவர் மகத நாட்டில் எதிர்காலத்தில் பஞ்சம் வரும் என்பதை முன் அறிந்து பன்னிரண்டாயிரம் சமணர்களுடன் தென்திசை நோக்கி வந்து கர்நாடகத்தில் சிரவணபெளகொளாவில் தங்கினார். அவரோடு மகத நாட்டு அரசனும் சேர்ந்து கொண்டான். (மன்னனுக்கு இத்தகைய மனமாற்றம் எப்படி ஏற்பட்டது என்பதை ஆய்வு செய்வது நல்லது. அதே போல சமண சமணத்தின் தோற்றம், விரிவு முதலியவை பற்றியும், விரிவான ஆய்விற்கும் தேவை இருக்கிறது. தமிழ்நாட்டின் சமணத்தின் தனித்தன்மை குறித்தும் ஆராய வேண்டும்). பத்திரபாகு முனிவரின் விருப்பத்தின் படி விசால முனிவர் தமிழ்நாட்டுக்கு வந்து சமணத்தைப் பரப்பினார். இவர்களுக்கு முன்பு தமிழ்நாட்டில் சமணம் இடம் பெறவில்லை. பிற்கால இலக்கியங்கள் மூலமே இந்த வரலாறு இடம் பெறுகிறது. இப்படிக் கூறப்படும் வரலாற்றுச் செய்தியைப் புலவர் இராசு மறுக்கிறார். கி.மு.3 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே சமணம் தமிழகத்திற்கு வந்திருக்கக் கூடும் என்று கருதி சில ஆதாரங்களைத் தருகிறார்.

3. தமிழகத்தைப் பொறுத்தவரை தொண்டை நாட்டிலும் கொங்கு நாட்டிலும் தான் சமணம் அழுத்தமாக இடம் பெற முடிந்தது. பாண்டிய நாட்டையும் ஓரளவுக்கே சொல்ல முடியும். இந்த நாடுகள் சோழ நாட்டைக் காட்டிலும் நீர்வளம், நிலவளம் குறைந்தவை. சோழ நாட்டில் சோழரது ஆட்சி பெருகியதைப் போலவே சைவமும் பெரும் செல்வாக்குப் பெற்றது. இங்கு சமணம் நிலைபெறவில்லை. இதற்கான வரலாற்றுக் காரணம் ஆய்வுக்குரியது. நிலத்தின் வறட்சிக்கும் வாழ்வின் வளக் குறைவுக்கும் சமணத்திற்கும் என்ன

உறவு என்பது ஒரு கேள்வியாக அமையலாம்.

4. இந்தியாவில் சமணம் பெற்ற செல்வாக்குக்கு ஆசிரியர் காரணம் கூறும் பொழுது பார்ப்பனரின் வேள்வி முதலியன சடங்குகளைக் கொண்ட வைதீகச் சமயத்திற்குச் சமணம் எதிர்நிலை எடுத்தது என்பதை ஒரு முக்கியக் காரணமாகக் குறிப்பிடுகின்றனர். இதை மறுப்பதற்கில்லை. பார்ப்பனர் முன் வைத்த பிரம்மம் முதலிய இறைமைக் கோட்பாடுகள் சமணத்திற்கு உடன்பாடில்லை. ஆனால் அதே சமயம சமணத்தில் புலனடக்கம், துறவு ஆகியவற்றின் கடுமைக்கும் எல்லை இல்லை. உயிர்க்கு உறுகண் செய்யாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, கள் உண்ணாமை முதலியவற்றையும் சமணர் கடுமையாக கடைப்பிடித்தனர். தனித்திருத்தல், தலையின் முடி பறித்தல், உணவை கைகளில் ஏற்று உண்ணுதல் போன்ற நடைமுறைகளையும் மேற்கொண்டிருந்தனர். இவற்றை நாகரிகத்தின் படிக்கற்களாக மாற்று சமயத்தினர் மதிக்கவில்லை. உயிர்க் கொலை செய்யாமை என்பதன் எல்லைக்கே சென்று சமண முனிவர் இறுதியில் உயிர் துறந்தனர். கொள்கை என்ற அளவில் இவை எல்லாம் அறிவு பூர்வமானவை என்பதில் ஐயமில்லை. பெண்கள் துறவியாகலாம். எனினும் இவர்களுக்குப் பிறவிக் கதியிலிருந்தே விடுதலையில்லை. மீண்டும் இவர்கள் ஆணாகப் பிறந்து துறவியாகிய பின்னர்தான் விடுதலை கிட்டும். இக்கொள்கைகள் ஒரு புறமிருக்க, சமணர்களின் தீர்த்தங்கரர், இயக்கியர் பற்றிய கதைகள் பெருமளவில் கற்பனையானவை. இவை எல்லாமே புராணக் கதைகள் என்று சொல்லுமளவுக்கு மூட நம்பிக்கைகளை வளர்க்கும் கதைகள். இந்தியாவில் வைதீக மதங்கள் எந்த அளவுக்கு மூட நம்பிக்கையை மக்கள் மனத்தில் வளர்த்தனவோ அந்தளவுக்குக் குறையாதபடி சமணமும் வளர்த்தது. ஒரு வகையில் வைதீகச் சமயத்திற்குள் புகுந்துள்ள மூட நம்பிக்கைக்கும் மூலம் என்றே சமணர் சமயத்தைக் குறிப்பிடலாம். இதன் தொடர்பாக மேலும் ஒன்றைக் குறிப்பிட வேண்டும். மூட நம்பிக்கைகள், பிறவிக் கோட்பாடு, புலனடக்கம், துறவு ஆகிய கொள்கைகளும் நடைமுறைகளும் வரலாற்றுச் சூழலில் இந்திய மண்ணில் தோன்றியவை. இதற்காக எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்தையும் நாம் காய்வதில் பயன் இல்லை. மூடநம்பிக்கைகள் என்று பிற்காலத்தில் கூறப்படும் நம்பிக்கைகள் எல்லாம் அவற்றின் தோற்ற காலத்தில் ஏதோ சில வகைகளில் அறிவுப் பூர்வமானவையாகத்தான் இருந்திருக்க முடியும். சடங்குகள் மட்டுமல்லாமல் விழாக்கள் முதலியனவும் இப்படித்தான் தோன்றி நடைபெற்றன. கடுமையான

விரதங்கள், கோட்பாடுகள் முதலியவை சமூகத்தின் ஒரு சிறு பகுதியினருக்கு உரியவையே தவிர பெரும்பாலான மக்களுக்கு இவை உரியவை அல்ல. வேளாண்மை தொழில் முனைவுகள், வேட்டையாடுதல், ஆண்-பெண் உறவு, திருமணம், சிலவகையான சடங்குகள், அன்பு, கருணை, தியாகம் முதலியன எல்லாம் பெரும்பாலான மனிதர்க்குரியவை. கோவில் வழிபாடு, கதைகள் முதலியனவும் இப்படி. தமிழ்நாட்டில் சமண சமணத்திற்கும், சைவத்திற்கும் இடையில் நடைபெற்ற போராட்டங்கள் குறித்து சிலவற்றை நாம் திரும்பத் திரும்பக் கூறுகிறோம். எண்ணாயிரம் சமணர்களை சைவர்கள் கொன்றனர். கழுவில் ஏற்றி இவர்கள் கொல்லப்பட்டனர். ஆறு, ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு தமிழ்நாட்டில் சமணம் செல்வாக்கு இழந்தது. இப்படித்தான் வழக்கமாக நம்மவர் கூறி வருகின்றனர். இத்தகைய கருத்துக்களைப் புலவர் இராசு ஆதாரங் களோடு மறுக்கிறார். 7, 8ஆம் நூற்றாண்டுக்குப் பிறகும் சமணர்கள் தமிழ்நாட்டில் கொங்கு முதலிய பகுதிகளில் செல்வாக்கோடுதான் இருந்தனர். தமிழில் இலக்கணம், இலக்கியம் ஆகியவற்றின் பெரு வளர்ச்சியில் சமணர்களின் பங்களிப்பை யாரும் குறைத்துச் சொல்வதற்கில்லை. இவை ஒரு புறமிருக்க திருஞானசம்பந்தரே தன் பாடல் ஒன்றில் சமணர்களையும், புத்தர்களையும் சிவன் தான் படைத்தார் என்று கூறியிருக்கின்றார். சோழ மன்னர்கள் சமணர் கோவில்களுக்கும் உதவி செய்துள்ளனர். கொங்கு நாட்டைப் பொறுத்தவரை சமணர்கள் சிறப்பாக தொடர்ந்திருந்தனர். 14, 15 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகும் கூட சமணர் தம்மளவில் செல்வாக்கோடு இருந்தனர். சமண சமயத்தின் பாதிப்பை சைவத்திற்குள்ளும் காண முடியும். 63 நாயன்மார் என்ற எண்ணிக்கை ஒரு சான்று. சமணர்களின் கோவில் அமைப்பு, வழிபாடு என்பனவும் சைவர்களின் கோவில் அமைப்பு, வழிபாடு என்பனவும் பெரும்பாலும் ஒற்றுமையுடையவை. சமணர்கள் தீர்த்தங்கரருக்குத் தந்த மரியாதை போலவே சைவர்களும், நாயன்மார்கள் முதலியவர் களுக்குத் தந்தனர்.

வாழ்வின் அடிப்படைகள் நோக்கித் தீவிரமான ஆய்வில் சமணர் ஈடுபாடு கொண்டிருந்தனர். இதன் விளைவாகத்தான் கடுமையான விரதங்கள் முதலியவற்றைக் கடைபிடித்தனர். மனிதன் தான் வாழ்வதற்காக எந்த உயிரையும் கொல்லக் கூடாது என்பது இப்படி ஒரு அடிப்படை. பழங்காலச் சமூகச் சூழலில் தெய்வம், இயக்கன், தீர்த்தங்கரர், பல பிறப்புப் பற்றிய சிந்தனைகளும் எழாமல் இருக்க

முடியாது. இயற்கை, உயிர்களின் வகைகள் பற்றித் தொல்காப்பியரின் கருத்தும் இத்தகையது. இவையெல்லாம் ஆற்றல் மிகுந்த ஒரு அறிவு இயக்கத்தின் சில கூறுகள். இதன் இன்னொரு கூறுதான் மொழியின் இலக்கணம் பற்றிய ஆய்வு. இதைப் போலவே அறம் பற்றிய ஆய்வு. இம்முறையில் தான் தமிழ் இலக்கண ஆய்வில் சமணர்களின் பங்களிப்பை நாம் மதிக்கிறோம். சமணர்கள் இல்லாமல் தமிழனுக்கு வாழ்வில் மேம்பாடு இல்லை என்ற அளவுக்கு சமணர்களின் பங்களிப்பை நாம் மதிக்கிறோம்.

5. புலவர் இராசு அவர்களைப் பொறுத்தவரை கொங்கு நாட்டில் சமணர்களின் தமிழ்ப் பணி குறித்து ஆழமான, சுயமான ஆய்வை மேற்கொண்டு பல புதிய உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார். பெருங்கதை ஆசிரியராகிய கொங்குவேள், மன்னர் மரபைச் சார்ந்தவர் அல்லர். மாறாக கொங்கு வேளாளர் மரபில் உட்பிரிவைச் சார்ந்தவர் என்பதை ஆராய்ந்து விளக்கி உள்ளார். அடியார்க்கு நல்லார் கொங்கு நாட்டவர்தான் என்கிறார். திருத்தக்க தேவரும் கொங்கு நாட்டில் தோன்றியவர். மையிலைநாதர், இன்று ஈரோடு என்னும் பெயரைப் பெற்று - அன்று மைலை என்னும் பெயர் பெற்ற ஊரைச் சார்ந்தவர். இப்படிப் பல உண்மைகளை ஆசிரியர் நிறுவுகிறார். நேமிநாதம், 99 வெண்பாக்களில் செறிவான முறையில் இலக்கணம் சொன்னதால் நன்னூல் தோன்றிய பிறகு தன் செல்வாக்கை இழந்தது என்கிறார். நன்னூல் ஆசிரியர் பவணந்தி கொங்கு நாட்டவர். கல்வி ஒழுக்கம் என்ற அறநூல் பற்றியும் விரிவாகச் சொல்லுகிறார். பெருங்கதையும், சீவக சிந்தாமணியும் தமிழில் புகழ் பெற்ற காப்பியங்கள். இவை இரண்டும் மன்னர்களின் வாழ்வு, போர்கள், மணவாழ்க்கை, ஏற்றத்தாழ்வு, துறவு, வீடு என்று பேசுபவை. கொங்கு நாட்டின் வரலாற்றோடு இவ்விருவகை காப்பியங்களும் எத்தகைய இன்றியமையாத உறவைக் கொண்டவை என்பது இன்றளவும் நமக்குப் புரியவில்லை. கொங்கு நாட்டின் சமண முறைகள் பெருங்கதையில் நிறையவே இடம் பெற்றுள்ளன. புலவர் இராசு அவர்களின் கூற்றின்படி உதயணன் கதை, மணிமேகலை முதலிய இலக்கியங்களில் பரவலாகவே இடம் பெற்றது. பிருகத்கதா தான் இதற்கு மூலநூல் என்று சொல்ல முடியுமா? என்பது ஒரு கேள்வி. உதயணன் கதை ஏற்கெனவே இலக்கியங்கள் பலவற்றில் இடம் பெற்றிருக்கிறது.

6. வரலாற்றில் தோன்றிய எந்த ஒரு மதமும் கலாச்சாரமும் பிறகு முற்றாக அழிந்து விடுவதில்லை. ஒரு மதம் அல்லது கலாச்சாரம்

இன்னொன்றுக்கு இடம் கொடுத்து, இன்னொன்றால் சில கூறுகள் உள்வாங்கப்பட்டு, தன்னளவில் மறைகிறது. தான் அழிவதில்லை. டாயின்பி என்ற வரலாற்று அறிஞரின் கருத்து இது. சமணத்தில் தீர்த்தங்கரர், இயக்கியர் பற்றிய கருத்தும், வளர்ச்சியும், பக்தி இயக்க காலத்தில் இந்து மதத்தோடு இணைந்து இருந்தது. சமணத்தில் கூறப்படும் தெய்வங்களில் இந்திரன், வருணன், அக்கினி, சரசுவதி முதலிய தெய்வங்கள் இந்துச் சமயத்திற்கும் உரியவை. சமண சமயத்தில் மகா புருடர் 64 பேர், சைவத்தில் நாயன்மார் 63 பேர், தமிழ்நாட்டைப் பொறுத்தவரை புத்த மதம் சைவத்தோடும் சமணம் வைணவத்தோடும் கலந்தன என்பது சில அறிஞர் கூற்று. சமண மதத்தின் கொள்கைகள், தெய்வங்கள், சடங்குகள், விரதங்கள் முதலியவை இன்றும் மக்கள் மத்தியில் உள்ளன. சமணக் கோவில்களும் தீர்த்தங்கரர் உருவங்களும் பிற்காலத்தில் சைவக் கோவில்களாகவும் சிவபெருமானுமாகவும் மாறின. வர்த்தமானர் என்பது சிவபெருமானுக்கும் பெயர், கண்ணன் தீர்த்தங்கரரில் ஒருவர். கடவுள் என்ற கருத்து சமணருக்கும் உண்டு. வள்ளுவர் கூறும் ஆதிபகவன், ஆதி நாதர் என்று நாம் விளக்க முடியும்.

*குறிப்பு : 12.6.05 அன்று ஈரோடு - பார்வை அமைப்பின் சார்பில் நடைபெற்றக் கருத்தரங்கிற்காக எழுதப்பட்ட கட்டுரை. கொங்குநாடும் சமணமும் நூல் ஈரோடு புதுமலர் பதிப்பகத்தின் வெளியீடு.*

# கிறித்துவ நாவல் இலக்கியம்

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் இலக்கியத்துக்கும் புதிய வளம் சேர்த்த கிறித்துவப் பெருமக்களை இன்றும் நாம் நன்றியோடு நினைவு கூறுகிறோம். வீரமா முனிவர் தமிழ் மொழியின் ஆக்கத்திற்குச் செய்த சில பணிகள் நம் மரியாதைக்கு உரியவை. தன்னைத் தமிழ் மாணவன் என்று சரியாகவே உணர்ந்து கொண்ட ஜி.யூ. போப் திருக்குறளையும், திருவாசகத்தையும் பெருமளவில் நேசித்தார். தமிழ் மொழியின் மீது வடமொழியின் ஆதிக்கத்தை முழு அளவில் களைவதற்கு வழி செய்தவர் டாக்டர் கால்டுவெல். தமிழ் மொழி மற்றும் இலக்கியத்திற்கு மட்டுமல்லாமல் தமிழ் மக்களுக்கும் சேவை செய்த பெருமக்கள் அனைவரையும் பட்டியல் எடுக்க முடியாது. தமிழ் மக்களுக்கான கல்விப் பணி என்றும், மருத்துவப் பணி என்றும் இன்றுவரை எவ்வளவோ இவர்கள் செய்து வருகிறார்கள். ஆங்கில ஆதிக்கத்தை மட்டுமல்லாமல் மேற்கத்திய நாகரிகத்தை நிலை நிறுத்துவதில் இவர்களுக்கும் பங்குண்டு என்றாலும், அண்மைக் காலத்தில் தமிழ் வழிக் கல்விக்கும் பணியாற்றத் தொடங்கி உள்ளனர். திருச்சபையின் வழிபாடு முதலியவற்றுக்குள் நுழைந்துவிட்ட மேற்கத்தியக் கூறுகளைத் தொடர்ந்து களைவதோடு, திருச்சபையின் வழிபாடு முதலிய கூறுகளைத் தமிழ் / இந்திய மயப்படுத்துவதிலும் அக்கறை காட்டி வருகின்றனர். தமிழ்த் தேசியம் என்ற அரசியல் குரல் கூட இவர்கள் மத்தியில் எழுந்துள்ளது. மார்க்சியத் தாக்கத்தோடு உலக அளவில் வளர்ந்து வருகிற விடுதலை இறையியல் என்ற வளமான போக்குக்கும் இவர்கள் இடம் கொடுத்து வருகின்றனர்.

விவிலியம் என்ற பெரும் நூலை முழு அளவில் புதிய தமிழில் மொழி பெயர்த்து வெளியிடுவதன் மூலம் தமிழின் வளத்தை மேம்படுத்தவும் செய்கின்றனர். தமிழில் உரைநடையின் வளர்ச்சிக்குப் பணியாற்றிய வேதநாயகம் முதலியவர்களையும் இங்கு நினைவு கூர்வது பொருந்தும்.

நூறாண்டுகளுக்கு மேலாக வளர்ச்சி பெற்றுவரும் தமிழ் நாவல் இலக்கியம் என்ற புதிய இயக்கத்தில் கிறித்துவப் பெருமக்களும் நண்பர்களும் ஈடுபடுவதைத் தமிழ் ஆர்வலர் என்ற முறையில் அனைவரும் வரவேற்கவே செய்வர். ஒரு நூற்றாண்டுக்கு மேற்பட்ட கால அளவில் தமிழில் எழுதப்பட்ட கிறித்துவச் சார்புடைய

நாவல்கள் பலவற்றை தொகுத்து ஆராயும் முறையில் வெளிவந்துள்ள இந்த நூலை நான் பெரிதும் வரவேற்கிறேன். இதற்காக நண்பர் டேவிட் சித்தையா அவர்களுக்கும் இந்தப் பெரிய நூலை வெளியிட முன்வந்த மணிவாசக நூலகத்தாருக்கும் நம் நன்றிகளும், பாராட்டுகளும் உரியவை.

இலக்கியம் என்பதைச் சைவ இலக்கியம் என்றோ, சமண இலக்கியம் என்றோ, இவை போலவே இஸ்லாமிய இலக்கியம் என்றோ, கிறித்துவ இலக்கியம் என்றோ என்று வகைப்படுத்துவது எந்த அளவுக்கு நியாயம் என்ற கேள்வியோடு தொடங்குவோம். இலக்கிய ஆய்வில் ஒப்பியல் நோக்கு வலுப்பெற்று வரும் இக்காலத்தில் ஆங்கில இலக்கியம் என்றோ, தமிழ் இலக்கியம் என்றோ பார்ப்பது கூடச் சரியில்லை என்பதை அறிஞர்கள் எடுத்துரைக்கின்றனர். எந்த மொழியில் எழுதப்பட்டாலும் அது இலக்கியம் தானா என்ற முறையில் தான் பார்க்க வேண்டும் என்று இவர்கள் எடுத்துரைக்கின்றனர்.

இலக்கியம் என்பது மனிதரின் படைப்பு, இவனைக் கூறுபோடுவது சரியில்லை. எந்த ஒரு மொழி அல்லது பண்பாட்டை இவன் சார்ந்திருந்த போதிலும் இவனுக்குள் இயங்கும் இலக்கியம், உலகளாவிய பொதுத் தன்மைகள் சிலவற்றை உட்கொண்டதாகவே இருக்கிறது. இதனைக் கண்டறிந்து மேம்படுத்துவதன் மூலமே மனித மேன்மைக்கு இலக்கியம் பணிபுரிய முடியும். இந்த மனித மேன்மையை உள்ளடக்கி இருப்பது தான் சிறந்த இலக்கியம். இந்தப் புதிய உண்மையை நம் நெஞ்சில் நிறுத்திப் பார்க்கும்பொழுது ஆங்கில மொழியில் எழுதப்பட்ட இலக்கியம், தமிழ் மொழியில் எழுதப்பட்ட இலக்கியம் என்று பார்ப்பது தான் அறிவுடமை ஆகமுடியும். இந்த அடிப்படையில் பார்க்கும் பொழுது சைவ இலக்கியம் என்றோ, கிறித்துவ இலக்கியம் என்றோ சொல்லும்போது நம்மால் கவனத்தோடு இருக்க முடியும்.

மனித மேன்மைக்கு இடம் அளிப்பதாகிய இலக்கிய ஆக்கம் என்பதனுள் உலகளாவிய பொதுத் தன்மைகளோடு ஒவ்வொரு மொழி அல்லது பண்பாடு அல்லது சமயம் சார்ந்த தனிக்கூறுகளும் இணைந்திருக்க முடியும் என்றும் நாம் பார்க்க முடியும். இந்தத் தனிக்கூறுகள் என்பவை பொதுக் கூறுகளோடு ஒத்து இயங்குவதையும் நாம் கவனிக்க முடியும். பொதுக் கூறுகளோடு முரண்படுகிற அல்லது பொதுக் கூறுகளை மறுத்து விடுகிற ஒன்றை இலக்கியம்

என்றோ, பண்பாடு என்றோ, சமயம் என்றோ நாம் கொண்டாடவும் முடியாது. மனித ஆக்கத்தை மையப்படுத்துகிற எவரும் இந்த உண்மையை மறுக்க மாட்டார்கள் என்றே நாம் நம்புகிறோம்.

இலக்கியம் என்பதும், பண்பாடு என்பதும், சமயம் என்பதும் நமக்குள் முரண்பட்டு வெவ்வேறு திசைகளில் இயங்கவும் முடியாது. சமத்துவம் / சமதர்மம் என்பது தான் மனிதப் பண்பாக / பண்பாடாக இருக்க முடியும். பணத்திற்கோ, அதிகாரத்திற்கோ இடம் தந்து மனித இனம் தன்னைத்தானே அழித்துக் கொள்ளவும் இயலாது. உழைப்பும், பகிர்வும் தான் மனித ஆக்கத்திற்குரிய செயல்முறைகள். பிற மனிதர்களோடும், உயிர்களோடும் இயற்கையோடும் கொள்ளும் நல்லுறவின் வழியேதான் மனிதனுக்குள் அன்பு தழைக்கும்.

ஆதிக்கம் எந்த வடிவில் நிலவினாலும் மனிதர்களை அது முடக்கும் அல்லது சிதைக்கும் அல்லது கூறுபோடும். இத்தகைய மனிதனுக்குள் படைப்புத் திறன் அழியும். இத்தகைய மனிதன் தான் வம்புகளுக்கும், வழக்குகளுக்கும், போட்டி மற்றும் பொறாமைகளுக்கும் இடம் கொடுக்கிற மனிதன். இவனை இலக்கியம் பாராட்ட முடியாது. சமயம் இவனுக்கு மரியாதை செய்யாது. இலக்கியத்தின் உட்பொருள் சமத்துவம் / சமதர்மத்தை உள்ளடக்கிய மனித ஆளுமை / மனித மேன்மை சமயத்திற்கும் இதுவே உள்ளடக்கம். இதுவே சமயத்தின் மறைபொருளும்கூட. இந்த மையத்தில் தான் இலக்கியம், பண்பாடு, சமயம் என்பன இணைகின்றன. கிறித்துவ இலக்கியமும் இந்த உள்ளடக்கத்தோடுதான் இயங்க முடியும்.

விவிலியத்தில் இயேசுவை உள்ளடக்கிய எத்தனையோ இறையியலாளர்களை நாம் காணுகிறோம். மனிதரிடமிருந்து விலகி அதிகாரத்திற்கும், ஆணவத்திற்கும் மதம் இடம் தந்து அரசோடும், ஆதிக்கத்தோடும் மதம் ஒத்துழைக்கிற போது, ஆக்கத்திற்கு எதிராக கலகக் குரல் எழுப்பியவர்கள் இந்த இறையியலாளர்கள். எப்பொழுதெல்லாம் மதம் ஆதிக்கத்திற்கு இடம் தருகிறதோ அப்பொழுதெல்லாம் மத எல்லைக்குள்ளிருந்தே கலகக்குரல் எழுவதை எல்லாச் சமயங்களின் வரலாற்றிலிருந்து நாம் அறிகிறோம்.

மண்ணுலக மக்களின் விடுதலைக்கான குரல் இவர்களின் குரல். ஆதிக்கங்களுக்கு எதிராக இவர்கள் சிலுவை தூக்க அஞ்சுவதில்லை. இவர்களுக்கு மரணம் இல்லை. இவர்கள் மீண்டும், மீண்டும்

உயிர்த்தெழுவார்கள். பணத்திற்கும், அதிகாரத்திற்கும் இடம் தருவதன் மூலம் நம்மைப் பாவிகளாக்கிக் கொண்ட மக்களை இவர்களால் புரிந்து கொள்வதோடு மன்னிக்கவும் முடியும். இவர்களுக்காக / இவர்களின் விடுதலைக்காக இவர்களால் போராடவும் முடியும். கிறித்துவம் மட்டுமல்லாமல் எந்தச் சமயத்தினுள்ளும் இந்த உயிருள்ள உண்மையைத்தான் நாம் காண்கிறோம். இலக்கியமும் இத்தகையவர்களைத்தான் தனக்கு நாயகனாகக் கொள்ள முடியும். ஒரு நல்ல திறனாய்வாளன் இப்படித்தான் இலக்கிய ஆய்வை மேம்படுத்தவும் முடியும்.

உலகலாவிய வெவ்வேறு மரபுகளோடு உறவு கொள்ளாமல், எந்த ஒரு சமுதாயமும் தனித்திருக்கவோ, இயங்கவோ முடியாது. பழங்காலம் முதற்கொண்டே மேற்கில் கிரேக்கத்தோடும், கிழக்கில் சீனத்தோடும் நாம் உறவு கொண்டிருந்தோம். கடந்த சில நூற்றாண்டுகளுக்குள் ஆங்கிலேயர் முதலியவர்கள் மூலம் மேற்குலகத்தோடு நாம் தொடர்பு கொண்டோம். இம்முறையில் தான் கிறித்துவத்தோடும் நாம் உறவு கொண்டோம்.

வேற்றுமைகளுக்கு இடையில் ஒற்றுமை காண்பது இந்தியப் பண்பாடு என்று நேரு விளக்கியதை நம்மால் ஒதுக்க முடியாது. இந்து மதம் தனக்குள் இறுகாத நிலையில் கிறித்துவத்தின் தாக்கத்தைச் சரியான முறையில் உள்வாங்கிக் கொண்டிருக்க முடியும். கிறித்துவத்தின் அன்பு வடக்கிலும், தெற்கிலும் சமயங்களுக்குள் புதிய எழுச்சியை உருவாக்கி இருந்ததை யாரும் மறுக்க முடியாது. இயேசுவைக் கூட ஒரு இந்திய முனிவரெனச் சிலர் ஏற்றுக் கொள்ளவும் செய்தனர். தமிழகம் இதற்கு விதிவிலக்காக இல்லை. வீரமா முனிவர் தமிழ் முனிவராக இங்கு வாழ்ந்தார். தமிழ் முனிவராகிய திரு.வி.க. மட்டுமல்லாமல், பாரதி முதலியவர்களும் இயேசுவுக்குள் இறையருள் கண்டு போற்றினர். இத்தகைய இயேசுவை நம் உள்ளங்களில் ஏற்றிக் கொண்ட நிலையில்தான், கிறித்துவம் இங்கு தழைக்க முடியும். நாவல் இலக்கியமும் இந்த நல்ல பணியைச் செய்ய முடியும். இயேசுநேயம் என்பது மனித நேயமாக, தமிழ் நேயமாக மலரவும் முடியும்.

இந்தக் கட்டுரைத் தொகுப்பு நூலில் 31 நாவல்கள் மற்றும் ஒரு சுய சரிதை ஆகியவை பற்றிய ஆய்வுரைகள் அடங்கியுள்ளன. இவற்றில் சில குறு நாவல்களும் உள்ளன. நாவல் என்பது ஒரு நவீனக் கலை. இதன் கட்டமைப்பில் அரசியல் கூறுகள் குறைவில்லாமல் அமைய

வேண்டும். கதை சொல்வது மட்டுமே நாவல் ஆகிவிட முடியாது. கதை இல்லாமலும் நாவல் இல்லை. பிரச்சார நோக்கம் முதன்மை பெறும்போது நாவலில் அழகியல் கூடுவது இல்லை.

நீதியை வெளிப்படுத்துவதற்காகக் கதை கூறல் என்பதும் உண்மையைக் கண்டறிய துப்பறியும் பாணியில் நிகழ்ச்சிகளை தொகுப்பதும் நாவலை ஒரு கலை என்ற வகையில் மேம்படுத்துவதில்லை. நிகழ்ச்சிகளைத் தொகுப்பதிலும் கலைக்குரிய தர்க்கம் சிதையாமல் இருக்க வேண்டும். நாவல் எழுதும் முயற்சியில் புதியவர்கள் ஈடுபடும்பொழுது குறைகள் கூடிவிடுகின்றன. இந்தக் குறைகள் இல்லாமம் மிகச் சில தரமான நாவல்களும் படைக்கப்பட்டுள்ளன என்பதை இந்தக் கட்டுரைத் தொகுப்பை வாசிக்கும் நண்பர்கள் உணர முடியும்.

இந்தத் தொகுப்பில் உள்ள நாவல்களைப் படைத்தவர்களில் ஒரு சிலர் நம் நாவல்களை கிறித்துவ நாவல் என்று பெயரிடுவதை மறுக்கவும் செய்வார்கள். கிறித்துவர்கள் என்று தம்மைக் கருதிக் கொள்பவர் எழுதிய சில நாவல்களிலும் கிறித்துவம் அல்லாத சமூகம் பற்றி எழுதியிருக்கிறார்கள்.

சில நாவல்களில் கிறித்துவம் என்று அறியத்தக்க கூறுகள் அல்லது பாத்திரங்கள் ஒன்று இரண்டுக்கும் மேல் இல்லை. ஆகவே நம்மைப் பொருத்தவரை இவை அனைத்தையும் நாவல் என்ற வகையில் பார்ப்பது தான் முக்கியம் என்று கருத வேண்டியிருக்கிறது. இதன் காரணமாக இவற்றையும் இன்னும் சில நாவல்களையும் கிறித்துவ நாவல் என்று தொகுத்துக் கொண்டு ஆய்வதன் தனித்தன்மையையும் நாம் முற்றாக மறுப்பதற்கில்லை. இலக்கிய ஆய்வில் எத்தனையோ கோணங்கள் உள்ளன. கிறித்துவம் என்ற நோக்கில் இந்தத் தொகுப்பில் உள்ள நாவல்களை மட்டுமல்லாமல், தமிழ் நாவல்கள் மற்றும் தமிழ் இலக்கியத்தின் முழுப்பரப்பையும் ஆய்வதைக் கூட நாம் வரவேற்க முடியும்.

மதம் குறித்த இறுகிய பார்வையைக் கடந்து மனிதனுக்குள் செயல்படும் ஆன்மீகம் என்ற நோக்கில் கிறித்துவத்தைப் பொருள்படுத்தி ஆய்வது பெரும் பயன் நல்கும். ஜெயகாந்தனின் மிகச்சிறந்த படைப்பாகிய “ஒரு மனிதன், ஒரு வீடு, ஒரு உலகம்” என்ற நாவலில் இடம்பெறும் ஹென்றியை முன்வைத்து இந்தக் கருத்தை நாம் உறுதிப்படுத்த முடியும்.

இந்தத் தொகுப்பில் உள்ள பெரும்பாலான நாவல்களில் சொல்லப்படும் கதைகளில் அடங்கி உள்ள இரண்டொரு முக்கியப் போக்குகள் குறித்து இப்பொழுது பார்க்கலாம். மனிதர்கள் ஒளியின் பிள்ளைகளாக வாழ்வது நல்லதுதான் என்பதில் அய்யமில்லை.. மனிதர்கள் இப்படி வாழ முடிவதில்லை. நம் சமுதாயம் இப்படி நல்லவர்களாக வாழ்வதற்கு இடம் தருவதில்லை. சமுதாயம் காரணமாகத் தவறுகள் செய்யக்கூடிய சூழலையும் மீறி ஒரு சில மனிதர்களாவது இயங்க முடியும். மற்றவர்களைத் திருத்தவும் முடியும். இத்தகைய மனிதர்களை மையத்தில் வைத்துத் தான் கதைகள் சொல்லப்படுகின்றன.

இயேசுவைப் போலப் பிறர் செய்யும் துன்பங்களை ஏற்றுக் கொண்டு அதற்காகப் பழி பாவங்களில் ஈடுபடாமல் தீமை செய்தவர்களை மன்னிப்பது ஒரு உயர்வகையான மனிதப் பண்பு. வாழ்வில் இத்தகைய அழகிய அனுபவம் மனித வாழ்வுக்கு ஒளி தருகிறது என்பதில் அய்யமில்லை. இந்த அனுபவத்தை கிறித்துவ அனுபவம் என்று சிலர் குறிப்பிடுவதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். ஒளியின் பிள்ளைகளாகக் கிறித்துவர்கள் இருக்க வேண்டும் என்று கிறித்தவப் பெருமக்கள் கருதுவதை நாம் மறுக்கவில்லை.

இந்துக்களாக இருந்தவர்கள் கிறித்தவராக மதம் மாறிய பிறகும் தங்களிடம் இருக்கும் இருளில் இருந்து விலகவில்லை என்று சொல்வதில் உள்ள எதிர்மறைப் போக்கை நாம் கவனித்தாக வேண்டும். கிறித்தவர்களும் சமூகப் பொருளியல் சூழலை உடனடியாகக் கடந்து விடவும் முடியாது. இந்து மதத்திலிருந்து மாறி வந்தாலும் சாதி சடங்குகள் முதலிய பழக்கங்களில் இருந்து உடனடியாக விடுபடுவதும் சாத்தியமில்லை. கிறித்துவர்கள் ஆன பிறகும் சாதி முதலிய குணங்களில் இறுகி விடுவது ஒரு மனித அவலம். அறிவுரை / அருளுரை மட்டுமே சொல்லி மனித சமூகத்தைத் திருத்துவது ஒரு அரிய செயல்தான் என்பதிலும் அய்யமில்லை.

இயேசுவை உறுதியாகப் பின்பற்றும் மத போதகர்கள் இப்படிக் கறுப்புக் கயிற்றில் தொங்க நேர்வதையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். கிறித்துவத்தில் வரலாற்றுக் காலம் முழுவதும் இருவகை முரண் சக்திகள் செயல்படுவதைப் பார்க்கிறோம். மதம் நிறுவனமாகிறபொழுது ஆதிக்கத்தை உள்வாங்கிக் கொண்டதாக செயல்படுகிறது. இதற்கு எதிரான போக்கும் உடனடியாகவோ,

சற்றுக் காலம் கழித்தோ எழுவதைத் தடுக்க முடியாது. திருச்சபை மக்கள் நலம் கருதாமல் மக்கள் மீது அதிகாரம் செய்வது ஒரு கொடுமை. இயேசுவைப் பின்பற்றி நடக்க வேண்டிய மத போதகர்கள் இயேசுவின் பெயரைச் சொல்லிக் கொண்டே மக்களுக்கு எதிராகச் செயல்படுகின்றனர்.

திருச்சபைக்கு உள்ளிருந்தும் மக்கள் சார்பில் போராடுகிற மத போதகர்களையும் நாம் இன்றளவும் பார்க்கிறோம். இத்தகைய போராட்டங்கள் இங்கு தரப்பட்டுள்ள சில நாவல்களில் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன. கிறித்துவ அமைப்பில் மட்டும் இத்தகைய போக்கு இருப்பதாக நாம் காண்பதற்கில்லை. வேறு எந்த வகை சமய அமைப்பினுள்ளும் இத்தகைய முரண்பாடுகளும், போராட்டங்களும் நடைபெறவே செய்கின்றன. இலக்கியம் என்பதன் கருப்பொருளாக இதைப் பார்க்கிறோம். கிறித்துவ அமைப்புக்குள் மட்டுமல்லாமல், பிற அமைப்புகளினுள்ளும் சாதி முதலிய ஆதிக்கங்கள் செயல்படுவதற்கான வரலாறு மற்றும் பொருளியல் சூழல் என்பது மிக முக்கியமான காரணிகளாகச் செயல்படுகின்றன. இதைப் புரிந்து கொண்ட சில மதபோதகர்கள் தீவிரமான போராளிகளாக மாறவும் செய்கின்றனர். இவர்களை நக்சலைட்டுகள் என்று முத்திரை குத்தி அரசு மட்டுமல்லாமல், மதபீடங்களும் ஒடுக்கவும், ஒதுக்கவும் செய்ததை நாம் பார்க்கிறோம்.

கிறித்துவ மக்களும் இயேசுவை ஒரு கம்யூனிஸ்டு என்று புரிந்து கொண்டு போராட்டத்தில் தீவிரமாக ஈடுபடுவதையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். கிறித்தவக் கம்யூனிசம் என்று இதைச் சிலர் குறிப்பிடுகின்றனர். போராட்டம் இல்லாமல் மனித வாழ்க்கை மேம்படுவது இல்லை என்ற பொது நீதிக்குள் வைத்து இதை ஏற்க முடியும்.

நாவல்கள் குறித்த கட்டுரைகளில் அடங்கியுள்ள திறனாய்வு குறித்தும் இங்கு சிலவற்றைச் சொல்ல முடியும். பெரும்பாலும் நாவல்களின் உள்ளடக்கம் மற்றும் உருவம் குறித்து விரித்துரைப்பது என்ற முறையில் பல கட்டுரைகள் அமைகின்றன. வாசகர் நோக்கில் இதற்கான தேவையை நாம் ஏற்கிறோம். எனினும் இத்தகைய விரிவுரை மட்டுமே திறனாய்வாக அமைவதில்லை. இன்னும் சில கட்டுரைகள் நாவலில் இடம்பெறும் மனித வாழ்வின் சிக்கல் மற்றும் போராட்டங்கள் முதலியவற்றுக்குக் காரணியாகவும் பின்புலமாகவும் அமைகின்ற சமூகம் மற்றும் பொருளியல் சூழல்

குறித்த விரிவுரைகள் காணக் கிடக்கின்றன. இம்முறையில் நம் சமூகச் சூழலில் செயல்படும் நிலவுடமை முறை, முதலாளியம் பற்றியெல்லாம் சிலர் எடுத்துரைக்கின்றனர். மார்க்சியம், லெனினியம் என்று அறியப்படுகிற வரலாற்றுச் சூழல் குறித்த ஆய்வுரைகளும் இக்கட்டுரைகளில் இடம் பெறுகின்றன.

மனிதர்களுக்குள் செயல்படும் முரண்பாடுகளுக்கு அவர்கள் மட்டுமே காரணமாகவும் முடியாது. மதபோதகர் மட்டுமல்லாமல் இன்னும் எத்தனையோ பேர், அவர்களே அறியாமல் ஆதிக்கம் அல்லது அடிமைத்தனத்தை உள்வாங்கிக் கொண்டவர்களாகச் செயல்படுவதை இந்த ஆய்வுரைகள் தெளிவுபடுத்துகின்றன. திறனாய்வுக் கட்டுரைகள் என்ற முறையில் தரமான கட்டுரைகள் என்று சிலரது கட்டுரைகளை நாம் இனம் காணவும் முடியும்.

சமூக நலம், மக்கள், மனித விடுதலைக்காகச் செயல்படும் மதபோதகர்களையும் திறனாய்வு செய்யும் முறையில் சில கட்டுரைகள் அமைகின்றன. ஆண் செய்யும் தவறுகளை முழு அளவில் தாங்கிக் கொண்டு அவனைத் திருத்துவதற்காகத் தன் மீது சுமைகளைப் பெண்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமா? அதைப்போல எந்த நிலையிலும் பெண் தன் கற்பை இழந்துவிடக் கூடாது. கொள்ளைக்காரனை மன்னிக்கும் ஒரு மதபோதகர் வணிகர்களாகவும், வஞ்சகர்களாகவும் உள்ள மனிதர்களை ஓயாமல் காய்வது சரிதானா? விடுதலை இறையியலாளர்கள் உண்மையில் சமூக விடுதலைக்கான இறுதிப் போராட்டத்தைச் செய்வதற்கான தகுதி உடையவர்கள்தானா? இவ்வாறெல்லாம் சில கட்டுரைகளில் அங்கங்கே எழுகின்ற திறனாய்வுக் கருத்துக்களை நாம் மதித்துக் கேட்க முடியும்.

தற்காலத் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிக்கு நாவல் முதலிய படைப்புக்கள் மட்டுமல்லாமல் விரிவான திறனாய்வுகளும் தேவைப்படத்தான் செய்கின்றன. சில தரமான நாவல்கள் மற்றும் திறனாய்வுக் கட்டுரைகளுக்கு மட்டுமல்லாமல் பெரும்பாலான தமிழ் வாசகர்களுக்குத் தூண்டலை ஏற்படுத்தும் முறையில் இந்தக் கட்டுரைத் தொகுப்பு அமைந்திருக்கிறது. இதனைத் தயாரிக்கும் முறையில் நண்பர் டேவிட் சித்தையா அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இந்த நூலை வெளியிட முன்வந்த மணிவாசகப் பதிப்பக உரிமையாளர்

பேராசிரியர் மெய்யப்பன் அவர்களையும் நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

### *பின்னிணைப்பு :*

பெறுதல் : திரு. டேவிட் சித்தையா, ஓசூர்.

அன்புள்ள நண்பருக்கு, வணக்கம்.

நாவல் கட்டுரைகள் படித்து முடித்தேன். என் அணிந்துரை குறித்து மேலும் சிலவற்றை உங்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். இந்தக் கருத்துரைகளிலிருந்தும் தேவையான சில குறிப்புகளை இயலுமானால் என் கட்டுரையில் அங்கங்கே சேர்த்துக் கொள்ளுங்கள்.

கட்டுரைத் தொகுப்பில் 31 நாவல்கள் பற்றிய திறனாய்வு உரைகள் உள்ளன. சில நாவல்கள் தரத்தில் மிகவும் குறைந்தவை. பிரச்சார நோக்கில் எழுதப்பட்டவை. இந்த நாவல்களையும் நாம் ஒதுக்குவதற்கு இல்லை. புதியவர்கள் எழுதிப் பழக வேண்டும். தரமான நாவல்கள் என்று சிலவற்றை உறுதியாகக் கூற முடியும். அலைவாய் கரையில், மலரும் சருகும், கோவேறு கழுதைகள், ரப்பர், கானல், கொள்ளைக்காரர், இனி ஒரு உதயம், கீறல்கள் முதலியவற்றைச் சொல்ல முடியும்.

இராஜம் கிருஷ்ணன், செல்வராஜ், ஜெயமோகன், பொன்னீலன் முதலியவர்கள் தந்த நாவல்களைக் கிறித்தவ நாவல்கள் என்று குறிப்பிடுவதை ஏற்க மாட்டார் என்றே கருதுகிறேன். இமயம் போன்றவரின் நாவல்கள், தலித்திய நாவல் என்று குறிப்பிடுவதையே விரும்புவர்.

நல்ல திறனாய்வாளர்கள் என்று சிலரைச் சொல்லலாம். டேவிட் சித்தையா, அருட்கலைஞர் மத்தியாசு, ஆர்.கே. ஜேக்கப், திருமலை, கோ. கேசவன், பிளாரிடா முதலியவர்களைக் குறிப்பிடலாம்.

நாவல் குறித்து நான் பொதுப்படையாக எழுதியுள்ள குறிப்புக்களோடு கீழ்வருவனவற்றையும் சேர்க்க வேண்டும் என விரும்புகிறேன். கடவுள், ஆன்மா முதலியவற்றை உள்ளடக்கியதாகிய மதம் குறித்து நவீன கால நோக்கிலான நாவல்கள் சொல்வதில்லை. நவீன காலப் படைப்பாகிய நாவல் இலக்கியம் மனிதர்களின் சிக்கலைத்தான் மையப்படுத்துகிறது. நவீன காலம், சமூகம்,

பொருளியல், பண்பாடு என்ற வகைகளில் மனிதச் சிக்கலைக் கடுமையான நெருக்கடி நோக்கி நகர்த்துகிறது. வாழ்க்கையின் அர்த்தம் என்ன என்ற சிக்கல் கடுமையாக எழுகிறது. இந்த நிலையில் மனிதனின் உளவியல் சிக்கல்கள் கடுமையாகின்றன. இதன் காரணமாகவே நாவல்களில் சர்ரியலிசம் முதலிய புதிய அணுகுமுறைகளும் தேவைப்படுகின்றன. நாவல் அதிக அளவில் மதச்சார்பு அற்றது.

கிறித்தவ நாவல்கள் என்று சொல்லப்படுவனவும் அதிக அளவில் மனிதச் சிக்கலின் அழுத்தம் தாங்கியவையாக இருப்பதைத்தான் நாம் ஏற்கமுடியும். எத்தகைய சமூகச் சூழலிலும் அதிகாரிகள், ஆதிக்கவாதிகள் இல்லாமல் இல்லை. இவர்கள் மனிதச் சிக்கலை அதிகப்படுத்துகிறார்கள். இவர்களை மட்டுமே நாம் குற்றம் சொல்வதற்கும் இல்லை. இவர்களுமே வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் மாட்டிக் கொண்டவர்கள். மதபோதகர்களும் ஒரு வகையில் அதிகாரிகள் தான். இவர்களும் தங்களுக்குள் கடுமையான நெருக்கடிகளை உணரமுடியும். ஞானமுத்து இதை உணர்கிறார். அருள்தாசுக்கு இந்த உணர்வு குறைவு. இப்படியெல்லாம் திறனாய்வு முறையை ஆழப்படுத்த முடியும்.

திறனாய்வின் தேவை கருதி நிலக்கிழாரியம் என்றும், முதலாளியம் என்றும், அரைக் காலனியம், அரை நிலக்கிழாரியம் என்று நாம் பேசுவதை புரிந்து கொள்ள முடியும். இது குறித்து சில கட்டுரைகள் விரிவாகச் சொல்வதைக்கூட ஏற்கமுடியும்.

நீங்களும் இன்னும் இரண்டொருவரும் விரிவாகவே சொல்லுகிறீர்கள். இடையில் எனக்குள் ஓர் அய்யம். உங்கள் நாவல் குறித்து கோ. கேசவன் ஆழமான திறனாய்வு செய்திருக்கிறார். கேசவன் அவர்களின் அணுகுமுறையில் எனக்கு மாறுபட்ட கருத்து உண்டு. மனித சாரம் என்பதை மனிதனின் உற்பத்தித் திறன் என்று தொடங்கி பொருளியல் கட்டமைப்பு குறித்து உடனடியாகப் பேசுகிறார். மனிதர்களுடைய உற்பத்தித் திறனை முழு அளவில் விடுவிக்கும் சமூகம் தான் சோசலிசம் / கம்யூனிசம் என்று அவர் சொல்ல முடியும். இது முழு அளவில் பொருளியல் அணுகுமுறை. இந்த அணுகுமுறை முதலாளிய அணுகுமுறையிலிருந்து வேறுபட முடியாது. இதற்கு மாறாக மனித சாரம் என்பது மனிதர்களுக்குள் இயங்கும் படைப்புத் திறன் / படைப்பியக்கம். மனிதன் தன் படைப்பின்போதே புற உலகத்தை மட்டும் அல்லாமல் தன்னையும்

படைத்துக் கொள்கிறான். இவனுடைய படைப்புக்கள் இவனுக்கே அன்னியமாகும் சூழலை உடைமைச் சமூகம் ஏற்படுத்துகிறது. இந்த உடைமை சமூகம்தான் மனிதர்களை பிரிவுபடுத்துகிறது. படைப்புத் திறன்களை நாசமாக்குகிறது. இந்த இடத்தில்தான் மாயைகள், போதைகள், மதங்கள் உள்ளே புகுந்து விடுகின்றன. பொருளியல் அடிப்படையில் மட்டும் மனித சமூகத்தை மாற்றிவிட முடியாது. மனிதனுக்குள்ளிருந்து கலை, பண்பாடு, மெய்யியல் முதலியவற்றைப் பிரிக்கவும் முடியாது. மனிதச் சிக்கலை முழுமையாகத்தான் அணுக வேண்டும். இப்படி அணுகும் முறையில் தான் மத சிக்கலையும் பார்க்க முடியும்.

ஒடுக்கப்பட்ட மனிதனின் ஏக்கப் பெருமூச்சு என்று தொடங்கும் மார்க்ஸ், உடனடியாக ஒடுக்கும் சூழலுக்கு எதிரானக் கலகம் என்றும் மதம் பற்றிக் கூறுகிறார். மதத்திற்குள்ளும் கலகக்குரல் அடங்கியுள்ளது. புத்தர், இயேசு முதலியவர்கள் கலகக் குரலின் வெளிப்பாடுகள். இத்தகைய பார்வை இல்லாமல் மதம் பற்றி நம்மால் பேச முடியாது. தோழர் கேசவன் அவர்களின் கருத்தை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா என்று தெரியவில்லை.

விடுதலை இறையியல் குறித்து அதிக அளவில் எதிர்மறையாகத் தான் நீங்கள் சிந்திக்கிறீர்கள் எனக் கருதுகிறேன்.

நன்றி.

தங்கள்
ஞானி

# முனைவர் சு. அரங்கராசுவின் தமிழ்ப் புதுக்கவிதை – ஒரு திறனாய்வு என்ற நூலுக்கு அணிந்துரை

1.

1969இல் தாமரை இதழில் செ. கணேசலிங்கனின் செவ்வானம் நாவல் திறனாய்வுக் கட்டுரை மூலம் ஒரு திறனாய்வாளராக அறிமுகமானவர் அரங்கராசன். கவிதை/இலக்கியத் திறனாய்விலும் சமூக ஆய்விலும் குன்றாத ஈடுபாடுடையவர். தமிழகச் சூழலில் மார்க்சியம் எவ்வாறு தன்னை இணைத்துக்கொள்ளவில்லை/ செயல்படவில்லை என்பது பற்றித் தீவிரமான கருத்துடையவர். மார்க்சியத்தின் வரலாற்றுக் கண்ணோட்டத்திலும் உலகு தழுவிய பார்வையிலும் மார்க்சியம் செயல்படும் ஒரு தேசிய இனச்சூழலில் மரபின் வேர்களோடு மார்க்சியம் தன்னை இணைத்துக் கொள்வதன் தேவை பற்றியும் இடையறாது சிந்தித்து வருபவர்.

அண்மைக் காலத்தில் சாதியம் ஒரு மாபெரும் சிக்கலாக எழுந்துள்ள சூழலில் இவர் தனக்கான நியாயங்களை முன் வைக்கிறார். தமிழில் புதுக்கவிதையின் வரலாறு பற்றிய இந்த விரிவான நூல் ஆசிரியரின் பன்முக ஆளுமையைத் தெளிவாக நமக்குப் புலப்படுத்துகிறது. வல்லிக்கண்ணனின் நூலுக்குப் பிறகு இந்நூல் தமிழில் புதுக்கவிதை வரலாறு சொல்லும் நோக்கில் மிகச்சிறந்த நூல் என்பதை முதல் வாசிப்பிலேயே வாசகர் அறிந்துகொள்ள முடியும். யாப்பின் செறிவோடு கூடிய செய்யுள் முறையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு எவ்வாறு புதுக்கவிதை உருவாகியது என்பதன் ஆய்வே இந் நூலின் மைய இழை. பாரதி தொடங்கி வானம்பாடிகள் ஈறாக சுமார் அறுபதாண்டுக்காலத் தமிழ்க்கவிதையில் நிகழ்ந்த பல்வேறு மாற்றங்களை இந்நூல் விவரிக்கிறது. வரலாறு சொல்லும் போக்கில் மணிக்கொடி, எழுத்து, கசடதபற, வானம்படி ஆகிய இதழ்கள் மூலம் கவிதை பெற்ற தனித்தன்மைகளை இந்நூல் விளக்குகிறது. கவிதை ஆய்வுக்கான சமூகக்களத்தின் மீது அக்கினியின் பார்வை ஒரு பருந்தின் பார்வை போல சில பகுதிகளில் குவிந்திருக்கிறது. பிற நூல்களில் முதன்மை பெறாத இப்பார்வை மூலம் அக்கினி கவிதை ஆய்வை சமூகக்களத்தில் வைத்து புதிய விவாதங்களை முன் மொழிந்துள்ளார். இவரது ஆய்வில் இரண்டு கூறுகள் குறிப்பிடத்தக்கவை. ஒன்று, தமிழகச்சூழல். இரண்டு மூன்றாம் உலகச் சூழல்.

தமிழ்த்தேசிய இனத்திற்கு நீண்ட மரபுப்பெருமை உண்டு. இம்மரபில்தான் நம் ஆளுமையை ஆக்கங்களை நாம பெறுகிறோம். தமிழ்க்கவிதை மரபு, தமிழ் இலக்கிய மரபு ஆகியவற்றைத் தமிழகத்தின் நீண்ட வரலாற்றில் வைத்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். தமிழில் கவிதை படைப்பவர் இந்த வரலாற்றுச் சூழலிலிருந்தும் வரலாறு பற்றிய கல்விலிருந்தும் தம்மை விலக்கிக் கொள்ள முடியாது. தமிழக வரலாற்றையும், தமிழ்க்கவிதை வரலாற்றையும் கற்கும் எவரும் தனக்கான ஒரு பார்வையை வகுத்துக் கொள்வது இயல்பே. தமிழகச் சூழலை இந்தியச் சூழலுக்குள் நாம் முற்றாகக் கரைத்துக் கொள்ளவும் முடியாது. இந்த இடத்தில் ஆரியம், திராவிடம் என்ற முரண் எழத்தான் செய்யும். இந்த முரணிலிருந்து நாம் தப்பித்துக் கொள்ளவும் முடியாது. தூய்மை வாதம் இங்கு சாத்தியமில்லை. அப்படியானால் தமிழில் புதுக்கவிதை என்பதும் இந்தத் தமிழகச் சூழலிலிருந்து தன்னைத் துண்டித்துக்கொள்ள முடியாது. எழுத்து, கசடதபற மூலம் தமிழ்க்கவிதைக்கு அறிமுகமானோர் தமிழ்த்தேசிய இனச் சூழலிலிருந்து தம்மை விலக்கிக் கொண்டனர். இதன் மூலம் தமிழ்க்கவிதை இயக்கத்திற்குச் சில பின்னடைவுகள் ஏற்பட்டன என்பது அக்கினியின் மதிப்பீடு.

காலனியாதிக்கம் இங்கு ஆங்கிலேயர் மூலம் வந்து சேர்ந்தது. இந்தியாவின் அனைத்துக் களங்களையும் காலனியாதிக்கம் பாதித்தது. 47இல் ஆங்கிலேயர் சென்றபிறகு தற்சார்பு, சோசலிசம் பற்றிச் சில தொடக்கநிலை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தப் போக்குகள் இந்திய அரசியலிலும் பொருளியலிலும் குறிப்பிடத்தக்க மாறுதல்களைச் செய்வதில் வெற்றி பெறவில்லை. விரைவில் ஏகாதிபத்தியம் இந்தியாவின் பொருளியல், பண்பாட்டுக் களங்களில் தன் ஆதிக்கத்தை நிறுவத் தொடங்கியது. இன்றைய நிலையில் தொழில், வேளாண்மை, போக்குவரத்து, மக்கள் தொடர்புக்கருவி, கல்வி, மருத்துவம், பண்பாடு ஆகிய அனைத்துக் களங்களிலும் நவீன காலனியாதிக்கத்தின் கடுமையான பாதிப்புகளின் தீய விளைவுகள் மூன்றாம் உலக நாடுகளில் கடுமையான நெருக்கடிகளை உருவாக்கியுள்ளன. ஏகாதிபத்தியம் இந்நாடுகளில் நில உடைமை முறையை முற்றாக அழிப்பதற்கு மாறாகத் தனக்கு மூலப்பொருள்களை விளைவிக்கும் பகுதிகளாக இந் நாடுகளை மாற்றியுள்ளது. தொழில் முதலிய களங்களில் செயல்படும் முதலாளியத்தைத் தனக்குரிய தரகனாக்க ஏகாதிபத்தியம் முழு அளவில் மாற்றியுள்ளது. இந்த முதலாளியம் ஆக்கரீதியானது என வெளிப்படையான பார்வைக்குத் தோன்றினும், இந்த முதலாளியம்

பேரளவிலான அழிவுச் சக்தியே என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

நகர்ப்புறங்களில் ஆங்கிலக்கல்வியின் மூலம் காலனியாதிக்கத்திற்கான சார்பாளர்கள் உருவாக்கப்பட்டனர். 47க்கு முன்னால் நேரிடையான காலனியாதிக்கச் சார்பாளர்களும் பின்னால் நவீன காலனியாதிக்கச் சார்பாளர்களும் உருவாக்கப்பட்டனர். நகரச்சூழல், ஆங்கிலக் கல்வி, நுகர்வு, நுகர்வு வெறியைத் தூண்டும் வணிகபண்பாடு, நகர்ப்புற வசதிகள் இவற்றின் வழியே உருவாக்கப்பட்ட நகர்ப்புற நடுத்தர வர்க்கப் படிப்பாளிகள் தமிழகச் சூழல்பற்றி, தமிழ்மரபு பற்றி, தமிழ் இனத்தின் ஆக்கங்கள் பற்றி அக்கறை கொள்ளவில்லை. தமிழ் மக்களிடையில் இவர்கள் அந்நியப் பட்டவர்களாக வாழ்ந்தார்கள். மக்களின் அரசியல், பண்பாட்டு வாழ்வில் தங்களை இணைத்துக்கொள்ளவில்லை. மேம்பட்ட தம் கல்வியறிவு காரணமாகத் தம்மைத்தாமே அறிவாளிகளாக மதித்துக்கொண்டனர். மூன்றாம் உலகச் சூழலில் இத்தகைய அறிவாளிகள் உருவாக்கிய புதுக்கவிதை பற்றி அக்கினி நூல் முழுவதும் தன் விமர்சனத்தை முன்வைத்துச் செல்கிறார். ஏற்கனவே கூறியபடி, இந்நூலின் முக்கியத்துவம், தமிழ் புதுக்கவிதையைத் தமிழகம் என்ற களத்தில் வைத்துப் பார்ப்பதுடன் இதன் விரிந்த களமாக மூன்றாம் உலகச்சூழலில் வைத்தும் பார்க்கிறது.

பாரதி எழுதிய வசனக்கவிதைக்கான மூலத்தை மேற்கில் கண்டு பலர் எழுதியுள்ளனர். அக்கினி பாரதியின் வசனக்கவிதைக்கான மூலத்தை பாரதியின் வேதரிஷிகளின் கவிதைகளில் கண்டு விரிவான விவாதத்தின் வழியே நிறுவுகிறார். அக்கினியின் இந்தக் கண்டுபிடிப்பு வரவேற்கத்தக்கது. சாதி, மதம், இனம், வர்க்கம் ஆகியவற்றின் சார்பில்லாதது பாரதி கண்ட வேதரிஷிகளின் காலம். இதை வசன கவிதைக்கான மூலமாகக் காண்பதில் நம் தமிழ் உணர்வு சலனமடைய வேண்டியதில்லை. புதுமைப்பித்தனைப் பற்றியும் அக்கினி ஆராய்கிறார். அங்கதம் தொனிக்கிற பித்தனின் கவிதைகள் ஆசிரியம், வெண்பா ஆகியவற்றிலிருந்து நெகிழ்ச்சி பெற்றவை. பித்தனின் நெகிழ்ச்சியுற்ற யாப்பை தமிழ்மரபுடன் தொடர்புபடுத்துகிறார் அக்கினி. புதுக்கவிஞர்களுக்குள் தமிழ் மரபின் இயக்கம் பிச்சமூர்த்திக்குள்ளும் ஞானக்கூத்தனுக்குள்ளும் தொடர்வது பற்றி அக்கினி கண்டு சொல்வது குறிப்பிடத்தக்கது.

மேலைத் தாக்கத்தின் விளைவான அறிவுவாத புதுக்கவிதையோடு அக்கினிக்கு உடன்பாடில்லை. நவீன அறிவியல் தொழில் நுட்பம்,

பொருளியல் உற்பத்திப் பெருக்கம், வணிகப் பண்பாட்டுப் போக்கு முதலியவற்றின் விளைவாக மேலைய நாகரிகம் செல்லும் திசையறியாது தன்னுள் சிதைந்து தனது சமூகத் தன்மையைச் சிதைத்துக் கொண்டதால் தனிமனிதர்களிடையே மனமுறிவையும் மிகை உணர்ச்சியையும் தோற்றுவித்திருக்கிறது. இப்போக்கு மேலை நாகரிகத்தை ஏற்கும் நமது நகரச் சூழலிலும் ஏற்படுகின்றது. இதன் காரணமாகவே தமிழ்ப் புதுக்கவிதையில் இப்போக்கு இடம் பெற்றிருப்பதை அக்கினி விளக்குகிறார். இத்துடன், காலம் காலமாக சாதிய ஆதிக்க அமைப்பு வழங்கிய சலுகைகளால் தமது பண்பாட்டுத் தலைமையை இப்புதிய நவீன நகரமய ஜனநாயச் சூழலில் காப்பாற்ற முடியாமல் தத்தளிக்கும் ஆதிக்க வகுப்பாரின் மன முறிவும் பாதுகாப்பற்ற நிகழ்காலமும் நிச்சயமற்ற எதிர்காலமும் கலந்ததே புதுக்கவிதையின் உள்ளடக்கமாக அறுபதுகளில் இருந்ததைத் தக்க சான்றுகளுடன் விளக்குகிறார். ஆனால் அதே நேரத்தில் தமிழகத்தின் கிராமச் சூழல், தேசிய இன உணர்வு, தாழ்த்தப்பட்ட மக்களின் விடுதலை, பெண் விடுதலை போன்ற சமூகப் பிரச்சனைகளை முன்னிறுத்திப் பார்க்கும் பொழுது தமிழனுக்குள் சமூகத் தன்மை இன உணர்வு, விடுதலை வேட்கை ஆகியவை அழிந்து விடவில்லை. ஆகவே தமிழ்க் கவிதைக்குள் ஓசை மரபை நாம் ஒதுக்கி விடக்கூடாது. சமூகப் பரிமாணத்தோடு எழும் புதுக்கவிதை சமூகக் கூட்டுணர்விலிருந்து எழுவது. சமூகக் கூட்டுணர்வை மேலும் அதிக அளவில் உருவாக்கும் நோக்கமுடையது. எனவே இக்கவிதைப் போக்கை நாம் வளர்க்கவேண்டும் என்று கருதுகிறார் அக்கினி.

அக்கினி தமிழகத்தில் இன்று பரவலாகப் பேசப்படும் சாதியம் என்ற நோக்கிலிருந்தும் இந்தப் போக்கை மதிப்பிடுகிறார். அருவக் கவிதைகள் மேல் சாதியினரால் குறிப்பாக பார்ப்பனரால் எழுதப்பட்டவை. நெடுங்காலமாகவே தமிழ்ச் சமூகத்திலிருந்து இவர்கள் அந்நியப்பட்டவர்கள். ஆதிக்கத்திற்குக் கை கொடுப்பவர்கள். ஆதிக்கச் சாதியாக இருப்பவர். இவர்கள் தம் அந்நியமான தன்மையைத் தமிழ்க்கவிதையின் தலைமைப் பண்பாகத் திணிக்கின்றனர். இவர்களை மறுக்க வேண்டும் என்ற நோக்கிலிருந்து இவர்களது அறிவுவாத புதுக்கவிதைப் போக்கை அக்கினி விமர்சனம் செய்கிறார்.

கவிதை வெறும் மனத்தின் குரல் அல்ல. மக்களின் குரல் என்ற கருத்தை அக்கினி அழுத்தமாக வெளியிடுகிறார். அக்கினியின் நிலைப்பாட்டை விமர்சனத்திற்குள்ளாக்குவதற்கு முன் இவரது

ஏகாதிபத்திய எதிர்ப்புணர்வையும் புதிய காலனிய ஆதிக்கத்திலிருந்து நம் சமூகம் விடுபடுவதன் தேவை பற்றியும் அக்கினி கொண்டுள்ள தீவிர உணர்வை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். கவிதை தோன்றுவதற்கான சமூகத்தளம், வரலாற்று தளம் பற்றிய ஆய்வை நாம் மறுக்க முடியாது. ஏகாதிபத்தியத்தை எதிர்த்து மூன்றாம் உலக நாடுகள் தம்மை அனைத்து அம்சங்களிலும் திரட்டிக் கொள்ள வேண்டும். கவிதைப் பிரச்சனை என்பது இறுதியில் குறிப்பிட்ட சமூகத்தின் பிரச்சனை மட்டுமல்ல, உலகு தழுவிய பிரச்சனை என அக்கினி கொண்டுள்ள உணர்வை நாம் மதிக்கத்தான் வேண்டும். கவிதை ஆய்வு என்பது வெறும் ஓசை, யாப்பு, உவமை, உருவகம் பற்றியதோ அல்லது வடிவம், படிவம், குறியீடு உத்தி பற்றியதோ அல்ல. அப்படிச் சுருங்கி விடக்கூடாது. இறுதியாக கவிதை பற்றிய நம் கல்வி என்பது, நம் சமூகத்தை அதன் தளைகளிலிருந்து விடுவிப்பதற்கான ஆய்வு என்பதை நாம் ஏற்கத்தான் வேண்டும். சமூக விடுதலை என்ற தளத்தில் தான் ஒரு கவிஞன் அல்லது திறனாய்வாளன் செயல்படுகிறான். அல்லது செயல்பட வேண்டும் என்பதையும் நாம் ஏற்க வேண்டும். தமிழ்க் கவிதை ஆய்வுக்கு இத்தகைய ஆதாரவான, விரிவான, உறுதியான பார்வையை அக்கினி இந்த நூலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார் என்பதையும் நாம் காணத் தவறிவிடக் கூடாது.

அக்கினியின் ஆய்வு நெறியை மார்க்சிய நெறி என்று மதிப்பிடலாம். கைலாசபதி முதலியவர்கள் இலக்கிய ஆய்வுக்குப் பயன்படுத்திய இலக்கிய ஆய்வு நெறி அக்கினியின் மூலம் சில அம்சங்களில் விரிவு பெற்றுள்ளது. தவிர ஆழப்பட்டுள்ளது. தேசிய இனச் சிக்கலுக்கு கைலாசபதியோ பிற மார்க்சிய ஆய்வாளரோ முக்கியத்துவம் தரவில்லை. தேசிய இனச் சிக்கலுக்கு லெனின் தந்த முக்கியத்துவம் பற்றி நாம் அறிவோம். மூன்றாம் உலக நாடுகளின் தேசிய விடுதலையை சோஷலிச மாற்றத்தின் ஒரு பகுதியாக லெனின் மதிப்பிட்டார். சோவியத் ஒன்றியத்தில் குறிப்பாக ஸ்டாலின் காலத்தில் தேசிய இனங்கள் கடுமையாக ஒடுக்கப்பட்டதை சோவியத்தின் தகர்வின் போதாவது மார்க்சியக் கட்சி சார்ந்தவர் புரிந்துகொண்டுள்ளனர். தமிழ் நாட்டில் நீதிக் கட்சி தன்மான இயக்கம், திராவிடர் இயக்கங்கள் ஆகியவற்றின் தோற்றத்தைத் தமிழக வரலாற்றுச் சூழல் பற்றிய ஆய்விலிருந்து மார்க்சியர் மதிப்பிட்டிருந்தால், புரிந்து கொள்ளவும் ஏற்றுக்கொள்ளவும் முடிந்திருக்கும். பெரும்பாலும் மாஸ்கோவை நோக்கியும் சில சமயம் இலண்டனை நோக்கியும் மார்க்சியர் கவனம் முடக்கப்பட்டிருந்ததன்

விளைவாக தமிழ்த் தேசிய இனச் சிக்கலை மார்க்சியர் ஏற்கவில்லை.

பண்பாடு என்பது மேல் கட்டுமானத்தின் ஒரு பகுதி. அடித்தளம் மாறும் போது மேல் கட்டுமானம் தானே மாறும் என்ற ஸ்டாலினியப் பார்வை மார்க்சியருக்குள் இறுக்கம் பெற்றிருந்தது. முன்னைய பண்பாட்டின் வளத்தைச் செரித்துக் கொள்ளாதவன் மார்க்சியனாக இருக்க முடியாது என்ற லெனினியப் பார்வை இங்கு கவனிக்கப்படவில்லை. மேற்குலகின் சமூக அமைப்புகளின் மாறுதல்கள் படிமுறை வளர்ச்சிதான் ஒரே வகையான வரிசை என்று பொதுமைப் படுத்தப்பட்டதன் விளைவாக இந்தியச் சமூகம் அல்லது தமிழ்ச் சமூகத்தின் தனித்தன்மை பொருட்படுத்தப்படவில்லை.

மார்க்சியத்திற்கு முன்னர் இருந்தது இருண்டகாலம் என்ற கருத்தின் அடிப்படையில் தமிழகப் பண்பாட்டு வாழ்வின் வெளிச்சப் பகுதிகள் இருட்டடிப்புக்கு ஆளாயின. பொருள்முதல்வாதம் தான் மனித வளர்ச்சிக்குரிய ஒரே மெய்யியல் என்று கருதியதன் காரணமாகத் தமிழக வரலாற்றின் மெய்யியல் சாதனைகள் மறுக்கப்பட்டன. இவ்வளவு தவறுகளையும் செய்துகொண்டேதான் மார்க்சியர் தமிழகத்தின் அரசு அதிகாரத்தைக் கைப்பற்றுவதைப் பற்றிய கனவில் கரைந்து கொண்டிருந்தனர். கைலாசபதி முதலியோரின் ஆய்வுகளில் இந்தக் குறைபாடுகள் பரவலாக இருந்தன.

ஜீவா பழந்தமிழ் இலக்கியங்களைப் புகழ்ந்தாரே அன்றி, மார்க்சிய நோக்கில் ஆய்வை முன்வைக்கவில்லை. நா.வா. இவற்றை நில உடைமைக் காலத்தின் பகுதியாகவே கண்டு ஒதுக்கினார். இலக்கியப் படைப்பு என்பது அரசவைப் புலவர்கள் அல்லது நடுத்தர வர்க்கப் படிப்பாளிகள் வெளிப்பாடு அல்லது எதிரொலி என்றே மார்க்சியர் கருதினர். சமூக நிலவரங்களின் எதிரொலிதான் இலக்கியம் என்று சிலர் கருதினர். சமூகப் பிரச்சினைகளுக்கான எதிர்வினைதான் இலக்கியம் என்பதை இவர்கள் ஏற்கவில்லை, இந்த இடத்தில்தான் அக்கினி புத்திரன் பயன்படுத்தும் மார்க்சிய நெறியின் தனித்தன்மை துலங்குகிறது. சாத்தியமான இடங்களிலெல்லாம் தமிழ் மரபைப் போன்றுகிறார். தமிழ் மரபின் ஆக்கக் கூறுகளை எடுத்துக் கூறுகிறார். இந்த மரபின் தொடர்ச்சியாக மார்க்சியத்தைக் காண்கிறார். வானம்பாடி கவிதைகளுக்கு பாரதி, பாரதிதாசன், கலில் கிப்ரான், தாகூர் ஆகியவர்களின் கீழை இலக்கியப் போக்கே மூலம் என்கிறார். சங்கப் புற இலக்கியத்தில் அரசியலுக்குக் கொடுக்கப்பட்ட முதன்மை–நீண்ட இடைவெளிக்குப் பின்–பாரதி,

பாரதிதாசன் வழியே வானம்பாடிகளின் கவிதைகளில் தென்படுவதை உறுதிபடக் கூறுகிறார் அக்கினி.

தோழர் எஸ்.என். நாகராசன் அவர்களை முன்னோடியாகக் கொண்டு தமிழகத்தில் வளர்ந்துவரும் மார்க்சியப்போக்கை செழுமைப்படுத்துபவர்களில் அக்கினியும் ஒருவர். தமிழ்க் கவிதையை மூன்றாம் உலகக் கவிதையின் ஒரு பகுதியாகக் கண்டதில் அக்கினியின் பங்கு முக்கியமானது. கவிதையை சனநாயகப் படுத்துவது மூன்றாம் உலகக்கவிதையின் பண்புகளில் ஒன்றென அக்கினி பலமுறை குறிப்பிடுவதை இந்த நோக்கில் நாம் ஏற்க முடியும்.

அக்கினியின் ஆய்வுபற்றி சில விமர்சனங்களை முன் வைக்கும்போதே அண்மைக்காலத்தில் மார்க்சியத்திற்கு நேர்ந்துள்ள தகர்வின் மூலம் மார்க்சியம் பற்றி நாம் பெறும் தெளிவு பற்றியும் சொல்லவேண்டும். அடித்தளம்தான் மேல்கட்டுமானத்தை எப்போதும் தீர்மானிப்பது என்பது உண்மையல்ல. அடித்தளம் மேல்கட்டு என்ற கட்டிடக்கலை தொடர்பான சொற்களை வைத்து இவற்றின் முரணியக்கம் பற்றிப் பேச முடியாது. எதிர் மறைகளின் உறவு, போராட்டங்களின் வழியே இயக்கம் பற்றிய முரணியல் பற்றித்தான் பேச முடியும். மனிதனை நிர்ணயிக்கும் கூறுகளில் பண்பாடு, கலை, இலக்கியம், அறிவு முதலியவற்றை நாம் புறக்கணிக்க முடியாது. அறிவியல் தொழில்நுட்பம் என்பதற்கு அழுத்தம் தருவதன் மூலம் உற்பத்திச் சக்திகள் முதன்மை பெற்று இதன் விளைவாக சோசலிசம் என்ற போக்கினுள் முதலாளியச் சக்திகளே முதன்மை பெறுகின்றன.

அன்னியமாதல் என்ற மார்க்சியக் கோட்பாட்டின் மூலம் பாட்டாளி வர்க்கம் மட்டுமல்லாமல், முதலாளிய வர்க்கம் அரசு அதிகார வர்க்கம், நகர்ப்புறப் படிப்பாளிகள் முதலியோர் சமூகத்திலிருந்து எவ்வளவு தூரம் அன்னியப்பட்டுள்ளனர் என்பதையும் இவர்கள் சுரண்டலை, அடிமைத்தனத்தை, அதிகாரத்தை உற்பத்தி செய்வதன்மூலம் தாமே அவற்றிக்கு அடிமைப்பட்டிருப்பதையும் இன்று புரிந்து கொள்கிறோம். சுதந்திரம் பிரிவு படாதது என்று மார்க்ஸ் கூறினார். பிறர் மீது அடிமைத்தனத்தைத் திணிப்பவன் சுதந்திரமானவனாக இருக்க முடியாது. தனக்கு விடுதலை தேவை என்றால் பாட்டாளி வர்க்கம் முதலாளிய வர்க்கத்தையும விடுவிக்க வேண்டும். தாழ்ந்த சாதியினர் தமக்கு விடுதலை வேண்டுமென்றால் உயர்ந்த சாதியினரையும் சேர்த்தே விடுவிக்க வேண்டும்.

ஆனால் இன்று நடப்பதென்ன? அரசு அதிகாரத்தைக் கைப்பற்றுவதன் மூலம் அதிகாரத்தின் இறுகிய பிடிக்குள்தான் நாமும் அகப்பட்டுக் கொண்டோம் அதன் விளைவை சோவியத்தில் பார்த்து விட்டோம். நமக்கு அதன் படிப்பினைகள் முன் நிற்கின்றன. அதிகாரக்களைவு என்பது நம் கவனத்தில் முன் நிறுத்தவேண்டிய பிரச்சனை. சமூக மாற்றம் என்பது பலவகை இயக்கங்களின் மூலம் செயல்பட வேண்டும். ஒற்றைப் பரிமாணத்தைக் கொண்ட இறுகிய கோட்பாடு அல்லது மெய்யியல் நமக்குப் பயன்படாது.

2.

அக்கினி ஆய்வுக்குள் கண்டுரைக்கும் கருத்துக்களைப் பற்றிய எனது கணிப்பை இனி சுருக்கமாகத் தெரிவிக்கிறேன்.

செய்யுளிலிருந்து உரைநடை இலக்கியம் மாறியதைக் கைலாசபதி ஏற்கனவே மேலைநாட்டு ஆதார நூல்களிலிருந்து விளக்கியுள்ளார். முதலாளியத்திற்கும் உரைநடை ஆக்கத்திற்கும் நெருக்கமான உறவைக் கற்பிப்பது இந்த ஆய்வு. அரசியல் குரலை உயர் அளவில் இந்த ஆய்வு எழுப்பும். கவிதையின் புறநிலை வடிவ மாற்றத்தை விளக்கும். கவிதையின் அகநிலைக்குள் வந்த புதிய மாற்றங்களையும் இந்த ஆய்வு திறம்படச் சொல்லும். இந்த ஆய்வின் வரையறை இவ்வளவுதான். நெடுங்காலமாக நிரந்தரமாக ஓடிவரும் கவித்துவத்தின் இயக்கத்தை இந்த ஆய்வு விளக்காது.

ஜீவ ஒளி கூறும் கவித்துவம் என்பதை நாம் இந்த இடத்தில் புரிந்து கொள்வது நல்லது. நமது வாழ்நிலைக்கும் படைப்பு நிலைக்கும் இடையிலே தோன்றும் முரண்பாடுகளுக்கிடையே ஓயாது நிகழும் போராட்டமே கவித்துவத்தின் ஊற்றுக்கண்ணாகும். இப்போராட்டம் எல்லாக் காலத்திலும் எல்லா அமைப்பினுள்ளும் நிகழ்வது, தொடர்வது. இதையே வர்க்கப் போராட்டம் என்கிறோம். அரசியல், பொருளியல் சூழலே நமது வாழ்நிலையாகிறது. முரண்பட்ட சக்திகளுக்கிடையே உள்ள ஒருமைப்பாடே, உறவே, நெருக்கமே வரலாற்றை நடத்தி வருகிறது. இந்த வரலாற்றுச் சாரம்தான் கவித்துவத்தின் உள்ளுறை. தன்னை சமூகத்தினுள்ளும் வரலாற்றினுள்ளும் அண்டத்துள்ளும் பொருத்திப்பார்க்கும் சிந்தனைதான் கவித்துவமாகத் திரள்கிறது. படைப்பு நிலைதான் வரலாற்றின் தொடர்ச்சியை உறுதிப்படுத்துகிறது. விலங்கினத்துககு இப்படைப்புநிலை இன்மையாலேயே வரலாறின்றி கவித்துவமின்றிப் போகிறது. வரலாறும் அதை ஒட்டிய வளர்ச்சியும் மானுடத்தின் தனித்தன்மைகள். இவையே மானுடத்தின் அழகியலுக்கும்

கவித்துவத்திற்கும் காரணங்கள். ஓர் இறையியலாளன், மெய்யிலாளன், சமூகவியலாளன், அறவியலாளன், அறிவியலாளன், அரசியலாளன் ஆகிய அனைவருமே தம்மை யார் என்று அறிவதிலும் தன்னை மற்றவற்றோடும் மற்றவரோடும் பொருத்திப் பார்ப்பதிலும் கிடைக்கிற பேரறிவே, பெரு மகிழ்ச்சியைத் தருகிற கணங்களே கவிதைத் கணங்களாகின்றன. இந்தக் கவிதைக் கணங்களே அழகியல் அனுபவங்களாக, கலையியல் அனுபவங்களாக வெளிப்படுகின்றன. அறிவியல் அனுபவம்கூட கலையியல் அனுபவத்தின் மற்றொரு பரிமாணமே.

இந்த நிலையில் சித்தர்களை கலைஞர்கள் என்பதா, அறிவியலார் என்பதா, மெய்யலார் என்பதா, கலகவாதிகள் என்பதா என்று வினவினால் 'படைப்பாளிகள்' என்று மொத்தமாக ஒரே விடை கூறிவிடலாம். ஏற்கனவே கலைந்து துண்டுதுண்டாகிச் சிதைந்து சிதறியிருக்கிற உண்மைகளை அனுபவங்களை ஒன்றாக்கிப் பொருததிப்பார்க்கிற போது கவித்துவத் தெறிப்புகள் மின்னுகின்றன. இந்த கவித்துவத்தின் விகசிப்பில் ஒழுங்கின்மை ஒழுங்காகும், ஒழுங்கு ஒழுங்கின்மையாகும். குழந்தைகள் விளையாட்டில் இந்த அழகியல் நுட்பம் கவித்துவம் பெற்றுத் திகழ்கிறது. கலைப்பதன் மூலம் புதிய உருவத்தை உருவாக்குவது கலைந்து கலந்து கிடக்கும் அருவத்திலிருந்து உருவத்தை உண்டாக்குவது இவ்விரண்டிலுமே கவித்துவம் ததும்புகிறது. மறைந்துள்ள உருவத்தை வெளிக்கொணரும் படைப்புச்செயலில் குழந்தைகள் கவித்துவ இன்பம் காண்கின்றனர்.

இந்த அழகியல் அனுபவமும் கலையியல் திளைப்பும் தத்தமது சமூகக் கோட்பாட்டிற்கு ஏற்ப மாறுபடவே செய்யும். சிதைவிலிருந்து ஒருமைக்குச் செல்பவனின் கவித்துவமும், ஒருமையிலிருந்து சிதைவுக்குச் செல்வனின் கவித்துவமும் ஒன்றல்ல. ஒரு நாணயத்தின் இரு பக்கங்களே.

எனவே ஆதி மனிதன், சித்தர் ஆகியோரின் குரல்கள் கவித்துவத்தின் குரல்கள் ஆகும். இன்று முதலாளியச் சமூகம் ஏற்படுத்தும் சமூக முரண்பாடுகளுக்கிடையிலான நெருக்கடியின்போது கவித்துவம் தன் குரல் எழுப்பும். 'வாழ்க்கையின் அர்த்தத்தை அழிக்காதே ஒருமையைச் சிதைக்காதே' என்பது கவியின் குரல். பாரதி காட்சி கவிதைக்கு மூலம் வேத ரிஷிகளின் கவிதை என்ற கண்டுபிடிப்பில் இந்த உண்மை அடங்கியிருக்கிறது. தமிழ்க் கவிதையை சமூக வாழ்வுக்கு மிக

நெருக்கமானதாக பாரதி கொண்டுவந்தார். இந்தத் தொடர் பயணததின் ஒரு கட்ட வெளிப்பாடு வசனக் கவிதை.

பிரெஞ்சுப் புரட்சி மனிதர்களுக்குள் சமத்துவத்தை ஏற்படுத்தியது. புரட்சிக்கரக் காலங்களில் கவிதை மனிதனின் பொது உணர்வு ஆகிறது. பிரெஞ்சுப் புரட்சி மக்கள் மத்தியில் ஏற்படுத்திய உணர்வுகள் கவித்துவம் மிக்கவை. அமெரிக்க சுதந்திரப் போரும் இரகசியப் புரட்சியும் ஏற்படுத்திய உணர்வுகள் கவித்துவமானவை. பொருளுக்கும், அதிகாரத்திற்கும் இடம் கொடுத்தவனுக்குள் கவித்துவம் இல்லை. பொருளையும், அதிகாரத்தையும் தகர்ப்பவனுக்குத்தான் கம்பீரமான கவித்துவம் பொங்கும். வால்ட் விட்மனுக்குள் பொங்கிய கவித்துவம் பாரதிக்குள்ளும் பாரதிதாசனுக்குள்ளும் பொங்கியது. எழுத்து கசடதற-காரர்கள் உலகை முற்றாக மாற்றும்உணர்வு அற்றவர்கள். அக்கறை அற்றவர்கள். அங்குமிங்குமான சில மாறுதல்களையே அவர்கள் விரும்பினர். கவித்துவம் என்பது மனிதன் தன்னை முழு அளவில் திரும்ப வார்த்துக் கொள்ளும் படைப்பாற்றல். சமதர்மம் என்பது கவித்துவ வீரியம் மிக்க சமூகம். ஆகவே, கவிதை என்றைக்கும் சாகாது. கவிதைக் குணம்தான் சமயங்களையும், கடவுளர்களையும் படைக்கிறது. இயற்கையைத் தனக்குள் முழு அளவில் ஈர்த்துக் கொள்வது கவிதைக்குணம். அன்பில் தழைப்பது கவிதைப் பண்பு. ஆற்றங்கரையில் நின்று அதில் இறங்க விரும்பாமல் கரையில் நின்று முணுமுணுப்பவன் அழுகுணிச் சித்தன். எழுத்திலும், கசடதபற-விலும் இத்தகைய அழுகுணிகள் இருந்தனர்.

வானம்பாடிகள் தம்மை முழு அளவில் தகர்த்துக்கொள்ளவில்லை. ஆகவே, கவிதைப் பண்பைப் பேரளவில் பெறவில்லை. அநேகமாக அமைப்பியல் பார்வை நமக்குள் அதிகம் ஈர்த்துக்கொண்டபிறகு, கவிதைப் பண்பு பற்றி தெளிவுபெற முடிந்திருக்கிறது. ஆதிவாசி என்று தமிழவன் கூறகிறார். ஆதிப் பொது உடைமையாளன் என்று நான் கூறுகிறேன். ஆதிவாசியைக் காட்டிலும் ஆதிப் பொதுமையாளன் அர்த்தம் செறிந்தவன். நமக்கு நெருக்கமானவன். இவனுக்குள் இயல்பாக இருப்பது சமதர்தம்.

அக்கினியின் ஆய்வில் கீழ்க்காணும் கருத்துக்கள் மேற்கொண்டு ஆய்வுக்கு உறுதுணையாய் அமைபவை. கு ப.ரா.., ந.பி.யும் எழுத்துக் கவிஞர்களும் சாதிய முரண்பாட்டை முதன்மைப் படுத்தவில்லை.

இவர்களுக்குப் பின், செய்யுளா, வசனமா என்ற விவாதம் மேலோங்கியது. கவிதை சிறக்கவில்லை. புதுமைப்பித்தன்

கவிதைகள் பற்றி அக்கினியின் கருத்துக்கள் மிக முக்கியமானவை. மணிக்கொடியின் கால கட்டம் தமிழ் இலக்கிய வரலற்றில் வணிகப் பண்பாட்டுக்கு எதிராக சிறு பத்திரிகைப் பண்பாட்டைத் தூக்கிப் பிடித்ததன் மூலம் உண்மையான இலக்கியத்தையும் இலக்கியவாதிகளையும் காப்பாற்றியது. மணிக்கொடிக்குப் பின் வந்தோர் தம் கால சமுதாய முரண்பாடுகளை ஒதுக்கி வைத்துவிட்டு.செய்யுட் கவிதைக்கு எதிராக வசன கவிதையை நிறுத்தினர். அதன் பிறகு வசனமா கவிதையா என்ற விவாதத்தைத் தொடர்ந்தனர் என்ற உண்மையை அக்கினி குறிப்பாக உணர்த்துகிறார்.

கசடதபற வானம்பாடி காலத்தோடு ஒப்பிடும்போது எழுத்துக் காலம் சவால்களை எதிர்கொண்ட காலமாகும். புதுக்கவிதை தன் முகம் தேடிக் கொள்கிற காலம். தன்னந் தனியாகப் பாதை அமைத்துப் பயணம் தொடங்கிய காலம். கசடதபற கவிஞர்கள் பொது உடைமைக் கட்சியின் அரசியலைப் புறக்கணித்தனர். தமிழகத்தில் தி.மு.க.வின் அரசியலையும் ஏற்கவில்லை. தமிழ் மரபின் சமயக் கூறுகளைப் புறக்கணித்தனர். நில உடைமைச் சார்பிலான பண்பாட்டை மறுக்கும் அதே சமயம் முதலாளியத்தின் தாக்கத்தால் பாதிக்கப்பட்டு சமூக விமர்சனம் தந்தனர். உண்மையில் தமிழில் கசடதபற ஒரு நிதானமான எதிர்ப்புக் குரல். அக்கினி கூடிய வரை கசடதபறவின் நல்ல பகுதிகளைத் தன் ஆய்வில் ஓரளவு சுட்டியிருக்கிறார்.

க.கை. கூறிய புதுக்கவிதையின் மூன்றாம் காலகட்டம் வானம்பாடிகளுடன் முடிகிறது. இதற்கு அடுத்த கட்டம் எண்பதுகளின் கவிதை. சமுதாயத்தின் குரல் என்ற அளவில்தான் அக்கினி கவிதையைப் பார்க்கிறார். ஆனால் இதற்கு மேலும் கவிதை வாழ்வதையும், வளர்ச்சி பெறுவதையும் 80களின் கவிதைகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

சமூக வரலாற்றுப் போக்குக்கேற்ப இலக்கியத்தின் உள்ளடக்கமும், வடிவமும் மாறும் என்ற கருத்தின் இயந்திரவியல் தன்மையைக் காணவேண்டும். உள்ளடக்கம் வடிவம் என்று பேசுவது இன்று பெரும்பாலும் பொருந்தி வராது. இத்தகைய விவாதத்தில் எழும் சிக்கல்கள் பலவும் இப்படி உண்மையில்லாத வேறுபடுத்தலில் இருந்துதான் தொடங்குகிறது. புற வடிவம், உள் வடிவம் என்று வகைப்படுத்துவது, கவிதை பற்றிய ஆய்வுக்கு வழி செய்யும். உத்தி, உவமைகள், படிமம், ஓசை, பேச்சுமுறை, நாடக முறை, மேடைத்

தோரணை, கதை என்று பல கூறுகளையும் பேசுவதற்கு இத்தகைய பாகுபாடு உதவும் உண்மையில் இது பாகுபாடு கூட அல்ல. ஒரு வகையில் பகுத்தறிதல் மட்டுமே. இந்தப் பகுப்பாய்வில் கவிதை பற்றித்தான் அனைத்து அம்சங்கள் வழியாகவும் நாம் பார்க்கிறோம் உள்ளார்ந்த கூட்டிணைப்பான (Organic) முறையில் ஆய்வு என்பது இத்தகையதுதான். இத்தகைய பகுப்பாய்வில் நமக்குக் கூடுதலான உண்மைகள் கிடைக்கும்.

புதுக்கவிதை என்பது நம் காலத்தின் கவிதை. நம் கால மனிதனின் சிக்கல்களைப் பற்றிய உணர்வையும், தெளிவையும் பெறுவதற்கான தூண்டலே கவிதை. உள்ளடக்கம் வடிவம் என்பதை மார்க்சிய நெறியில் எதிர் நெறிகள் எனக் கொண்டால் உள்ளடக்கத்தைத்தான் அழுத்திக் கூற வேண்டி வரும். அப்புறம் சமூகம், அரசியல் ஆகியவை தாமே அழுத்தம் பெறும். கவிதையில் படிமம், குறியீடு ஆகியவற்றுக்கு எதிராகப் பேச வேண்டி வரும். இப்படித்தான் மார்க்சியம் செயல்பட்டிருக்கிறது. மார்க்சியம் கவிதையின் ஊற்றுக் கண்களைத் தேடிக் காணவில்லை.

உத்திகளை மேலும் விரித்துச் சொல்லலாம். முரண்–அங்கதம் என்ற இரண்டும் புதுக்கவிதைக்குரிய உத்திகள். இவை போலவே படிமம், குறியீடு ஆகியனவும் முக்கிய உத்திகளாகும். உவமை பொருளை அழகு படுத்துவதற்கா, பொருளை புலப் படுத்துவதற்கா என்ற கேள்வி பேராசிரியர் காலத்திலேயே கேட்கப்பட்ட கேள்வி. முரணும் அங்கதமும் பழங் கவிதைகளிலும் உண்டு. எனினும் புதுக்கவிதையில் இவற்றின் முக்கியத்துவம் அதிகம். இறைச்சி, உள்ளுறை கொண்ட கவிதைகளின் வீரியம் பழங்காலத்திலேயே உணரப்பட்டது. உண்மையில் தமிழ்க் கவிதை, தன் தனித் தன்மையைப் பதித்த இடம் இது என்று சொல்லலாம். இறைச்சி, உள்ளுறை, தொனி, படிமம், குறியீடுள்ள கவிதைகள் காலந்தோறும் வாசகனுக்குள் தொடர்ந்து எழுப்பும் சலனங்களின் மூலம் வாசகனுக்குள் இருக்கும் கவிஞன் விழித்துக் கொள்கிறான். தன்னைக் கவிஞனாய் அறிவதன் மூலம் தனக்குள் இயங்கும் சமூகம், வரலாறு இயற்கை ஆகியவற்றுள்ளும் தன்னைக் காண்கிறான்.

3.

**அ**க்கினியின் ஆய்வு முறையில் இன்றைய நோக்கில் சில முக்கியத் திருத்தங்கள் தேவைப்படுகின்றன. செய்யுளை நில உடைமைச் சமுகச் சார்பினது, உரைநடை முதலாளியச் சமூகச் சார்பினது; இலக்கிய வடிவங்கள அந்தந்த காலத்துச் சமூக அமைப்புடன் தொடர்புடையது;

உள்ளடக்கம்தான் வடிவத்தைத் தீர்மானிக்கிறது எனத் தம் கருத்துக்களை முன்வைக்கிறார். அடித்தளம்தான் மேல் கட்டைத் தீர்மானிக்கிறது என்ற மரபு முறையிலான மார்க்சிய வாய்பாடு இவ்வாறு அக்கினிக்குள் வலுவாக இடம பெறுகிறது. கலை வடிவங்களுக்கும் அவை தோன்றிய காலத்து சமூக அமைப்புகளுக்குமிடையே நேரிடையான உறவைத் தீர்மானமாகச் சொல்ல முடியாது. ஓர் உள்ளடக்கம் பல வடிவங்களில் வெளிப்படும். எந்த ஒரு இலக்கியத்தையும் நிகழ்வையும் அதற்கான விரிவான வரலாற்றுச் சூழலில் வைத்துக் காண்பது மார்க்சிய நெறி. சமூக அமைப்புக்கும் கலை வடிவத்திற்கும் இடையில் நிலவும் பல கண்ணிகளை ஒன்றுக்கு ஒன்று என்ற விதத்தில் சுருக்கி விட இயலாது. ஒரு சமூகத்தின் கலை அடைந்திருக்கும் உன்னத்தை அந்தச் சமூகத்தின் பொருளியல் சூழலிலிருந்து வகுக்க முடியாது என்று மார்க்ஸின் எச்சரிக்கையை இங்கு நினைவுபடுத்திக் கொள்வது நல்லது.

உள்ளடக்கம்தான் வடிவத்தைத் தீர்மானிக்கிறது என்பது ஒருவகை இயந்திரவியல். முதலாளிய சமூகத்தின் சீர்குலைவுகளுக்கிடையில் தோன்றிய கலை, கலைக்காகவே என்ற கோட்பாடு, சமூகச் சீரழிவிலிருந்து ஒரு கலைஞன் தன் கலையைக் காப்பாற்றி வைக்கும் கோட்பாடு எனப் பிளக்கனோவ் விளக்கியுள்ளார். இசைக் கலையின் நுட்பங்களைச் சமூக அமைப்பிலிருந்து விளக்க முடியாது. ஒன்றோடொன்று தொடர்புடைய பல தரவுகளைக் கொண்டுதான் இவ்வகைப் போக்குகளை விளக்க முடியும்.

படைப்பு என்பது சமூக நிலவரங்களுக்கான எதிர் வினையாகவும் அமையும். தவிர, கவிதையின் உள்ளடக்கம் (அல்) வடிவம் என்று பகுப்பதன் மூலம், படைப்பியக்கத்தை விளக்க முடியாது. இதற்கு மாறாக, கவிதையின் புறக் கட்டமைப்பு, அகக் கட்டமைப்பு என்று பார்ப்பதன் மூலம் இலக்கியப் படைப்பைச் சிறப்பாக விளக்க முடியும். கவிதை எதுகை மோனையின்றி இயங்குவது போல, படிமம், குறியீடு இன்றியும் இயங்கும். ஒரு கலை தான் தோன்றிய பிறகு அதன் சுயேச்சையான விதிகளின் வழியே இயங்கும் என்று எங்கல்ஸ் கூறியதை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளலாம். கவிதை தோன்றுவதற்கான மூலங்கள் எவை என்பது பற்றி அக்கினி அதிக கவனம் செலுத்தவில்லை. காலந்தோறும் கவிதை காலத்திற்கேற்பத் தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது. கவிதை மனிதர்க்கான இன்றியமையாத ஆக்கக் கூறுகளுள் ஒன்று. அக்கினியிடம் இத்தகைய

பார்வை செழிக்கவில்லை.

மனிதன் உழைப்பின் மூலம் கருவிகளைக் கொண்டு தன்னைத் தானே படைத்துக் கொள்பவன். படைப்பின் மூலம் சமூகச் சூழலிலிருந்து மேலும் அதிக அளவிலான விடுதலையை மனிதன் பெறுகிறான். அழிப்பதன் மூலமும் தன்னைப் படைத்துக் கொள்பவன். மரணத்தின் மூலம் உயிர்ப்பைப் பெறுபவன் மனிதன். பட்டுப்புழு பட்டுநூலை உற்பத்தி செய்வதன் மூலம் தன்னை அழித்துக் கொள்கிறது. கலைஞனும் இத்தகையவன். இவ்வாறு கலைப் படைப்பை மார்க்ஸ் விளக்கியிருக்கிறார்.

ஒவ்வொரு சமூகமும் தனக்கான இலக்கியத்தைப் படைத்துக் கொள்கிறது. புதுக்கவிதை முதலாளிய சமூகத்தின் படைப்பு என்று கொண்டால், இதை ஏன் அச்சமூகம் படைக்கிறது என்று நாம் காண வேண்டும். தமிழகச் சூழலில் புதுக்கவிதையின் இயக்கத்தை நாம் விளக்க முடியும்.

முதலாளிய சமூகம் கலைஞர்களைக் கடுமையான அந்நியமாதலுக்கு உள்ளாக்குகிறது. எழுத்து, கசடதபற கவிஞர்களோ தம் கால சமூகத்தின் அரசியலோடு, அதிகாரத்தோடு ஒத்துப்போனவர்கள் அல்லர். சமூக நெருக்கடிகளுக்கிடையில் கவிதைக்குள் ஒதுக்கியவர்கள். கவிதையின் மூலம் தம்மைத் தக்க வைத்துக் கொண்டவர்கள். மரபு முறையிலான மதம் இவர்களைத் தாங்கவில்லை. வாழ்வுக்கான அர்த்தத்தைக் கவிதைக்குள் படைத்துக் கொண்டவர்கள். சமூகத்தின் இயக்கத்தை இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. ஆகவே தனிமைப் படிதலாலும் அந்நியமாதலாலும் அதிகம் பாதிக்கப்பட்டவர்கள்.

மனிதனுக்குள் இயங்கும் கவித்துவம் என்பது மனிதனுக்குள் ஆழத்தில் இயங்குகிறது. பண்பாட்டோடும் வரலாற்றோடும் தொடர்புடையது இக்கவித்துவம். மனிதன் தன்னை நெருக்கடிக்குள்ளாக்கியிருக்கும் சமூகச் சூழலைத் தோண்டித் துருவி ஆராயும் பொழுது தனக்குள் ஆழத்தில் இன்னொரு மனிதனைக் காண்கிறான். தனக்குள் சுரண்டலை விரும்பாத–கிடைத்ததைப் பலரோடு பகிர்ந்து கொள்ளும் ஒரு புராதன பொதுமையாளனைக் காண்கிறான். இவன் ஆதிமனிதன். கடுமையான உழைப்பால் இவன் விளைவிப்பது என்பது பலரோடு பகிர்ந்து கொள்ளத்தான். தனக்குள் இத்தகைய ஆதிப்பொது உடைமையாளனை இவன் சந்திக்கும் பொழுது இவனை ஒரு தரிசனமாகக் காண்கிறான். நிமிர்ந்தெழும் இவன் தன்னை நெருக்கும் சுரண்டல் சமூக

அமைப்பைத் தகர்க்க விரும்புகிறான். உலகம் பொது என உரத்து முழங்குகிறான். இவன் கலைஞன். உடைமைச் சமூகம் தன் நெருக்கடிச் சூழலில் இத்தகைய கலைஞனை உயிர்ப்பிக்கிறது. வரலாறு நெடுகிலும் இத்தகைய கலைஞன் இயங்குவதை நம்மால் காண முடிகிறது. தன்னை அதிகம் தோண்டிக் கொள்ளும்போதுதான் இத்தகைய கவித்துவ ஊற்றை மனிதன் காணமுடியும். மார்க்சுக்குள் ஒரு பிராமித்தியஸ் என்றும் இயங்கினான். இவ்வாறெல்லாம் அக்கினி பார்த்திருக்க வேண்டும்.

மார்க்சியம் பற்றிய புதிய வெளிச்சத்தில் பார்க்கும்போது சில உண்மைகள் மேலும், நமக்குத் தெளிவுபடும். கசடதபற படிப்பாளிகளை நகரச்சூழல் பாதித்தது போலவே வானம்பாடிக் கவிஞர்களையும் பாதித்தது. நவ காலனியம் மெல்ல மெல்ல எல்லார்க்குள்ளும் இடம் பிடித்தது. தமக்குள் சில பல அம்சங்களில் இறுகிய இவர்கள் தம்மைத் தேவையான அளவுக்கு உடைத்துக் கொள்ளவோ, தோண்டிக் கொள்ளவோ முடியவில்லை. கவித்துவ ஊற்றின் ஆழம் இவர்களுக்குத் தட்டுப்படவில்லை. இந்த ஆழத்தற்குச் சென்றால்தான் மெய்யியல் பார்வை இவர்களுக்கு வசப்படும்.

மார்க்சியம் பற்றிய ஆழ்ந்த தேடல் வானம்பாடிகளில் பலர்க்கு இல்லை. கவிதை பற்றிய இவர்கள் பார்வை தமிழ்க் கவிதை வரலாறு முழுவதும் செல்லவில்லை. சமூகத்தின் குரலாய் கவிதையை உரத்து முழங்கியபோது, தமக்குள் மறைந்திருந்த அல்லது மறைத்துக்கொண்ட அழுகலை, நாசங்களைப் பற்றி இவர்கள் உணர்வு கொள்ளவில்லை. சமூகச் சிக்கல்களை வரலாறு என்ற விரிந்த களத்தில் வைத்துக் காண்பதென்ற மார்க்சியப் பார்வையை இவர்கள் கற்கத் தவறினர். இவ்வளவு குறைபாடுகளோடும்தான் இவர்கள் தமிழ்க் கவிதைக்குப் புத்துணர்வும், புத்துருவமும் ஈந்தனர். நெருக்கடி நிலையின் போது இவர்கள் தடுமாறி தமக்குப் பாதுகாப்புத்தரும் இடங்களை நோக்கி விரைந்தனர். தோழமை உணர்வை இவர்கள் கற்கவில்லை. புதுக்கவிதையை மார்க்சியர் உடனே ஏற்கவில்லை. கவிதைக்கும் மார்க்சியத்திற்கும் உள்ள உறவு பற்றி மார்க்சியர் தெரிந்துகொள்ளவில்லை. ரகுநாதனுக்குள் ரசிகமணி மறைந்திருந்தார். எல்லாவற்றிலும் மரபை விமர்சிக்கும் மார்க்சியவாதிகள் கவிதை மரபை விமர்சிக்கத் தயங்கினர். கவிதைக்குள் நீதி என்ற உணர்வை அரசியலாக இவர்கள் மாற்றிக் கொண்டனர்.

கடந்த பத்தாண்டுகளில் இலக்கிய வாழ்வை ஆழ்ந்து

நோக்குவோமானால் ஒருபுறம் மார்க்சியம் மற்றொரு புறம் முதலாளியம். இன்னொரு முனையில் பகுத்தறிவு என்ற மூன்று முக்கிய முனைகளுக்குடையில் நடைபெற்ற தீவிரமான கருத்தியல் போராட்டமாக இலக்கியப் போக்கைக் கணிக்க முடியும். கிழக்கு, மேற்கு, தொன்மை, நவீனம், சாதி மதம், சித்தாந்தம், மெய்யியல், கலை இலக்கியம், ஆச்சாரம், பண்பாடு ஆகிய பல களங்களிலும் இவ்வாறு எதிரெதிரான போக்குகளுக்கிடையில் தான் தமிழ்ப் புதுக்கவிதையை வைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. அரசியலில் காந்தியத்தை (சுதேசியத்தை) போற்றிய செல்லப்பாவைப் பொறுத்தவரை இலக்கியப் பார்வைக்கு காந்தியத்தைப் பயன்படுத்த முடியவில்லை. புதிய திறனாய்வு என்ற மேற்கத்திய அணுகுமுறையைத்தான் பின்பற்றினார். கசடதபற-வினரின் அரசியல்: தமிழ் மொழியை முதன்மைப் படுத்திய திராவிட இயக்கத்திற்கு எதிரானது. கசடதபற கவிஞர்கள் தம் வாழ்வின் வசதிகளுக்காக இந்தச் சமூகத்தில் மாபெரும் அளவில் சுரண்டலும், அடக்குமுறையும் நடக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளாதவர் அல்லது ஏற்றுக்கொள்ளாதவர்.

மார்க்சியத்தை இவர்கள் நம்பவில்லை. அத்துடன் ஸ்டாலினிய வகையிலான மார்க்சியம் இவர்களை அச்சுறுத்தியது. இருபெரும் வல்லரசுகளுக்கிடையில் நிலவிய பதட்ட நிலை இவர்களைப் பீதிக்குள்ளாககியது. 1916இல் நீதிக்கட்சியின் தோற்றம் சமூக இயக்கத்தில் ஆர்வமுற்ற படிப்பாளிகளுக்கு கடும் அதிர்ச்சியைத் தந்திருக்க வேண்டும். பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் என்ற பிரிவு நிரந்தரப்படுவதற்கு இது ஒரு காரணம். 30களில் இந்தப் பிரிவு உக்கிரமாயிற்று. தேசிய இயக்கத்தவரும் தன்மான இயக்கத்தவரும் ஒரு களத்தில் இனி சேர்ந்தியங்க முடியாத நிலை உருவாயிற்று. முதலாளியச் சார்பு இவர்கள் மனங்களில் ஆழமாக வேரோடியிருந்தது. மேற்கில் தீவிரமான பாதிப்பை ஏற்படுத்தியவை ஃபிராய்டியமும், மார்க்சியமும் என்று கூறிய சிசுசெகூட மார்க்சியப் போக்கை எழுத்தில் அனுமதிக்கவில்லை என்று அக்கினி சரியாகவே குறிப்பிடுகிறார். காஸ்ட்ரோவின் புரட்சிகர உணர்வை ஒதுக்கிவிட்டுத்தான் இலக்கிய உணர்வை கசடதபற-வினர் போற்றினர் என்பதையும் அக்கினி சுட்டிக்காட்டுகிறார்.

கவிதைத் திறனாய்வு என்பது கவிதையின் வடிவம், மொழி, யாப்பு ஆகியவை பற்றியே செய்யப்பட்டது. கவிதையின் தோற்றம் பற்றிய தேடல் ஏதும் தென்படவில்லை. கவிதைக்கும் மனிதனுக்குமான இன்றியமையாத உறவு என்ன என்ற அடிப்படையில் தீவிரமான

தேடல் இல்லை. அறிவைப் பெறும் தேவைக்காக மேற்குலகம் நோக்கியே தம் முகத்தைத் திருப்பியிருந்தனர். கவிதை பற்றித் தமிழகத்திலும் இந்திய அளவிலும் பழக்காலத்திலேயே நடைபெற்ற ஆய்வுகள் தெவையான அளவில் கவனிக்கப்படவில்லை.

இதற்கு எதிர்நிலையில் இயங்கிய மார்க்சியவாதிகள் அரசியலில்தான் தம் கவனத்தைக் குவித்திருந்தனர். கலை, இலக்கியம், பண்பாடு குறித்து ஆழ்ந்த பார்வையை இவர்கள் பெறத் தவறினர்.

இடது சாரிகளின் (முற்போக்கு வாதிகளின்) எதிர்மரபு பற்றி அக்கினி குறிப்பிடுவது 70களில் உண்மையாகத்தான் இருந்தது. 80களின் இறுதியில் மார்க்சியததிற்குள் ஏற்பட்ட தீவிர அதிர்ச்சிகளின் விளைவாக மார்க்சியத்திற்குள்ளும் நெடுங்காலமாகவே ஆதிக்க மரபுதான் இடம் பெற்றிருந்தது என்பது தெரியவந்துள்ளது. இன்றைய நிலையில் எதிர்மரபு என்பதனுள் ஆதிவாசிகள், தாழ்த்தப்பட்டவர்கள், உழவர்கள், பெண்கள் ஆகியோர் பற்றித்தான் பேசுவது பொருந்தும். நாகரிகம், பெருந்தொழில், அறிவியல் தொழில் நுட்பம், நிபுணர் சார்பு, அரசு அதிகாரம் முதலியவற்றின் பிடிப்பிலிருந்து தம்மைக் கழற்றிக் கொள்பவர்களைத்தான் எதிர்மரபில் வைத்துப்பேச முடியும். மார்க்சிய வட்டாரத்தினர் எழுதிய கவிதைக்குள் இன்று ஆதிக்க மரபை நாம் காண்பதில் தவறில்லை. இவர்கள் தம்மை உடைத்துக்கொள்ளாதவர்கள். எதிரில் இவர்களை இரசிக்கக் கூடியிருந்தவர்களின் முகங்கள் வழியே தம்மைப்பார்த்துக் களித்தவர்கள். அன்றே இவர்களைப்பற்றி வந்த விமர்சனங்களைப் புறக்கணித்தவர்கள்.

சவால்கள் மிக்க இன்றைய வரலாற்றுச் சூழலில் மனிதன் தனக்குள் உடைந்து சிதறிக்கிடக்கும் பல நான்கள் வழியே தன்னைக் காண்கின்றான். தன் இருப்புக்கான ஆதாரம் எது என்று கலங்குகிறான். தன்னை உடைத்து நொறுக்கும் அதிகாரம், அறிவு, அமைப்பு தன்னுள்ளும் பிறர்மீது செயல்படுவதைக் காண்கிறான். தன்னிடம் மிஞ்சி இருப்பவை சொற்கள். இந்தச் சொற்களும் தம்மை முன்பு இணைத்திருந்த தர்க்கத்திலிருந்து கழன்று தனித்தனியாகப் பறந்து கொண்டிருப்பதைக் காண்கிறான். இந்தச் சொற்களை அங்கங்கே கிடைத்தவற்றை இணைத்துத் தனக்கான கவிதையைக் கண்டு கொள்ள முனையும் போதே சொற்கள் மீண்டும் தற்காலிக இணைப்பை விட்டுத் தகர்ந்து போவதைக் காண்கிறான். இந்த

மனிதனிடம் நம்பிக்கையைப் பற்றி யார் என்ன பேச முடியும்? இந்த மனிதர்கள் முன்னால்தான் இன்றைய மாபெரும் சமூகவியல், உளவியல், சூழலியல் முதலான மூன்றாம் உலகப் பிரச்சனைகள் சவால்களாக முன் நிற்கின்றன. நவீன காலனி ஆதிக்கத்திலிருந்தும் புதிய, பழைய ஆதிக்கங்களிடமிருந்தும் இவன் தன்னை விடுவித்துக்கொள்ள வேண்டும். மார்க்சியத்தை மீண்டும் முழு அளவில் மறு உருவாக்கம் செய்தாக வேண்டும். தொடர்ந்து அழிவுக்கு ஆளாகிக் கொண்டிருக்கும் இயற்கையைப் பாதுகாத்தாக வேண்டும். இவற்றுக்கான போராட்டத்துக்கு அதாவது கோடிக்கணக்கான மக்கள் தம் உயிரைப் பணயம் வைத்து நடத்த வேண்டிய போராட்டத்துக்கான மெய்யியல் பார்வையை வரலாறு வழங்கத்தான் போகிறது.

கவிதை இந்தக் களத்தில் தன்னை முழு அளவில் உயிர்ப்பித்துக் கொள்ள முடியும். சிதறிக்கிடக்கும் பல நான்களுக்கு அடியில் ஒரு நான் இயங்குவதை நாம் புரிந்துகொள்ள இயலும். ஒரு பைத்தியக்காரனுக்குள் நான் தகர்ந்து விடுகிறது. நான் என்ற உணர்வு இவனுக்குள் மிஞ்சியிருக்கும்வரை தான் இவனுக்குக் கை கொடுத்துக் காப்பாற்ற முடியும். இந்த நான் நமக்குள் அடியாழத்தில் இருக்கிறது. இதிலிருந்து மனிதனை உயிர்ப்பிக்க முடியும். இந்த நான் ஏற்கனவே நான் எழுதியபடி ஆதிப்பொதுமையாளனின் நான். அமைப்பியல் வாதிகள் இந்த நானை ஏற்க மாட்டடார்கள். சிதறிக்கிடக்கும் நான்களுக்கிடையில் இவர்கள் கண்ணாமூச்சி விளையாடுவார்கள். இவர்கள் வழியே நாமும் உள் சென்று நமக்கான நானைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும். இன்று வீடுகளில் செடி கொடிகள் வளர்ப்பது பற்றிப் பழமலய் பேசுவதுபோல, தேவதேவன் மரங்களைப் பற்றிப் பேசுவது போல, பெண் கவிஞர்கள் பெண்விடுதலை பேசுவதுபோல். தலித் கவிஞர்கள் சாதிய ஆதிக்கத்தை எதிர்த்துப் பேசுவதைப்போல, தர்முசிவராம் கிழை மரபின் வீரியத்துடன் மனித ஆளுமையை சித்திரிப்பதைப்போல, ஞானக்கூத்தனும் கலாப்பிரியாவும் பசுவய்யாவும் ஆத்மாநாமும் மனிதச் சிதைவையும், அதன் உள்ளுறையாக உறவின் ஒருமையைப் பேசுவதைப்போல, நவகாலனியத்தையும் பேரினவாதத்தையும் எதிர்த்து தேசிய இனவிடுதலையையும் அதன் சாராம்சமான மனித விடுதலையை மூன்றாம் உலகச் சூழலை வைத்து இன்குலாப்பும் தணிகைச்செல்வனும் பேசுவதைப்போல நமது கவிதைகள் பறைகளாக முழங்க வேண்டும். எங்கள் மொழி எங்கள் இனம்,

எங்கள் நாடு, எங்கள் விடுதலை, என ஆர்ப்பரிக்க வேண்டும். இப்படித் தொடங்கினால் நமக்குத் திசைகள் திறக்கும். மனங்களும் விரியும்.

கவிதை எப்போதும் பல தளங்களில் இயங்கும். தளங்களுக்கிடையிலுள்ள முரணியக்கம்தான் கவிதைக்கான இயக்கம். கவிதை நேர்படப் பேசும். அழகுபடப்பேசும். அழகற்று நிற்கும். கதை சொல்லும். பழமொழியாய்ச் சுருங்கும். இசையோடு இயங்கும். இசையற்று உரையாய்ச் செயல்படும். கிராமத்தான் மொழி பேசும். நகரத்தவன் மொழிக்குள்ளும் இயங்கும்.

இந்தக் கவிதை இயக்கத்தில் எதிர் நிலைகள் இருக்கத்தான் செய்யும். எதிர் நிலைகளில் ஒரு வரிசையை உயர்த்தி, மறு வரிசையைத் தாழ்த்துவது நியாயமாகப் படவில்லை. ஓர் எழுத்துக்காரனுக்கும் கசடதபற காரனுக்கும் கவிதை எதற்குப் பயன்பட்டது என்று சிந்திக்க வேண்டும். சமயம் பற்றி மார்க்ஸ் கூறியதை கவிதைக்குள் பொருத்திக் காண முடியும். ஆன்மாவற்ற உலகின் ஆன்மா. உயிரற்ற உலகின் உயிர். ஒடுக்கப்பட்டவர்களின் பெருமூச்சு. ஒடுக்கப்பட்ட சமூக நிலவரங்களுக்கு எதிர்ப்புக் குரல். ஆம் கவிதையும் அப்படித்தான். சமயத்திற்கு மட்டுமல்லாமல் கவிதைக்கும் இந்த விளக்கம் பொருந்தும். வரலாற்றோடு எல்லாச் சமூகப் பிரிவும் தன்னை இணைத்துக்கொள்ள முடிவதில்லை. இனம் காண முடிவதில்லை. புரட்சிக்காரன் தன்னை அதிக அளவில் இனம் காண்பான். இந்த வாய்ப்பு மற்ற சமூகத்தினருக்குக் குறைகிறது. எழுத்து கசடதபற கவிஞர்கள் ஆதிக்கவாதிகள் அல்லர். உடைமையாளர்கள் அல்லர். அதிகார வர்க்கத்தினர் அல்லர். அப்படியானால் இவர்களுக்குள் நாம் இவர்களை இனம் காண வேண்டும். இவர்களை இனம் காண அக்கினி முயற்சி செய்கிறார். புரிதல் முழுமை பெறவில்லை. அதேபோல வானம்பாடிகளுக்கும் அவர்களுக்குப் பிறகும் கவிதை வெறும் வணிகப் பொருளாக, நுகர்வுப்பண்டமாக உற்பத்தி செய்யப்பட்டது பற்றியும் அக்கினி சுருக்கமாகவேணும் விமர்சனம் செய்திருக்க வேண்டும்.

இத்தகைய விமர்சனங்கள் வழியே அக்கினியின் நூலை நாம் ஆழ்ந்து கற்க முடியும். தமிழுக்குப் புதிய ஆற்றலை புதிய உயிர்ப்பைத் தரும் நூல்கள் இன்று அதிகம் தேவை. அக்கினியின் நூல் இத்தகைய வரலாற்றுத் தேவையின் விளைவாகும்.

கவிதை நூல் எதுவும் வெளியிடாமல் தமிழகத்தில் முக்கியமான கவிஞர்களில் ஒருவராக அக்கினி புகழ் பெற்றிருக்கிறார் என்பது

வியப்புத் தரும் ஓர் உண்மை. புதுக்கவிதை ஆய்வு பற்றிய இந்த நூலைத் தொடர்ந்து அவரது கவிதைத் தொகுப்பும் மேலும் திறனாய்வு நூல்களும் வெளிவர வேண்டும் என்பது நம் விருப்பம்.

*குறிப்பு:- சு. அரங்கராசு அவர்களின் தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு என்ற அவரது முனைவர் பட்டத்திற்கான ஆய்வு நூலுக்கு ஞானி எழுதிய அணிந்துரை. 1991 சு. அரங்கராசு என்பது இவரது இயற்பெயர். முன்பு இவரது புனைபெயர் அக்னி புத்திரன். தற்பொழுது கனல் மைந்தன்.*

# தமிழ்த் தேசியமும் வானம்பாடி இயக்கமும்

தமிழ்த் தேசியத்திற்கும் வானம்பாடி இயக்கத்திற்கும் இடையிலான உறவு என்னவென்று ஆராய்வதற்கு முன்னர் கோவையில் 1970ன் தொடக்கத்தில் தோன்றி வளர்ச்சி பெற்றுக் குறுகிய காலத்தில் பிளவுபட்ட வானம்பாடிகளின் கவிதை இயக்கம் குறித்து முதலில் சுருக்கமாகப் பார்த்துக் கொள்ளலாம்.

பஞ்சாலைகளும் இயந்திர உற்பத்தித் தொழிற்சாலைகளும் சில பத்தாண்டுகளாக நிலைபெற்ற கோவை நகரத்தில் தொழிற்சங்கத்தை நிலைநிறுத்துவதற்கான எத்தனையோ போராட்டங்கள் நடைபெற்றன. மார்க்சியம் இங்கு பாட்டாளிகளின் மத்தியில் வேர்பிடித்துக் கிளை விரித்த சூழல் என்ற பின்னணியில்தான் வானம்பாடி இயக்கம் தோன்றியது.

வானம்பாடி இயக்கத்தின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் புவியரசு, சிற்பி, இளமுருகு, கனல்மைந்தன், ஞானி, மேத்தா முதலியவர்கள் தமிழாசிரியர்கள் என்ற முறையில் நெடுங்காலத் தமிழ் இலக்கிய மரபையும், பாரதி, பாரதிதாசன் ஆகிய பெருங்கவிஞர்களுக்குள் செயல்பட்ட தமிழ்த் தேசிய உணர்வையும் உள்வாங்கிக் கொண்டவர்கள். வானம்பாடி இயக்கத்தின் தோற்றத்திற்குச் சற்று முன்னர் வசந்தத்தின் இடிமுழக்கம் என்று இன்றளவும் சிறப்பித்துச் சொல்லக்கூடிய நக்சல்பாரி இயக்கம் இந்தியாவின் வடதிசையில் தோன்றி, கேரளம், தமிழ்நாடு வரையில் மாபெரும் அரசியல் அதிர்வுகளைப் பரப்பியது.

மார்க்சிய, லெனினிய இயக்கம் என்று சரியான பெயரைப் பெற்ற நக்சல்பாரி இயக்கம் கோவையில்தான் தோற்றம் பெற்றது என்பதை நண்பர்கள் மறந்திருக்க மாட்டார்கள். பாரதி, பாரதிதாசன் மரபின் சிந்தனை வளத்தையும் கவித்துவச் செழுமையையும் தங்களுக்குள் பெற்ற இவர்கள் வானம்பாடி என்ற கவிதை இயக்கத்தைத் தோற்றுவித்தனர். இவர்கள் அனைவருக்குள்ளும் இயல்பாகவே கோவைச் சூழலில் உருவான மார்க்சியத்தின் தாக்கமும், நக்சல்பாரி இயக்கத்தின் வீறும் நுழைந்து கவிதைகளில் உருப்பெற்றன. வானம்பாடிக் கவிதைகளை ஒருமுறை புரட்டிப்பார்க்கிற அனைவரும் மேற்குறிப்பிட்ட கவிஞர்களுக்குள் நக்சல்பாரி இயக்கத்தின் ஆற்றல் மிகுந்த சில இழைகளையேனும் காண முடியும்.

மார்க்சியத்தின் சமதர்மம் என்ற ஊற்று இவர்களுக்குள் மக்கள் திரளின் பிரச்சினைகளைஉணர்வோடு வெளிப்படுத்தும் முறையில் கவிதைகளாய்ப் பொங்கின. வானம்பாடி இயக்கத்தின் இந்தப் பேராற்றலை இன்றுவரை யாரும் மறுப்பதற்கில்லை.

தமிழகத்தில் 1930களிலேயே மெள்ளத் தொடங்கி ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா. முதலியவர்களின் வழியே ஊட்டம் பெற்று, எழுத்து காலத்தில் சி.சு.செல்லப்பா, க.நா.சு, தர்முசிவராமு (பிரமிள்), வைத்தீஸ்வரன், சி.மணி முதலியவர்களின் மூலம் அழுத்தமும் ஆழமும் விரிவுப் பெற்ற புதுக்கவிதை இயக்கம், கசடதபற இதழின் வழியே ஞானக்கூத்தன், சுந்தரராமசாமி முதலியவர்களையும் உள்வாங்கிக் கொண்டு ஒரு பேரியக்கமாக நிலைபெற்றது. இந்த இயக்கத்திற்கான மூலத்தை பாரதி முதலியவர்களுக்கு உள்ளும் காண முடியும் என்ற உண்மையை மறுப்பதற்கில்லை. சி.மணி, கனகசபாபதி முதலியவர்கள் ஆய்ந்து கூறியபடி தொல்காப்பியர் முதற்கொண்டு தமிழ்ச் செய்யுள் மரபிற்குள்ளிருந்தே இதன் சிலகூறுகளை இனம்காண முடியும் என்பது மறுக்கஇயலாத உண்மைதான்.

எனினும் மேற்குலகத்தைச் சார்ந்த வால்ட் விட்மன், டி.எஸ். எலியட், எஸ்ரா பவுண்ட் இன்னும் சில பிரெஞ்சு கவிஞர்களை நம் புதுக்கவிதை இயக்கத்திற்கான மூலவர்கள் என்று இவர்கள் சொல்லிக் கொண்டார்கள். இப்படிச் சொல்லிக் கொண்ட அதே சமயத்தில் தமிழ் மரபின் யாப்பு முறையை இவர்கள் அறவே கைவிட்டதோடு மரபுக்கவிதை முறையை கடுமையாகச் சாடவும் செய்தார்கள்.கவிதைக்கு எதுகை, மோனை, அடி, தொடை முதலிய யாப்புக் கூறுகள் தேவையில்லை என்று இவர்கள் கூறியதோடு கவிதை என்பது மிகக் குறைந்த சொற்களைக் கொண்டதாக அமையவேண்டும் என்றும் உவமை, உருவகம் ஆகியவற்றை ஒதுக்குவதோடு பன்முகப் பொருளை உள்ளடக்கிய படிமம் என்ற இறுகிய வடிவத்தின் மூலம் இயங்க வேண்டும் என்றும் கூறினர்.

இவ்வகையான கவிதையின் கட்டமைப்பு முறை பற்றிய தம் கருத்துகளை விரிவாக அவர்கள் முன்வைத்ததற்கு இடையில் தம் கருத்தியல் பற்றியும் பேசினர். மார்க்சியத்தை அவர்கள் முற்றாக ஒதுக்கினர். திராவிட இயக்கக் கருத்தியலையும் அவர்கள் ஒதுக்கினர். கவிதை என்பது பிரச்சார நோக்கில் அமைவது கூடாது என்றும் உள்மனத்தின் மௌன இயக்கமாகத்தான் கவிதை இருக்க முடியும் என்றும் கூறலாயினர். அகமனத்தின் இருண்மைக் கூறுகளையும்,

ஃபிராய்டிய காம உணர்வையும் தம் கவிதைகளில் முதன்மைப் படுத்தினர். இத்தகைய கவிஞர்களின் நகரச்சார்பும் உயர்சாதி மனப்பாங்கும் உழைக்கும் மக்களிடமிருந்து இவர்கள் விலகி இருந்த தன்மையும் மக்கள் இயக்கங்களை முற்றாக ஒதுக்கியதையும் இவர்கள் கவிதைகளிலிருந்தே கண்டுகொள்ள முடியும்.

தமிழ் மரபுக்கும் மக்கள் சார்புக்கும் எதிரான இவர்களை மறுக்கும் முறையில்தான் கோவையில் வானம்பாடி இயக்கம் தோன்றியது. இம்முறையில் நெடுங்காலத் தமிழ்ப் பேரியக்கத்தின் ஆற்றல்மிக்க ஒரு புதிய பேரலையாக வானம்பாடி இயக்கம் தோன்றிய வேகத்தில் தமிழ் மக்களின் நெஞ்சங்களில் ஆழமாகப் பதிந்ததில் வியப்பில்லை. 1968ல் தமிழகத்தின் ஆட்சிப்பீடத்தில் அமர்ந்த திராவிட முன்னேற்றக் கழகம் மிகக் குறுகிய காலத்தில் தாங்கள் தமிழ்மக்களின் விடுதலைக்கான இயக்கம் அல்ல என்பதைக் காட்டிக் கொண்டனர். திராவிட இயக்க அரசியலை மறுப்பதற்கான நியாயத்தோடு மார்க்சியச் சார்பை வானம்பாடிகள் மேற்கொண்டனர். தமிழக மக்களின் விடுதலைக்கான கருத்தியலைத் தம் நெஞ்சில் தாங்கிய வானம்பாடிகள் மார்க்சியப் பார்வை காரணமாக மிக விரிவான உலக அளவிலான அரசியல் பார்வையையும் தமக்குள் வரித்துக் கொண்டனர். வியட்நாம் உள்பட உலக அளவில் அன்று நடைபெற்ற அனைத்து விடுதலை இயக்கங்களையும் வரவேற்றுப்பாடினர். இந்திய தேசியத்திற்கு எதிராக குரல் இவர்களுக்குள் இல்லை என்ற போதிலும், இவர்களுக்குள் தமிழ்த் தேசிய உணர்வு வீறுபெற்று விளங்கியது.

எழுத்து, கசடதபற முதலிய இதழ்களுக்கும் அவர்கள் வெளிப்படுத்திய கருத்தியலுக்கும் எதிரான மக்களுக்கான கவிதை இயக்கத்தை வானம்பாடிகள் வெளிப்படையாக அறிவித்துக் கொண்டனர் கவிதையை மக்கள் மயப்படுத்தியதுதான் வானம்பாடி இயக்கத்தின் முதல்பெரும் சாதனை என்று இன்றளவும் ஆய்வாளர்கள் மதிப்பிடுகின்றனர்.

வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் மக்களின் வறுமை, நோய் நொடிகள், மூடத்தனம், பெண்ணடிமை முதலியவற்றுக்கெதிராக மேடைகளில் கவிதைகள் முழங்கினர். மக்களோடு அவர்களின் மொழியில், அவர்களுக்கான விடுதலையை, அவர்களோடு பேசும் முறையில் கவிதைகளை முழங்கினர். நூற்றுக்கும் மேற்பட்ட ஊர்களில் இந்தக் கவிதை முழக்கங்கள் நடைபெற்றன. மக்களோடு பேசுவது என்றால் உணர்ச்சிகரமாக அவர்களின் நெஞ்சைத்தொடும்

முறையில் அழகிய அடுக்கடுக்கான மொழியில் பேசத்தான் வேண்டும். மேடைத் தோரணை என்பது இவர்களின் இயல்பான கவிதைக்குரலாயிற்று. மக்கள் வாழ்க்கையில் விடுதலை தேவை என்ற இவர்களின் குரல் அகமனத்தின் இருண்மைக்குரலாகவோ, விடுகதைபோல புதிராகவோ இருக்க முடியாது. மக்களோடு விரிவான உலக அளவிலான பிரச்சினைகளை முன்வைத்துப் பேசுகிற கவிதைகள் குறுகிய வடிவிலும் இயங்க முடியாது. இம்முறையில் வானம்பாடிகளின் கவிதை இயக்கம் தமிழ் மக்களின் நெஞ்சங்களைக் குறுகிய கால அளவில் வெற்றி கொண்டது.

சி.சு.செல்லப்பா முதலியவர்களின் புதுக்கவிதை முறையிலிருந்து தமிழில் வீரார்ந்த மரபை உள்வாங்கிக் கொண்டு வானம்பாடிகளின் புதுக்கவிதை இயக்கத்தின் வளர்நிலையைக் குறித்து மேலும் சிலவற்றை இங்குக் கூற வேண்டும்.

தமிழ்க்கவிதை மரபின் ஆற்றல்மிக்க சில கூறுகள் என்று இறைச்சி, உள்ளுறை, குறிப்பு முதலிய உத்திகளைக் கூற முடியும். இவை உவமை, உருவகம் போன்ற உத்திகளிலிருந்து வேறுபட்டது என்பதையும் இங்கு குறிப்பிடலாம். சி.சு.செல்லப்பா முதலியவர்கள் மூலம் மேற்குலகிலிருந்து இங்கு வந்து சேர்ந்த படிமம் சில கூறுகளில் வேறுபட்டதும் சிறப்பு மிக்கதும் ஆகும். இந்த வடிவத்தை வானம்பாடிகளும் கற்றுக் கொண்டதோடு குறைந்த சொற்களோடு படிமத்தின் வடிவில் கவிதை சில படைக்கவும் செய்தனர். இன்னும் ஒன்று. செய்யுள் என்பது தமிழ் மரபு. கவிதை என்பது பெரும்பாலும் செய்யுள் மரபிலிருந்து வேறுபட்டது. செய்யுள் வடிவத்தினுள் இயங்கும் ஆற்றல்மிக்க கவிதைக் கூறுகளை மரபு முறையில் வந்த புலமையாளர் உணர்ந்தனர் என்றபோதிலும், இந்தக் கவிதைக் கூறுகளைத் தனியே பிரித்தெடுத்து ஆய்வு மேற்கொண்டதாகச் சொல்வதற்கில்லை.

தமிழ் மக்களின் கவிதைச் சாதனை பெரிது என்றபோதிலும், மேற்குலகத் தொடர்பு மூலமே கவிதை, கவித்துவம் பற்றி நாம் கூடுதலாக அறியத் தொடங்கினோம். செல்லப்பா முதலியவர்களின் வட்டாரத்தினுள் இருந்த பிரமிள் தமிழ் உணர்விலும் சற்றும் குறைந்தவர் இல்லை. ஞானக்கூத்தன், பிரமிள் முதலியவர்களோடு கடுமையான சொற்போரில் ஈடுபட்டிருந்தபோதே வானம்பாடிகள் கவிதை – கவித்துவம் பற்றியும் கற்றுக் கொண்டிருந்தனர். இத்தகைய கல்வி மூலம் சங்க இலக்கியத்தினுள் செயல்பட்ட கவித்துவம் பற்றி

அறியும் கூடுதலான வாய்ப்பு ஏற்பட்டது.

இதே சமயம் செல்லப்பா முதலியவர்களால் இனம் காணமுடியாத தமிழ்மரபு வானம்பாடிக் கவிஞர்களுக்குள் பல புதிய ஆக்கங்களை விளைவித்தது. மரபு என்பது எதுகை மோனை, யாப்பு முதலிய ஒரு சில கூறுகளை உள்ளடக்கியதாக மட்டும் இருக்கமுடியாது. வள்ளுவருக்குள்ளும் இளங்கோவுக்குள்ளும் இயங்கிய தமிழின் அறஉணர்வு மரபைத் தம் காலச் சூழலில் மார்க்சிய நெறியின் மூலம் வானம்பாடிகள் தமக்குள் வரித்துக் கொண்டனர். யாப்பு மரபை மட்டுமே மரபு என செல்லப்பா முதலியவர்கள் தவறாகத்தான் புரிந்து கொண்டனர். புலமை மரபைக் கேலி செய்த அவர்கள் தமிழ் மரபின் உள் ஆற்றலைக் காணத் தவறினர். இந்த இடத்தில்தான் செல்லப்பா முதலியவர்களின் நகர சார்பை மட்டுமல்லாமல் பார்ப்பனிய சார்பையும் காண வேண்டியிருக்கிறது.

வானம்பாடிக் கவிஞர்களில் ஒருவர்கூட பார்ப்பன சாதியை சார்ந்தவராக இல்லை என்பதை இங்கு குறிப்பிட வேண்டும். தமிழின் யாப்பு மரபில் மிகக் குறுகிய வடிவிலான குறட்பாவுக்கு இடமுண்டு. மிக விரிந்து செல்லும் ஆசிரியப்பாவுக்கும் இடமுண்டு. தமிழ் மரபின் கதைப்பாங்கினை வானம்பாடிகள் பின்பற்றவும் செய்தனர். புதுக் கவிதையில் கதைக் கவிதைகள் பலவற்றைப் படைத்தனர். ஒன்றை பலமுறை அடுக்கிச் சொல்லும் தமிழ்மரபு யாப்பு மரபில் இருக்கிறது. தாழிசைகள், பதிகங்கள் முதலியவை இவ்வகை வடிவங்கள். இம்முறையிலும் வானம்பாடிகள் தமிழின் யாப்பு மரபை பின்பற்றவே செய்தனர்.

தொகுத்துப் பார்க்கும்போது இரண்டு ஆண்டுகள் மட்டுமே ஒன்றுபட்ட இயக்கமாக செயல்பட்ட வானம்பாடிகள் இன்று வரை தொடர்கிற மக்கள் சார்புடைய மாபெரும் புதுக்கவிதை இயக்கத்தின் முன்னோடிகள் என்ற பெருமையைப் பெறுகின்றனர். குறைந்த எண்ணிக்கையில இவர்கள் தொடக்கத்தில் இருந்தபோதும் மிக விரைவில் இவர்களோடு நூற்றுக்கணக்கானவர்கள் இணைந்து கொண்டனர். சிற்றாறு எனத் தொடங்கிய இயக்கம் பின்னர் பேராறாக விரிந்து பரவியது. எல்லா மனிதனுக்குள்ளும் இருக்கிற, இயங்குகிற கவிதையை, கவித்துவத்தை விடுவித்ததன் மூலம் தமிழ்க் கவிதைக்கு மட்டுமல்லாமல் தமிழ் மக்களுக்கும் இவர்கள் விடுதலை வழங்கினர்.

புலமையாளர்கள் யாப்பு என்ற சங்கிலியின் மூலம் கட்டிவைத்திருந்த யானைச் சங்கிலிகளை முறித்துக் கொண்டு கிளம்பியதைப்போல தமிழ் உணர்வாளர்கள் ஆயிரக்கணக்கில் தமக்குள்ளிருக்கும் கவிதை ஆற்றலை வெள்ளமாய் வெளிப்படுத்துகின்றனர். பெருகிச் செல்லும் வெள்ளத்தில் எத்தனையோ குப்பை கூளங்களும் வந்துபோகத்தான் செய்யும். நாளடடைவில் குப்பை கூளங்களை அகற்றித் தரமான கவிதைகளை நம்மால் சேகரித்துக்கொள்ள முடியும்.

வானம்பாடிக்கவிஞர்கள் மறுக்கமுடியாத மார்க்சிய சார்பு கொண்டவரெனினும் இவர்களுக்குள்ளும் மார்க்சியம் குறித்தும், கவிதைகள் குறித்தும் சில மாறுபட்ட கருத்துகள் இருக்கத்தான் செய்தன. வானம்படிகளின் இயக்கம் கவிதை இயக்கமாக மட்டுமே இருந்துவிட முடியாது. இலக்கிய இயக்கமாகவும், வாய்ப்புத் நேரும்பொழுது மக்கள் இயக்கமாகவும் வளர்ச்சி பெறவேண்டும் என்று சிலர் கருதினர். மார்க்சியம் என்பது இந்தியச் சூழலில் இயல்பாகவே மாவோ சிந்தனையில்தான் நிறைவு பெறமுடியும் என்று சிலர் கருதினர். மக்களின் விடுதலை நோக்கி மேலும் வளர்ச்சி பெற வேண்டிய இயக்கம் காதல் முதலியவை பற்றி பாடுவதன் மூலம் மக்கள் மத்தியில் செல்வாக்கு பெறமுடியும் என்ற கருத்தில் சீரழிவுக்கு வசப்பட்டுவிடக் கூடாது என்றும் இவர்கள் கருதினர்.

கவிதை என்பது தத்துவத்திலிருந்து கொஞ்சம் விலகித்தான் இருக்கவேண்டும். நெருங்கிச் சென்றால் கவித்துவம் மறைந்துவிடும் என்ற கருத்தையும இரண்டொருவர் வெளிப்படுத்தினர். இப்படித் தொடங்கிய கருத்து றேுபாடுகள் நாளடைவில முரண்பாடுகளாய் முற்றிப் பிறகு வெடித்தன. இடையில் யார்யாரோ புகுந்தனர். எல்லாமுமே நடைபெற்றன. நாளடைவில் தவிர்க்கமுடியாமல் வானம்பாடி இயக்கம் இரண்டாகப் பிளந்தது. ஒரு பக்கம் வலது சாரிகள், இன்னொரு பக்கம் இடதுசாரிகள். வலதுசாரிகள் நாளடைவில் கலை இலக்கிய பெருமன்றத்தினுள் கலந்தனர். இவர்கள்தான் நெருக்கடிக் காலத்தின் போது "இந்திராவே இந்தியா, இந்தியாவே இந்திரா" என்று நூல் வெளியிட்டனர்.

இடையில் இன்னொன்றையும் கூற வேண்டும். மார்க்சிய சார்போடு வானம்பாடி இயக்கம் வளர்ச்சி பெற்றுவரும் காலத்தில் கட்சி சார்ந்த எவரும் இவர்களை மார்க்சியர் என்றோ இவர்களின் புதுக்கவிதை முறை சரியானதுதான் என்றோ ஏற்கவே இல்லை.

கைலாசபதிக்கு இவர்களின் புதுக்கவிதை ஏற்றதாக இல்லை. தொ.மு.சி முற்றாக மறுக்கவும் செய்தார். தாமரை இதழில் வானமாமலை அவர்களுக்கும் கனகசபாபதி அவர்களுக்கும் இடையில் நீண்ட விவாதங்கள் நடைபெற்றன. ஒரு கட்டத்தில் கனகசபாபதியின் கட்டுரையைத் தாமரை வெளியிடவில்லை. இன்னொரு கட்டத்தில் வானம்பாடியிலிருந்து பிரிந்து சென்ற இடது சாரியினர் வேள்வி இதழில் வெளிவந்த புதுக்கவிதைகள் பலவற்றைக் கவிஞர்களின் பெயர் குறிப்பிடாமல் மேற்கோள் காட்டி இவர்களின் புதுக்கவிதை உள்ளடக்கத்தை ஆதரித்து வானமாமலை விரிவான கட்டுரை எழுதினார். எதற்கெடுத்தாலும் ரஷ்யாவை மேற்கோள் காட்டுகின்றனர் என்ற குற்றச்சாட்டுக்கு உட்படும் கட்சி வட்டாரத்தினர் ரஷ்யக் கவிஞர் மாயகவ்ஸ்கியை வெகுவாகப் பாராட்டி எழுதும்போதே அவரின் நவீன கவிதையாக்கத்தை ஏற்று எதுவும் கூறவில்லை.

எனினும் சில ஆண்டுகளுக்குள் தமிழகத்தில் மார்க்சியக் கட்சி வட்டாரத்தைச் சார்ந்த கலை இலக்கியவாதிகள் புதுக்கவிதை முறையை வெட்கமில்லாமல் ஏற்கத் தொடங்கினர். பாரதியின் வாரிசு பேரன் என்றெல்லாம் கவிஞர் பரிணாமனைப் பாராட்டி வானமாமலை எழுதினார். தொடக்கத்தில் வானம்பாடிகளை முற்றாக ஒதுக்கிய கட்சி வட்டாரத்தினர் மெல்ல மெல்ல வானம்பாடி இயக்கத்தினுள் ஊடுருவி வானம்பாடி இயக்கத்தின் பிளவுக்கும் ஓரளவு காரணமாயினர். தி.க.சி. மிகச் சாதுர்யமாய் இந்தப் பணியைச் செய்தார். அப்புறம் வானம்பாடியின் வலது சாரியினருக்கும் கட்சியினருக்கும் நிரந்தரமான தோழமை ஏற்பட்டது. வானம்பாடிகளில் இடதுசாரியினரோடு இவர்களின் பகை இன்றளவும் தொடர்கிறது.

இப்போது வானம்பாடி இயக்கத்திற்கும் தமிழ்த் தேசியத்திற்கும் இடையிலான உறவை மிகச் சுருக்கமாகக் குறிப்பிட வேண்டியுள்ளது. தமிழின் மரபோடுதான் வானம்பாடி இயக்கம் சார்ந்த கவிஞர்கள் இன்றளவும் செயல்படுகின்றனர். இவர்கள் மார்க்சியத்தோடு பெரியாரியத்தையும் பெரிதும் நேசிக்கின்றனர். இந்தியத் தேசியத்தை முற்றாக ஒதுக்காதபோதிலும் தமிழ்த் தேசியத்திற்கு முதன்மைத் தருகின்றனர். பெரியாரியமும் மார்க்சியமும் இணைந்து செயல்படுவதின் மூலமே தமிழ் மக்களின் வாழ்வு விடுதலைபெறும் என்று இவர்கள் நம்புகின்றனர். உலகச் சூழலில் நடைபெறும்

விடுதலை இயக்கம் எதனையும் இன்றும் வரவேற்கின்றனர். நடுத்தர வர்க்கச் சாாபை விட்டொழிக்க இயலவில்லை என்ற போதிலும் தமிழக மக்களின் மேன்மையை இவர்கள் விரும்புகின்றனர். தமிழ் நிலத்தை தமிழ் மக்களின் தொழில் வளத்தை, அறிவு வளத்தை அந்நியர் கைப்பற்றுவதை இவர்களால் ஏற்க முடியாது. ஆங்கில ஆதிக்கத்தை ஒதுக்கவிரும்பும் இவர்களால் தமிழின் ஆக்கத்தோடு முற்றாக ஒத்துழைக்க விரும்புகின்றனர். சிற்பி, புவியரசு, மேத்தா, கனல்மைந்தன், ஞானி, தமிழ்நாடன், தமிழன்பன் என்று இவர்களை பெயர் சுட்டிச் சொல்ல முடியும். திருவள்ளுவர், இளங்கோ முதலிய அசலான தமிழ்ச் சிந்தனையாளர்களின் தமிழ் உணர்வை நெஞ்சில் தாங்கியுள்ள இவர்கள், வள்ளலார் என்றும் பெரியார், பாரதி என்றும் பாரதிதாசன் என்றும் நம் மரபைத் தமக்குள் வரித்துக் கொள்கின்றனர். உலக அளவில் எத்தகைய ஆதிக்கத்தோடும் முற்றாக முரண்படவே செய்கின்றனர்.

கவிஞர் எனத் தொடங்கிய இவர்கள் தமிழ்த் தேசிய உணர்வோடு இப்போது இவர்கள் திறனாய்வாளர்களாகவும், சிந்தனையாளர்களாகவும் திகழ்கின்றனர். தமிழ்த் தேசியம் என்ற இயக்கம், அரசியல் என்ற இயக்கமாக மட்டுமே இருக்க முடியாது. இலக்கிய இயக்கமாகவும், பண்பாட்டு இயக்கமாகவும, தமிழ் இயக்கமாகவும் வளர்ச்சிபெற வேண்டுமென்றும் உலக அளவிலான விடுதலை இயக்கத்தின் ஒரு கூறாக இந்த இயக்கம் வளர்ச்சி பெற வேண்டும் என்றும் இவர்கள் விரும்புகின்றனர்.

தமிழ்த் தேசியமும், மார்க்சியமும், பெரியாரியமும் ஒரு புள்ளியில் இணைவதன் மூலம் தமிழக மக்கள் வாழ்வின் செழுமை நிறைவடையும். இந்த இலக்கு நோக்கி நாமும் செல்ல வேண்டும்.

*குறிப்பு : தோழர் பெ.மணியரசன் அவர்களை ஆசிரியராக் கொண்ட 'தமிழர் கண்ணோட்டம்' - 2004 சிறப்பு மலரில் வெளியான கட்டுரை.*

# தமிழின் தனிநிறம்

கவிஞர் வைரமுத்து அவர்களின் கவிதைத் தொகுப்புக்களில் ஒன்று தமிழுக்கு நிறமுண்டு. 1997–ல் வெளிவந்த இந்தக் கவிதைத் தொகுப்பில் தமிழைப் பற்றிக் கவிஞர் பாடிய பாடல்கள் சில என்றாலும், இத்தொகுப்பிலுள்ள பிற கவிதைகளும் தமிழ்க்கவிதையின் தனிநிறம் பற்றியவைதான் என்பதில் அய்யமில்லை. தமிழ்க் கவிஞன் சாதியை ஒப்புக் கொள்ள முடியாது. மதங்களின் பெயரால் நடைபெறும் வம்பு வழக்குகளை ஏற்க முடியாது. மனித நீதியோடு ஒத்தியங்கும் தெய்வங்களைத் தான் மனிதன் மதிக்க முடியும். தனி உடைமையின் கொடுமைகளைத் தமிழன் ஏற்ற முடியாது. சகோதரத்துவம் மற்றும் சமத்துவம்தான் தமிழின் உயிர் மூச்சாக (இலக்காக) இருக்க முடியும். இம்முறையில் தமிழன் வள்ளுவரின் அறத்தைத் தழுவிக் கொள்கிற பொழுதே மார்க்சோடும், நபிகள் நாயகத்தோடும், காந்தியோடும் உறவு கொள்ள முடியும். இத்தகைய உறவின் மூலம்தான் தமிழன் தன்னைத் தொடர்ந்து புதுப்பித்துக் கொள்ளமுடியும். மேற்குலகத்திறகுக் கீழை உலகம் அடிமைப்பட வேண்டியதில்லை. விஞ்ஞானத்தின் பெயரால் ஏற்படும் இயற்கை நாசம் அழிவு முதலியவைகளைத் தமிழன் ஏற்கவேண்டியதில்லை. புறம்போக்கு நிலத்தில் ஏழைகள் கட்டியுள்ள வீடுகளை அதிகாரிகள் அழிக்கும் கொடுமையைத் தமிழன் ஏற்க மாட்டான். பாபர் மசூதி தகர்ப்பைத் தமிழன் என்றைக்கும் ஏற்க முடியாது. சேரிகளை வைத்துக்கொண்டு தாஜ்மகாலின் அழகைத் தமிழன் போற்ற முடியாது. மூட நம்பிக்கைகளை எதிர்ப்பதாகச் சொல்லும் தமிழன் மந்திரிகளிடம் மனுக்கொடுபபதை ஏற்க முடியாது. சமதர்மம் இல்லாமல் தமிழனுக்கு நல்வாழ்வு இல்லை. இவற்றையெல்லாம் கவிஞர் வைரமுத்து அவர்களின் இந்தக் கவிதைத் தொகுப்பில் பெரும்பாலான கவிதைகளில் நாம் காணுகிறோம். இவை தமிழின் தனிநிறங்கள் என்று கவிஞர் சொல்வதை நம்மால் புரிந்துகொள்ள முடியும். தமிழின் தனிநிறத்தில் மேலும் சில வண்ணங்களைச் சேர்க்கிற கவிஞரை நாம் பாராட்ட முடியும்.

இந்தத் தொகுப்பில் இடம் பெறும் கவிஞரின் முன்னுரை குறித்து நாம் முக்கியமாய்ச் சிலவற்றைச் சொல்ல வேண்டும். தமிழின் இலக்கிய வரலாறு குறித்து எத்தனையோ அறிஞர்கள்

எழுதியுள்ளனர். இலக்கிய வரலாறு எழுதும் அறிஞர் ஒவ்வொருவரும் தமிழின் சில அரிய தடங்களைக் கண்டறிந்து சொல்கின்றனர். தமிழனுக்குச் சாதி இல்லை. மதம் இல்லை. என்றெல்லாம் இவர்கள் தமிழின் வரலாறு எழுதுகின்றனர். வரலாறு என்ற முறையில் நூற்றுக் கணக்கான பக்கங்கள் எழுதித்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஒரு சிறிய கட்டுரையில் தமிழின்/தமிழ் இலக்கியத்தின் வரலாற்றை அதன் தனித்தன்மையைக் கவிஞர் இந்த முன்னுரையில் அழுத்தமாகக் கூறியுள்ளார். இந்த முன்னுரைக்காகவும் இந்த நூலைத் தமிழார்வலர்கள் விரும்பி வாசிக்க முடியும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட தமிழின் வரலாற்றுக் காலம் முழுவதிலும் தமிழின் தனிநிறம் அழியவில்லை என்கிறார் கவிஞர். அரசியல் என்ற வடிவத்திலும், பண்பாட்டுக் களத்திலும் தமிழின் மீது எத்தனையோ படையெடுப்புக்கள் நடைபெற்றன. படையெடுப்புக்களின் போது தாழ்ந்திருந்த தமிழனின் தலை மீண்டும், மீண்டும் நிமிரமுடிந்தது என்கிறார் கவிஞர். தமிழுக்குள் இருக்கிற தனி ஆற்றல் இதற்குக் காரணம். வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் தமிழின் வித்துக்களாக, வேர்களாக தமிழ் வரலாற்றில் ஆழமாகப் பதிந்துள்ளனர். இத்தகையவர்கள் இருக்கும்வரை தமிழுக்கு அழிவில்லை என்பது கவிஞர் கருத்தாகலாம். சமணம், பவுத்தம் வருகையினால் சற்றுத் தாழ்ந்த தமிழனின் தலை சைவசமய, எழுச்சியின் வழியே நிமிர்ந்தது என்ற முறையில் கவிஞர் சொல்லும் பொழுது நமக்குள் கொஞ்சம் நெருடுகிறது. ஆரியர்களின் ஊடுருவலால் வர்ணங்களும், சாதிகளும் தமிழனின் தன்மானத்தையும், தனிவாழ்வையும் அழித்தன என்று கவிஞர் உரத்துச் சொல்லுகிறார். தமிழன் வரலாற்றைப் பெரியாரியம் இப்படித்தான் நமக்குக் கற்பித்துள்ளது.

'தீதும் நன்றும் பிறர் தரவாரா' என்பதற்கு அறிஞர் அண்ணா அவர்கள் தந்த விளக்கம் நமக்குள் ஏறவில்லை. நான் மிக நல்லவன் அடுத்தவன்தான் என்னைக் கெடுத்தான் என்பது சந்தர்ப்பவாத வெற்றுரை. மேலும் ஒன்று : இரண்டாம் குலோத்துங்கன் காலம் முதல் தெலுங்கர் ஆட்சி தமிழ் நாட்டின் மூலை முடுக்கெல்லாம் பரவி தமிழனின் அரசியல், பொருளியல் முதலியவற்றைச் சிதைத்தது என்பது ஒரு முக்கியமான வரலாற்று உண்மை என்று அறிஞர் பலர் இன்று பேசுகின்றனர். இது குறித்து கவிஞர் வைரமுத்து அவர்களின்

கருத்து என்ன என்பது இந்த முன்னுரையில் இல்லை. எனினும் இன்னொரு அரிய உண்மையைச் சுட்டிக் காட்டுகிறார் கவிஞர். சுந்தரபாண்டியன் வடக்கில் தலைவைத்தான். மாலிக்காபூரை அழைத்தான். அன்று வடக்கு நோக்கிச் சாய்ந்த தமிழன் தலை இன்றுவரை நிமிரவே இல்லை என்று கவிஞர் சொல்லும்பொழுது நாம் அதிர்ச்சிக்கு ஆளாகிறோம். இஸ்லாமியர் – தமிழன் சேகரித்து வைத்த செல்வங்களைக் கொள்ளையடித்துக் கொண்டுபோயினர். எதிர்க்க இயலாத தமிழன் தற்கொலை செய்துகொண்டான். தமிழனின் வரலாற்றில் இது மாபெரும் களங்கம். எனினும் இஸ்லாம் மூலம் தமிழனுக்குள் மீண்டும் சகோதரத்துவம் தழைத்தது என்கிறார் கவிஞர். சித்தர்களின் தோற்றத்தை இந்தச் சூழலில் வைத்துச் சொல்லுகிறார் கவிஞர். தமிழ் இலக்கிய வரலாற்றின் தடம் இங்கு நேர்படுகிறது என்பதில் அய்யமில்லை.

பாரதியைப் பற்றிக் கவிஞர் அற்புதமாக ஒன்றைச் சொல்லுகிறார். 20 நூற்றாண்டுகளின் தமிழ் இலக்கியம் பாரதியை எதிர்பார்த்து நின்றது என்கிறார். பாரதத் தாய் தவம் இருந்தாள் என்று சொல்லுவதும் பொருந்தும். பாரதியின் மூலம் தமிழ் இலக்கியம் மாபெரும் புத்துயிர்ப்பைக் கண்டது என்பது கவிஞரின் கருத்துரை. வள்ளுவரும், இளங்கோவும், கம்பரும், பாரதிக்குள் மீண்டும் உயிர்ப்புக் கொண்டனர். 20 நூற்றாண்டுகளின் தமிழ் இலக்கிய வரலாற்றின் உண்மைப் பொருளைப் பாரதி மூலம் கற்றுக்கொள்கிறோம் என்பதில் அய்யமில்லை.

இந்த முன்னுரையில் இடம் பெறும் இன்னொரு முக்கியக் கருத்தை இறுதியாகக் குறிப்பிட வேண்டும். தமிழ் இலக்கிய வரலாற்றைப் பற்றிச் சொல்லும் பொழுது கவிஞர் வைரமுத்து அவர்களுக்குள் விரிவு பெறும் உலகப் பார்வை குறித்து இங்கு சொல்ல வேண்டும். மேற்குலக வரலாற்றுலகப் போக்கையும், கிழக்குலக வரலாற்றுப் போக்கையும் ஒப்பிட்டுத் தொடர்ந்து சிலவற்றைச் சொல்கிறார். மேற்குலகின் மேன்மை, கிழக்குலகின் தாழ்ச்சி என்பதில் கவிஞர் தன்னை இழந்துவிடவில்லை. கிழக்குலகின் வெற்றி குறித்தும் பேசுகிறார். ஞானத்தீ என்ற கவிதையிலும் இது குறித்துச் சொல்லுகிறார். மேற்குலகின் நெருப்பு தொழிற்புரட்சியைத் தோற்றுவித்தது. கிழக்குலகின் நெருப்பு வருணாசிரம வேள்விகளுக்குப் பயன்பட்டது. தமிழர்களை எரியில் இட்டது. இப்படிச் சொல்லிவரும் கவிஞர் கண்ணகியின் நெஞ்சில் இருந்த

கனல் குறித்துச் சொல்லுகிறார். இன்னும் நமக்குள் எரியும ஞானத்தீ குறித்துச் சொல்லுகிறார். தமிழின் வரலாற்றுக்குப் புது வெளிச்சம் பாய்ச்சியவர் என்ற வகையில் வைரமுத்து அவர்கள் மேன்மைக்கு உரியவர் என்பதில் அய்யமில்லை.

தமிழ் மன்னர்கள் என்ற முறையில் ராஜராஜ சோழன் முதலியவர்களை வைரமுத்து பாராட்டுவது குறித்து இங்கு இறுதியாக ஒன்றைச் சொல்லலாம். மன்னர்களைப் பாராட்டும் மரபை நாம் கடந்துவந்துவிட்டோம். ராஜராஜ சோழனுக்கு விழா எடுக்கும் நம்கால மன்னர்கள் குறித்து நமக்கு மரியாதை இல்லை. ராஜராஜ சோழன் முதலியவர்களை வரலாற்றுச் சூழலில் வைத்து மதிப்பிட நமக்குத் தெரியவேண்டும். வரலாற்றுச் சூழலுக்கு வெளியில் கொண்டுவந்து நம்கால வரலாற்றை நாமே பார்க்கத் தவறிவிடக்கூடாது. இது சமத்துவ உலகம், ஜனநாயக உலகம். இங்கு எல்லோரும் ஓர் நிறை. ஏற்றத்தாழ்வுகளை இன்று நாம் மதிக்க முடியாது. வைரமுத்து அவர்களுக்கும் இந்த உண்மை புரியும். வலங்கை, இடங்கை மோதல்கள் குறித்தும் கவிஞர் குறிப்பிடுகிறார்.

இத்தொகுப்பில் இடம் பெறும் கவிதைகள் குறித்து இங்கு சிலவற்றைச் சொல்லவேண்டும். இன்றைய தமிழ்ச் சூழலில் கவிஞர் அவர்கள் கடுமையான திறனாய்வுக்கு உள்ளாகி வருகிறார் என்பதை இங்கு நாம் நினைக்க வேண்டியதில்லை. காலங் காலமாய்த் தமிழ் இலக்கியம் சொல்லாதது எதைக் கவிஞர் சொல்லிவிட்டார்? என்று கேட்கிறார்கள். தமிழ் இலக்கியத்திலிருந்து அங்கங்கே சில வரிகளைக் கவிஞர் எடுத்துககொண்டு விரிவுரை தானே செய்கிறார் என்று கூறுகிறார்கள். கவிஞர் கண்ணதாசன் அவர்களிடமும் இத்தகைய குறைகளைச் சில நண்பர்கள் கண்டனர். வள்ளுவர் சொல்லாததை இன்று எவன் சொல்லிவிட்டான். என்று கேட்பது மாதிரி இந்தக் கேள்விகள். சாதி, மதங்கள் மற்றும் ஏற்றத் தாழ்வுகள் இருக்கும்வரை சமத்துவப் பாடலை மீண்டும், மீண்டும் புதிய, புதிய வடிவங்களில், புதிய புதிய ராகங்களில் சொல்லத்தான் வேண்டும். எத்தனையோ லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய மூலிகைச் செடிகள் இன்றும் நம் நோய் தீர்க்கின்றன. வள்ளுவர் நெஞ்சத்தை ஈர்த்த நிலா இன்றும் நம் நெஞ்சைக் கவராமல் இல்லை. இலக்கியம் இப்படித்தான் ஒவ்வொரு தலைமுறையிலும் புதியதாகத் தன்னை உயிர்ப்பித்துக் கொள்கிறது. வைரமுத்து அவர்களும் பழந்தமிழ்க்கவிதைக்கு உயிர் தருகிறார். புதிய உயிர் தருகிறார். இந்தத் தொகுப்பில் எத்தனையோ

கவிதைகள் இந்த உண்மையை மெய்ப்பிக்கின்றன. தமிழ்த்தாய் வாழ்த்து என்ற முதல் கவிதை எத்தனை வித்தியாசமான, ஆனால் அழகிய கவிதை. அதேபோல இத்தொகுப்பில் மேலும் பல கவிதைகள்.

கவிஞர் எழுத்தில் ஆபாசம் கொப்பளிக்கிறது என்பது இன்னொரு குற்றச்சாட்டு. இந்தத் தொகுப்பிலிருந்தும் இரண்டொரு கவிதைகளை இந்தக் குற்றச் சாட்டுக்கு ஆதாரமாக்க முடியும். குழந்தையோடு தாய் கொஞ்சுவதாக முடிவு பெறும் கவிதையில் சில வரிகளை இப்படிச் சொல்லலாம்.

இப்பொழுது நேரிடையாகப் பேசலாம். ஆபாசம் இல்லாத மனிதன் என்று எவனும் இல்லை. ஆபாசம் வெளிப்படையாக இருக்க வேண்டாம் என்பது இவர்கள் குரல். மறைத்துச் செய்யலாம் என்பது இவர்கள் உள்ளுறை. எதை மறைக்க வேண்டும் வெளிப்படையாகப் பேசுங்கள் என்பது நம் காலத்தின் புதிய குரல். துறவிகள் மறைத்துச் செய்கிறார்கள். கம்யூனிஸ்டுகளும் மறைவாகச் செய்கிறார்கள். எல்லாவற்றையும் வெளிப்படையாகப் பேசத்தான் வேண்டும். காமத்தை மட்டும்தான் வெளிப்படையாக பேசவேண்டும் என்பது இல்லை. துறவிகளும் கொள்ளையடிக்கிறார்கள். சொத்து சேர்க்கிறார்கள்; சாதி பார்க்கிறார்கள். கம்யூனிஸ்டுகளும் இதையே செய்கிறார்கள். இவையெல்லாம் ஆபாசம்தான். முதலாளியம் தான் இதற்கெல்லாம் மூலவித்து காமம் முதலியவற்றை வளர்ப்பதன் மூலம தன் வணிகத்தை விரிவுபடுத்துகிறது முதலாளியம். புரட்சிகர உணர்வை இளைஞர்கள் பெறாமல் ஆபாசங்களுக்கு விளம்பரம் தந்து அரசியல் நடத்துகிறது முதலாளியம். வைரமுத்து அவர்களின் கவிதைகளில் வெளிப்படும் ஆபாசம் முதலாளியம் ஊக்குவிக்கிற ஆபாசம். ஆபாசம் மட்டும்தான் கவிஞரின் கருப்பொருள் என்பது உண்மை இல்லை. காதல் உணர்வை இன்னும் ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு மனிதன் இழந்துவிட முடியாது. ஆயிரம் வகைகளில் பாடினாலும் புதிது புதிதாகத் தழைக்கிற காதலுக்கு மேலும் புதுப்புது வடிவங்கள் தேவை. காதலின் நுட்பங்கள் அளவில்லாதவை. கம்பர் பாடி முடிக்காததைப் பாரதி பாடுகிறார். பாரதிதாசன் பாடுகிறார்; கண்ணதாசனும், வைரமுத்துவும் பாடுகிறார்கள்.

காதலைப் பாடுவதோடு எந்தக் கவிஞனும் நிற்பதில்லை. காதலைப் பாடும் பொழுதும் கவிஞனுக்குள் செழித்துள்ள தத்துவப்பார்வை அங்கங்கே கிளை விரிக்கும். வைரமுத்து அவர்களின் கவிதைக்குள் இந்தக் கிளைகளும் அடர்த்தியாகவே

பூத்துள்ளன. எங்கோ மனம் வைத்து இதையெல்லாம் திறனாய்வு என்ற பெயரில் நாம் இழந்துவிட வேண்டியதில்லை. முதலாளியத்தை நிலப் பிரபுத்துவத்தை, மதம் முதலிய ஆதிக்கங்களை நமக்குள்ளிருந்து களைந்தெறிவதில்தான் நம் கவனம் இருக்க வேண்டும். வைரமுத்து அவர்களைக் குற்றம் சொல்லி நம் குற்றங்களை நாம் மறைக்க வேண்டியதில்லை.

இடையில் வந்த தடைகளை நீக்கிய பிறகு கவிதைகளைக் காண்பது நமக்கு இனிய அனுபவம். தமிழ்க் கவிதைகளில் தொடர்ந்து புதிய வடிவங்களைச் சேர்க்கிறார் கவிஞர் வைரமுத்து. சின்னச் சின்ன ஆசை என்று இவர் படைத்த கவிதை வடிவத்தை இளம் கவிஞர்கள் பலர் பின்பற்றுகிறார்கள். எல்லா மலரினுள்ளும் வாழ்க்கை எத்தனையோ புதிய புதிய அனுபவங்களை வழங்கியுள்ளது. இந்தப் புதுமையின் நுட்பங்களைச் சொல்வதற்குப் புதிய வடிவங்கள் தேவைப்படுகின்றன. இந்தத் தொகுப்பிலும் மேலும் சில புதிய வடிவங்கள். "கேட்டேன் கேட்டேன்" என்று தொடர்கிறது ஒரு கவிதை. "இருபது கட்டளைகள்" என்று ஒரு கவிதை, இன்னும இவை போன்ற கவிதைக்கான புதிய வடிவங்கள். ஒவ்வொரு வடிவத்தையும், திரும்பத்திரும்பப் பயன்படுத்தும் பொழுது சடங்காகிவிடும் என்ற எச்சரிக்கை உணர்வை நாம் இழந்துவிடக் கூடாது.

ஒவ்வொருவரின் அறிவு வளம், கலையுணர்வு வளம் ஆகியவற்றுக்கு ஏற்ற வகையில் கோடி நுட்பங்கள் கூடிவரும். இந்தத் நுட்பங்கள் வைரமுத்து அவர்களிடம் கொள்ளை, கொள்ளையாய்ச் சேர்ந்திருக்கின்றன. நம் காலச் சூழலில் வைரமுத்து அவர்களை இன்றியமையாத கவிஞர் எனச் சொல்லுவதற்கு இதுவே காரணம்.

நதிகள் காணாமல் போவது நம் காலத்து வரலாறு. 20–30 ஆண்டுகள் கழித்துச் சொந்த ஊருக்குச் செல்லும் பொழுது நமக்குள் ஏற்படும் சோகங்களுக்கு அளவில்லை. நண்பர்கள், உறவினர்கள் தொலைந்து போய்விட்டனர். நாம் பார்த்த ஆறுகள் இல்லை. முன்னர் பார்த்த ஆறு இடையில் கால்வாய் ஆகி இப்பொழுது வாய்க்காலாகிவிட்டது. முன்னர் பார்த்த பாலைப் புதர்கள் இல்லை. பட்டாம் பூச்சி இல்லை. முன்னர் பாடிய பறவைகள் இல்லை. எல்லாம் எங்கே போயின? யார் கொண்டு போனார்கள்? இந்தச் சோகம் கவிஞருக்கும் உரியதுதான். சில கவிதைகள் இந்தச் சோகத்தை வெளிப்படுத்துகின்றன. நம் கால வரலாறு மற்றும் சமூக நெருக்கடிகளிலிருந்து இன்னும் இவை போன்ற பல கவிதைகள்

பிறப்பெடுக்கின்றன. கவிஞர் வைரமுத்துவும் வாழ்வியல் அனுபவங்கள் சிலவற்றை அங்கங்கே பதிவு செய்துள்ளார். மாஸ்கோ ரயிலில் ஓர் அனுபவம். காரல் மார்க்சு கல்லறையை லண்டனில் பார்த்த போது ஓர் அனுபவம். இப்படி மேலும் பல அனுபவங்கள். 25 ஆண்டுகளாகத் தம் மனத்தில் பதிந்திருந்த காதலியை மீண்டும் பார்க்கிற அனுபவம்.

எந்த ஒரு கவிஞனுக்குள்ளும் கவிதை எங்கிருந்து பிறக்கிறது. எப்படிப் பிறக்கிறது என்பதை அறிந்துகொள்ள அவரது கவிதைக்குள் தேடுகிறோம். கவிஞனோடு அல்லது கவிதையோடு நாம் இப்படித்தான் உறவு கொள்கிறோம். நமக்குள்ளும் ஒரு கவிஞர் உண்டு. இந்தக் கவிஞன் தான் இன்னொரு கவிஞனுக்குள் தேடுகிறான். நாமும் இப்படித்தான் தேடுகிறோம். வைரமுத்து எங்கிருந்து தன் கவிதைகளைத் தேர்ந்தெடுக்கிறார். ஆலமரத்தடியில் கவிஞர் அமர்ந்திருக்கிறார். மேலிருந்து விழும் ஓர் இலை தன் கதை சொல்கிறது; கவிதை சொல்லுகிறது. மரணம் இந்த இலையை வாட்டவில்லை. எல்லா வகை இன்பங்களையும் பார்த்தது இந்த இலை. இப்பொழுது தரையில் விழுகிறேன். மீண்டும் மண்ணோடு இணைந்து மரத்திற்கு உரமாவேன். மீண்டும் மரத்தில் இலையாய்த் துளிர்ப்பேன். எனக்கு மரணம் இல்லை என்கிறது இலை. இலை சொல்வது கவிதை மட்டுமல்ல. தத்துவமும். கவிதையும், தத்துவமும் இங்கு இரண்டறக் கலந்துவிட்டன. ஆன்மாவுக்கு அழிவில்லை என்று நாம் படித்திருக்கிறோம். இங்கு பார்க்கிறோம்.

பயணங்கள் குறித்து வைரமுத்து ஒரு கவிதை எழுதுகிறார். பயணங்களின் போது நீங்கள் தகவல்கள் வாசிக்கிறீர்கள். ஒலி நாடாக்களில் இசைப் பாடல்கள் கேட்கிறீர்கள். பலர் சேர்ந்து செல்கிறீர்கள். நான் தனித்துச் செல்கிறேன். எதையும் எடுத்துச் செல்வதில்லை. நதியின் ஓட்டம் கண்டு வியந்து நிற்கிறேன். மொட்டுக்கள் மலர்ந்து நிற்பதில் திளைத்து நிற்கிறேன். தொடுவானத்தில் மனம் பதிக்கிறேன். புல் நுனி இலையில் பனித்துளிக்குள் பார்க்கிறேன். புற்களை என்னால் மிதிக்க முடியாது. மலர்களை நான் வாசிக்கிறேன. பறவையின் பாடல் கேட்கிறேன். இற்று விழுந்த ஈசலின் சிறகுக்குள் தவிக்கிறேன். – இப்படியெல்லாம் கவிஞர் சொல்லும்பொழுது எங்கிருந்து எப்படிக் கவிதைகளைக் கவிஞர் எடுக்கிறார் என்பது புரிகிறது.

புறம் போக்கில் கட்டிய வீட்டை அதிகாரிகள் இடிக்கிறார்கள். தாய் கதறுகிறாள். உதவிக்குத் தந்தை இல்லை. மகன் இல்லை. அதிகாரிகள் வீட்டை இடிப்பது உறுதி. கடைசியாகத் தாய் கெஞ்சுகிறாள். கொல்லைப் புறத்தில் என் மகள் மல்லிகைக் கொடி வைத்து வளர்க்கிறாள். அருள் கூர்ந்து அதை அழித்து விடாதீர்கள். அந்த மல்லிகைக் கொடியின் பூ யாருடைய தலையிலாவது ஏறி அழகு பூக்கட்டும் என்கிறார். இன்குலாப்பின் பாடல் நம் நினைவுக்கு வருகிறது. தாயின் மனம் நமக்குப் புரிகிறது. தாய்க்குள் இருக்கும் ஒரு கவிஞன் தெரிகிறான். இப்படி எல்லாம் கவிஞனுக்குள் கவிதை தேடிப் பார்க்கவேண்டும். நமக்குள் இருக்கும் கவிஞனை உயிர்ப்பிக்கவேண்டும். நாமும் நமக்கான கவிதை எழுத வேண்டும். தமிழ் நமக்குள்ளும் தழைக்கும் தனிநிறத்தோடு தமிழ் வளரும். பெரியாருக்குத் தமிழ்க் கவிதைகள் அதிகம் பிடிக்கும் என்று நாம் சொல்ல முடியாது. பாரதிதாசனுக்குப் கம்பரைப் பிடிக்கும். குமரகுருபரைப் பிடிக்கும். தேவார திருவாசகங்களை யாராவது குறைத்துப் பேசினால் பாரதிதாசன் சினம் கொள்வார். பாரதிதாசனிடம் தமிழ் இவ்வாறு கனிந்திருந்தது. கடவுளைத் தமிழ் பாடியிருக்கிறது என்பதற்காகத் தமிழை பாரதிதாசன் நொந்து கொள்ளவில்லை. தமிழிலிருந்து தமிழ்க் கடவுளர்களை விலக்கி வைக்கவில்லை. இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் பெரியார் நமக்குள் அழுத்தம் பெற்ற போது கடவுளர்களை விலக்கி வைத்தோம். கேலி செய்தோம். தமிழை இகழ்ந்தும் நம்மவரால் சொல்ல முடிந்தது. வள்ளுவருக்குள்ளும் தெய்வம் உண்டு. தெய்வத்தின் குணமும், குறையும் வள்ளுவருக்குத் தெரியும். மனிதனுக்குள்ளும் தெய்வத்தைக் கண்டார். புரோகிதர்களிடமிருந்து தெய்வங்களை நாம் தான் மீட்க வேண்டும். தெய்வங்களுக்குள் மனிதனை, வரலாற்றை, உண்மையை, பொய்யை, அறத்தை நாம்தான் காண வேண்டும். கவிஞர் வைரமுத்து தெய்வங்களுக்கு எதிராகக் குரல் கொடுக்கிறார். விநாயகனைக் கோபிக்கிறார். தந்தத்தை இன்னும் இரண்டாகப் பிளந்து எல்லோருக்கும் கற்றுத் தருவாயானால் உன் கோயிலுக்கு வருவேன். இப்படியே பல தெய்வங்களோடு சண்டைபிடிக்கிறார். கவிஞரின் உணர்வை நாம் புரிந்து கொள்கிறோம். இராமன் தெய்வம் என்றால் பாபர் மசூதி இடித்ததை ஏற்றுக் கொள்வானா? என்றும் நமக்குள் கேட்டுக்கொள்கிறோம். மனிதர்களோடு பிடிக்க வேண்டிய சண்டையைத் தெய்வங்களோடு நாம் பிடிக்க வேண்டியதில்லை. உண்மை தெரியாதவர் இப்படி சண்டை

போடலாம். இங்கெல்லாம் கவிதை சிறுத்துப் போகிறது. கவிதைக்குள் ஈரம் இல்லை. கவிதைக்குள் நேயம் இல்லை. கவிஞர் வைரமுத்து அவர்கள் கவனிக்க வேண்டும். பெரியாருக்குள் ஈரம் உண்டு. கருணை உண்டு. பெரியாருக்கும் கவிதை தெரியும். இது குறித்தும் கவிஞர் சிந்திக்க வேண்டும்.

வைரமுத்து மக்கள் கவிஞராகிவிட்டார். அவரை இனி மறுத்துப் பயனில்லை. என்னதான் மக்களின் எதிரிகள் பக்கம், வைரமுத்து அவர்களை நம் நண்பர்கள் சிலர் தள்ளினாலும், மக்களின் எதிரிகளோடு அவரால் வாழ முடியாது. வாழ்ந்து கவிதை செய்ய முடியாது. மக்களோடுதான் தமிழ் என்றும் இயங்கும். தமிழோடு தான் வைரமுத்து அவர்களுக்கும் வாழ்வு. எதிரிகளோடு அவ்வப்போது கை கோத்துக் கொள்கிற வைரமுத்து அவர்களை நாம் வேண்டிக் கொள்கிறோம். எப்பொழுதும் எங்களோடு இரும்.

*குறிப்பு: காவ்யா பதிப்பகத்தின் 'கவிஞர் வைரமுத்து இலக்கியத்தடம்' என்ற நூலில் இடம்பெற்ற கட்டுரை.*

# சுயம் தேடும் நெடும்பயணம்

நண்பர் இளையபாரதி அவர்களின் கவிதைகளை ஒரு தொகுப்பாக இரண்டு அல்லது மூன்று முறை வாசிக்கும்பொழுது, கவிதைகள் பல்வேறு வகைகளில் அமைந்திருந்தபோதிலும், இவற்றுக்கு அடியிலான உள் ஓட்டம் நம்மைக் கவர்கிறது. என்னைப் பொறுத்தவரை எந்த ஒரு கவிஞனை விடவும், அவன் வழியாக இயங்கும் கவித்துவத்தில்தான் நான் கவனம் கொள்கிறேன். கவிஞனை விடவும் கவித்துவம்தான் நம்மைச் செழுமைப்படுத்தும். இளைய பாரதியினுள்ளும் இத்தகைய கவித்துவமே எனக்கான தேடல். கவித்துவம் என்பது அனேகமாக எல்லா மனிதருக்குள்ளும் சிறியளவிலோ, பெரிய அளவிலோ இயங்குகிற ஒரு சக்தி. இதன் மூலம் தேடி நம்மால் கண்டடைய இயலாது. தனக்குள் கவிதையைக் கண்டுகொண்டவனுக்குள், இன்னும் இன்னும் ஆழம் தேடிச் செல்கிறபொழுது., தன் கவித்துவத்திற்குள் அவன் கரைந்து போகிறான். இப்பொழுது அவனுக்குத் தனிப் பெயரோ, பெருமையோ சொல்ல வேண்டுவதில்லை. இவன் தனக்குள் கண்டுகொள்கிற கவித்துவ தரிசனம் இவன் பெற்ற பேறு.

இளையபாரதிக்கும் இந்தப் பேறு வாய்த்திருக்கிறது. இளையபாராதி அவர்களின் தொகுப்பில் தொடக்கத்தில் உள்ள சில கவிதைகள், தனக்குள் இயங்கும் கவிதை பற்றிய புரிதல்கள் சொல்லப்படுகின்றன. தொடர்ந்து தொகுப்பு முழுவதும் இன்றைய சூழலில் மனிதனின் அவலம் சொல்லப்படுகிறது.

கவிஞன் வானத்தில் எழுந்து திரியும் ஒரு பறவை. வானமும் மண்ணும் அந்தப் பறவையின் பார்வைக்குள் வருகின்றன. எனினும் இந்தப் பறவை மண்ணுக்கு வர வேண்டி இருக்கிறது. புழுக்களைத் தின்ன வேண்டி இருக்கிறது - எனினும் வானக்காட்சியே இந்தப் பறவைக்கு அமரத்துவம் தருகிறது. கவிஞனுக்குள்ளும் இப்படி ஒரு வானக்காட்சி மற்றும் மண்ணுலக வாழ்வு. மூன்று காலமும் இவனுக்குள் உள்ள வேர்கள் மிக மிகத் தொன்மையானவை. காலக் கணிப்பில் இவை அகப்படுவதில்லை. இவனுக்கு மரணம் இல்லை. இவன் கவிஞன். இவன் தத்துவங்களுக்குள் முடங்குவதில்லை. தரிசனங்கள் இவனுக்கு உரியவை. இவனுக்குள் வானம் மட்டும் அல்ல. கடல்களும் இருக்கின்றன. இவனுக்குள் வந்து சேரும் நதிகளுக்குள் தேடினால் மூலங்கள் அகப்படுவதில்லை.

இசையும், ஓவியமும் இவனுக்குள்ளிருந்து வருபவை. காதல் இன்றி இவனுக்கு வாழ்வில்லை. இவனுக்கு சீருடைகள் மற்றும் ஒப்பனைகள் பிடிப்பதில்லை. சுயம் தேடித் தனக்குள் நெடும்பயணம் மேற்கொள்பவன் இவன். மீண்டும் மீண்டும் சொல்லலாம் இவன் கலைஞன். தரிசனங்கள் மூலம் இவன் விலைஞனாகிறான். இவனுக்குத் தேச எல்லைகள் இல்லை. இவனுக்கு வானம் மட்டுமல்ல, மண்ணும்தான் பிடிக்கும். மண்ணுலகில்தான் இவனும் வாழ வேண்டியிருக்கும்.

மண்ணுலகத்தின் அவலங்களுக்குள்தான் இவனும் வாழ்கிறான். அடிக்கடி இவன் வானப் பரப்பில் திரிந்தாலும் மண்ணுலகம் தான் இவன் உடலியல் வாழ்க்கைக்கு ஆதாரம். காதலி இவனுக்குத் தேவைப்படுகிறாள். வேசிகளையும் இவன் விலக்கவில்லை. சீருடைகள் தேவை இல்லை என்று இவன் நினைத்தாலும் இவனும்தான் சீருடைகளை மாட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஒப்பனைகளை இவனாலும் தவிர்த்துக்கொள்ள இயல்வதில்லை. தன்னைத்தானே நிரூபணம் செய்து கொள்வது தேவை இல்லை என்றாலும் இவனுக்கும் நிரூபணங்கள் தேவைப்படுகின்றன. காட்டில் ஒரு பேரழகாய் அலைந்து திரிகிற யானை நகரத்திற்குள் வந்துள்ளது. ஒரு பிச்சைக்காரனைப் போலக் காசு வாங்குகிறது. திரௌபதிகளுக்கு இங்கு மரியாதை இல்லை.

வான்கோவும் இங்கு தன் காதலை மெய்ப்பிப்பதற்காகத் தன் காதை அறுத்துக் கொள்கிறான். மேதைகள் இளம் வயதிலேயே சாவைத் தேடிக் கொள்கிறார்கள். புதுமைப்பித்தன் கடிதங்களில்தான் முத்தங்களைச் சொரிகிறார். இது யானைக்கால் தேசம். தன் யானைக் காலை தூக்கிக் கொண்டு இது நெடுந்தொலைவு செல்ல முடியாது. இது தேசத்திற்கு மட்டுமல்ல நமக்கும்தான் வாய்த்திருக்கிற விதி. இருளுக்குள் தெரியும் நட்சத்திரங்களோடுதான் நாம் நிம்மதி அடைய வேண்டியிருக்கிறது. சூரியனை நம்மால் சுமக்க இயலாது. இந்த அவலங்களை எத்தனைமுறை தான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டும் அனுபவித்துக்கொண்டும் இருக்க முடியும். எனினும் நமக்குள் கவிஞன் இருக்கிறான். அவனோடு அவ்வப்பொழுது நிம்மதியாகவும் இருக்க முடிகிறது. எனினும் மரணம் நமக்கு இனியது.

இளையபாரதி அவர்களின் கவிதைகளுக்குள் எனக்குத் தென்படும் காட்சி இது. இன்று இளையபாரதி மட்டுமல்லாமல் எல்லாக்

கவிஞர்களும் இப்படி ஒரு வாழ்க்கையைத்தான் வாழ வேண்டியும் இருக்கிறது. முரண்பாடுகள் இல்லாமல் வாழ்க்கை இல்லை என்பது உண்மைதான். எனினும் மோசடிகளோடு எப்படி இணக்கம் கொள்ள முடியும். இராமாயணம் முதற்கொண்டு நாம் எவ்வளவோ ஆழமான மற்றும் விரிவான மரபோடு உறவு கொண்டிருக்கிறோம். நமது வேர்கள் ஆழமானவை. நம் இலட்சியங்கள் உயர்வகையானவை. இலட்சியங்களை நம்மால் அடைய இயலவில்லை. ஒரு காதலுக்குள் நம் இலட்சியங்களைச் சுருக்கிக் கொள்வதுபோல நமக்குள்ளும்தான் இறுகிப் போகிறோம். நம்மோடும், நமக்குள்ளும் இருக்கிற கடவுளை நாம் உதாசினம் செய்கிறோம். கடவுளோடு நம்மால் வாழ முடியவில்லை. கடவுளோடு வாழ்வது கடினம். ஆகவே அவரை நமக்குள்ளிருந்து வெளியேற்றுகிறோம். ஒரு குஷ்டரோகிக்குள்ளும் கடவுள் இருக்கிறார் என்ற போதிலும் குஷ்டரோகியை நம்மால் எப்படி நேசிக்க முடியும்.

குழந்தைகள் உடைக்கும் பொம்மைகள் அழகானவை என்பதில் ஐயமில்லை. நமக்குள்ளும்தான் உடைந்தும், உளுத்தும் கிடக்கிறோம். எனினும் நம்மை நம்மால் வெறுத்து ஒதுக்கவா முடிகிறது. நாமும் தான் ஜே. கே. வை படித்துவிட்டுச் சுயம் என்று பேசுகிறோம். சுயத்தை நாமே கண்டுகொண்டதாகச் சொல்லுகிறோம். இப்படியும் முரண்பாடுகளோடு வாழத்தான் வேண்டியிருக்கிறது.

நண்பர் விக்கிரமாதித்தன் உங்கள் வாழ்வின் பல பரிமாணங்களைத் தன் கட்டுரையில் தந்திருக்கிறார். எனக்கு இவை பற்றிப் பெரும்பாலும் தெரியாது. நேரில் உங்களோடு பழகி இருந்தால் மட்டுமே உங்கள் கவிதைகளோடும் கூடுதலாக நான் உறவாட முடியும். எனினும் எந்த ஒரு கவிஞனின் உள் இயக்கம் குறித்து, அந்தக் கவிஞனைப் பற்றிய வாழ்வியல் விவரங்களை அறியாமலே கூட புரிந்துகொள்ள முடியும். இந்த நம்பிக்கையோடுதான் நான் கட்டுரை எழுதினேன்.

காடுகள் அழிவு பற்றி ஒரு கவிதையில் உணர்ச்சியோடு எழுதுகிறீர்கள். கருக்கலைப்பு குறித்து இன்னொரு கவிதையில் நீதிமன்ற விசாரணைகள் குறித்தும் எழுதுகிறீர்கள். சுரண்டலைப் பற்றி இன்று எவரும் சொல்லாமல் இருக்க முடியாது. நம்மை அடிமைகள் ஆக்கியவர்கள் யார் என்ற கேள்வியை நமக்கு நாமே கேட்டுக் கொள்ளாமலும் இருக்க முடியாது. இப்படியெல்லாம் கவிதைகளில் இன்றைய சமூகம் பற்றி நிறையவே எழுதுகிறீர்கள்.

அங்கங்கே செதுக்கப்பட்ட சில அற்புதமான வரிகள்.

பூரணங்களைத் தேடுகிறோம். பூரணங்கள் அழகியவை. அவற்றைக் கண்டறிந்துஅவற்றோடு இணக்கமாக வாழ விரும்புகிறோம். பூரணங்கள் என்று எவற்றையேனும் காண முடியுமா? கண்டுகொள்ள இயலுமா? கலைஞன் இப்படித்தான் பூரணம் தேடுகிறான். பிளாட்டோ கண்டுகொண்ட பூரணம் மாதிரி இது. சங்கரன் கண்ட பிரம்மம் என்பதும் பூரணம்தான். மார்க்ஸ் காணும் கம்யூனிசமும் ஒரு பூரணம். இவை வரலாற்றில் இல்லை - வாழக்கைக்குள் தேடுகிறோம். எப்படி இவை கிடைக்கும். கடவுளும் ஒரு பூரணம். யாருக்கு அவர் முழுமையாகக் கிடைப்பார். சுந்தர ராமசாமியின் ஜே.ஜே.வும் இப்படி ஒரு பூரணத்தைக் கண்டடைவதற்காகத் தன்னைச் சிதைத்துக் கொண்டான். பூரணம் இல்லை என்றாலும் அதைத் தேடுவதுதான் வாழக்கை என்றான். இப்படித்தான் கடவுளை மட்டுமல்ல, கம்யூனிசத்தையும் நமக்குள் தேடுகிறோம். செஞ்சட்டைக்காரனும் தேடுகிறான். கறுப்புச் சட்டைக்காரனும் தேடித் தேடி தோற்றுப் போகிறான். வெற்றியைப் போலவே, தோல்விகளுக்கும் மரியாதை உண்டு. ஒரு திரிசங்கு சொர்க்கத்தில்தான் நாம் வாழ வேண்டி இருக்கிறது. சிலர் எப்படியோ வாழ்க்கையோடு சமரசம் செய்து கொள்கிறார்கள். வான்கோவுக்கோ, புதுமைப்பித்தனுக்கோ சாத்தியமில்லை. மேதைகள் என்ற முறையில் இவர்களின் துயரம் கடுமையானது. புத்திசாலிகள் தப்பித்துக்கொள்கிறார்கள். காதல் இவர்களுக்குப் போதும். சிருடைகளும், ஒப்பனைகளும் இவர்களுக்குப் போதும்.

படிமங்கள் பற்றிய விரிவான கவிதையை நான் பெரிதும் இரசித்தேன். தேசம் மொழி என்று தொடங்கி நூற்றுக்கணக்கான படிமங்களில் நாம் வார்க்கப்பட்டிருக்கிறோம். நம்மைப் பற்றிய உண்மையை நம்மால் அறிவதற்கில்லை. இப்படி உள்ளும் புறமும் படிமங்கள் நம்மை மூடி இருக்கின்றன. அல்லது படிமங்களில் நாம் புதைப்பட்டிருக்கிறோம் அல்லது படிமங்களாலேயே கட்டமைக்கப்பட்டிருக்கிறோம். சுயம் என்று பேசுவதற்கு எங்காவது இடம் இருக்கிறதா? என்று துடிக்கிறோம்.

எல்லாக் கவிதைகளையும் மீண்டும் ஒருமுறை மனத்தில் இருத்தி சிந்திக்கும் பொழுது உங்களுக்குள் உள்ள ஒரு மெய்யியலாளனை நீங்கள் மேலும் வளர்த்தெடுக்கிற வாய்ப்பை இடையில் தவறவிட்டிருக்கிறீர்கள் என்று சொல்லத் தோன்றுகிறது. இந்த

மெய்யிலாளனை சிதறடித்திருக்கிறீர்கள்.

கவிஞனுக்குள் இருக்கும் மெய்யியலாளனைக் கண்டுகொள்வதும்கூடத் தவறு என்று சிலர் நமக்கு உபதேசம் செய்கிறார்கள். ஆழ்ந்து தேடினால் உங்கள் கவிதைகளுக்கு இடையில் ஒரு காவியம் இயங்குவதைக் காண முடியும். ஆனால் காவியமாக ஒன்றை எழுத நீங்கள் இதுவரை முயற்சி செய்யவில்லை.

*குறிப்பு : இளையபாரதியின் 'குருதிகசியும் இசைத்தட்டு' என்ற கவிதை நூல் பற்றிய கட்டுரை*

# "எனது உலகம் – எனது உலகியல் – எனது உண்மைகள்"

*– வ. ஈசுவரமூர்த்தி கவிதைகள்*

1. 'எனது உலகம் - எனது உலகியல் - எனது உண்மைகள்' என்னும் பொருளில் அறிஞர் வ. ஈசுவரமூர்த்தி அவர்கள் தான் கண்ட வாழ்வியல் உண்மைகளைக் கவித்துவ உணர்வோடு நூலாக வடித்துள்ளார். சென்னை–பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் இலக்கியம் கற்றுப் பிறகு சாந்தி நிகேதனிலும் அதன் பிறகு ஆக்ஸ்ஃபோர்டிலும், கலையியல், தத்துவம் முதலியவற்றில் தான் பெற்ற அறிவையும், அனுபவங்களையும் இந்த நூலில் குறிப்பிடுகிறார். தான் பிறந்த பிச்சனூரில் கல்வி நிலையம் ஒன்றை அமைத்துத் தன் மக்களுக்குப் பணியாற்றினார். தமிழகத்திலும் இந்தியா மற்றும் உலகளவிலும் அறிஞர்களோடு அவர் உறவு கொண்டதைக் குறிப்பிடுகிறார். தமிழகச் சூழலில் அரசியலில் பணியாற்ற முனைந்து தான் பெற்ற அனுபவங்கள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். அவருடைய உலகியல் பார்வை மிக விரிந்தது என்பதில் ஐயமில்லை. இதழியல் துறையிலும் தொடர்ந்து பணியாற்றுகிறார். தன் வரலாறு எழுதி முடித்த நிலையில் தனக்குள் பொங்கித் ததும்பிய தன் வாழ்வியல் சார்ந்த கவித்துவ உண்மைகளை விடாப்பிடியாக எழுத நேர்ந்ததையும் நூலின் முன்னுரையில் குறிப்பிடுகிறார். தமிழ், உலக மொழி என்ற மரியாதையைப் பெற வேண்டும் என்ற ஆவலோடு தமிழ்க் கவிஞர்களுக்குத் தத்துவப் பார்வை தேவை என்பதை விடாப்பிடியாக வற்புறுத்துகிறார். அவரது சிந்தனைகள் மரியாதைக்குரியவை. அதே சமயம் தீவிரமான ஆய்வுக்குரியவை என்பதில் ஐயமில்லை. இத்தகைய ஆய்வு ஒன்றை என் பார்வையிலிருந்து இங்கு முன் வைப்பது எனது நோக்கம்.

2. தமிழ் இலக்கியத்தில் சங்க இலக்கியம் பற்றியும் திருவள்ளுவரின் அறம் குறித்தும் ஆசிரியர் சிறப்பாக எழுதுகிறார். வள்ளுவரைப் பெரிதும் கொண்டாடுகிறார். தமிழ் இலக்கிய வரலாறு அவர் கற்றவர் எனினும், இந்த நூலில் எல்லாவற்றையும் குறித்து அவர் எழுத வாய்ப்பில்லை என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். கம்பரைக் குறிப்பிடுகிறார். அந்தாதி முதலிய இலக்கியங்கள் சிறப்பில்லாதவை என்கிறார். பாரதியைப் போற்றும் ஆசிரியர் அவரைத் தாகூரோடு ஒப்பிட முடியாது என்று தன் மதிப்பீட்டைத்

தெரிவிக்கிறார். தற்காலத் தமிழ் இலக்கியச் சாதனையாளர்கள் என்ற முறையில் புதுமைப் பித்தனையும், க.நா.சு.வையும் வியந்து பேசுகிறார். தொ.மு.சி. ரகுநாதனுடன் தன் உறவைக் குறிப்பிடுகிறார். நா பிச்சமூர்த்தி கவிதைகள் தன் நெஞ்சில் பதியவில்லை என்கிறார்.

தற்காலத் தமிழ்க் கவிஞர்களுக்கு, இன்று நவீன உலகின் வளர்ச்சி பெற்றிருக்கும் விரிந்த அளவிலான தத்துவப்பார்வை இல்லை என்பதன் காரணமாக உலகத் தரத்திலான கவிதைகள் இங்கு எழுதப்படவில்லை என்கிறார். வாழ்வியல் அனுபவங்களோடும் தத்துவப் பார்வையோடும் எழுதப்படும் உயர் வகையான கவிதையின் வரையறைகள் குறித்து நூல் முழுவதும் விரிவாகப் பேசுகிறார். இந்திய வரலாறு பற்றித் தன் பார்வையை அழுத்தமாக முன் வைக்கிறார். வாழ்வியல் உண்மைகள் எவை என்பதை ஆராய்கிறார். இந்தியாவின் ஒருமைப்பாட்டை வற்புறுத்துகிறார்.

ஆரியர், திராவிடர் என்ற முரண்பாட்டிற்குப் பொருள் இல்லை என்பதை அழுத்திச் சொல்கிறார். அரசியல்வாதிகளின் குறைகள் பற்றி ஏராளமாக எழுதுகிறார். அந்நியர் ஆட்சியின் விளைவாகத் தமிழ் மக்கள் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து விட்ட அடிமைத்தனம் பற்றி மிகுந்த ஆதங்கத்தோடு பேசுகிறார். அரசு ஊதியம் என்பது அடிமைத்தனம். அமைச்சர்களும் கூட இங்கு அடிமைத் தொழில்தான் செய்கின்றனர். மலினக் கலாச்சாரம் இங்கு நீக்கமற நிறைந்துள்ளது. சினிமாக் கலாச்சாரம் மிக மலிவான கலாச்சாரம். அரசியல்வாதிகள் மட்டுமல்லாமல் தொழிலதிபர்களும் இந்த மலினக் கலாச்சாரத்தில் ஊறியுள்ளனர். அதிகாரமும், பணமும் தான் இவர்கள் வாழ்வை அடைத்துக் கொண்டுள்ளன. சுதந்திர உணர்வென்பதை இங்குள்ளவர் அறியமாட்டார்கள். தமிழ் இலக்கியத்தில் இந்த உணர்வு பதிவாகவில்லை. அரசியல்வாதிகள் எழுதும் இலக்கியத்தை தமிழ் அறிஞர்கள் கொண்டாடுகின்றனர். அடிமைத் தனத்திலிருந்து இவர்கள் தம்மை விடுவித்துக் கொள்ளாத வரை இவர்களால் தரமான இலக்கியம் படைக்க முடியாது. வாழ்வின் மேன்மைகளை உணர முடியாது.

இப்படித் தொடர்ந்து கூறும் அறிஞர் ஈசுவரமூர்த்தி அவர்கள் தன் அரசியல் சார்பைச் சனநாயக சோசலிசம் என்று குறிப்பிடுகிறார். ஆக்ஸ் ஃபோர்டில் தான் பெற்ற அனுபவங்களை அங்கங்கே குறிப்பிடுகிறார். மேத்யூ ஆர்னால்டு, டி.எஸ். எலியட் ஆகியவர்களின் இலக்கியச் சாதனைகள், அவர்களின் இலக்கிய / கலாச்சாரப்

பார்வைகள் பற்றி மிகுந்த மரியாதையோடு குறிப்பிடுகிறார். தனக்குத் தத்துவம் கற்பித்த அறிஞர்கள் பற்றிக் குறிப்பிடுகிறார். எதை மெய்ப்பிக்க முடியாதோ அது உண்மையாக இருக்க முடியாது என்ற Logical Postivism முன் வைக்கும் ஆய்வு முறையைக் குறிப்பிடுகிறார். இந்த ஆய்வு முறை தனக்கு உடன்பாடான ஆய்வு முறை என்றும் சொல்கிறார். (Logical Postivism என்பதைத் தருக்கவியல் நேர்க்காட்சி வாதம் என்று தமிழில் குறிப்பிடலாம்.)

இந்தியத் தத்துவத்தில் தனக்கு உடன்பாடான சிலவற்றைச் சொல்லுகிறார். இராசாராம் மோகன்ராயின் பிரம்ம ஞானம் தனக்கு உடன்பாடு என்கிறார். ஆதி சங்கரருக்குத் தான் வாரிசு என்கிறார். சங்கரர் பெயரில் முன் வைக்கப்படுகிற மாயை என்ற கொள்கை தனக்கு உடன்பாடில்லை என்கிறார்.

உலகமயமாதல் என்ற கொள்கையில் தன் சார்பை வெளிப்படுத்துகிறார். நவீன அறிவியல், தொழில் நுட்பங்களை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார். தகவல் தொழில் நுட்பத் துறையில் இந்தியா சூப்பர் பவர் (மேனிலை வல்லரசாக) ஆக முடியும் என்கிறார். சமூகத்தில் ஏற்றத்தாழ்வு என்றும் இருந்து வரும் என்கிறார். ரஷ்யாவிலும், சீனாவிலும் கம்யூனிசம் தோற்றுவிட்டது என்பதோடு கம்யூனிசம் நமக்குப் பயன்படாது என்கிறார். வாழ்க்கை ஒரு தவம் என்கிறார். தனது ஆய்வுரைகள் தமிழ்க் கவிதைத் துறையில் ஒரு பெரும் திருப்பத்தை ஏற்படுத்தும் என்பதை நம்பிக்கையோடு கூறுகிறார். அகங்காரம் தேவை என்கிறார். தமிழ் அறிஞர் சிலர் தன்னையும் இந்த நூலையும் பாராட்டி எழுதிய கருத்துரைகளை அங்கங்கே குறிப்பிடுகிறார். இவை கவிதைகள் தானா? என்று சிலர் தெரிவிக்கும் மதிப்புரைகளையும் தருகிறார். மரபுக் கவிதையோடும் புதுக் கவிதை முறையோடும் தனக்குள்ள உடன்பாடின்மையை ஆசிரியர் தெரிவிக்கத் தவறில்லை.

3. 200 பக்க அளவிலான இந்த நூலில் அடங்கியுள்ள பெரும்பாலான சிந்தனைகளை இதுவரை தொகுத்துக் கொண்ட நான் இனி இவரது சிந்தனைகள் பற்றி என் பார்வையை இங்கு பதிவு செய்ய விரும்புகிறேன். ஆசிரியரின் திறந்த மனம் குறித்து நானும் அறிவேன். அறிஞர் ஈசுவரமூர்த்தி அவர்கள் பெருங்கவிதை என்றும் உயர்கவிதை என்றும் குறிப்பிடுகிற கவிதை இலக்கணம் குறித்து அவர் கருத்துரைகள் சில மனத்தின் ஆழத்திலிருந்து ஊற்று எனப்

பெருகுவது உயர் கவிதை. உள்ளுணர்வோடு இக்கவிதை உறவுடையது. ஒரு கணநேர தரிசனத்தில் உருக் கொள்வது. மனத்தின் எல்லைகளைத் தொடுவதோடு அதைக் கடந்தும் இயங்குவது. வாழ்வியல் அனுபவங்களைத் தகர்த்துக் கொண்டு வெளிப்படுவது. அனுபவம் கடந்த இந்நிலையை இறைநிலை என்றும் சிலர் குறிப்பிடுகின்றனர். இவ்வகைக் கவிதைகள் இன்றைய தமிழ்க் கவிதையில் இல்லை. காரணம் நவீன உலகியல் பார்வை, தத்துவப் பார்வை இவர்களுக்கு இல்லை. இவ்வகைக் கவிதைகள் தான் உலகத் தரத்தில் உயர் கவிதைகளாகும்.

உயர் கவிதை பற்றிய ஆசிரியர் பார்வை எனக்கும் உடன்பாடுதான். ஆசிரியர் குறிப்பிடுவதைப் போல் பிரபஞ்சம் தழுவிய பார்வை தமிழ்க் கவிதைக்குத் தேவை. இன்றைய தமிழ்க் கவிஞர்களுக்கு விரிவான தத்துவப் பார்வை இல்லை என்பதும் உண்மைதான். தத்துவப் பார்வை என்பதற்கு ஆசிரியர் குறிப்பிடும் Logical Postivism என்பது எந்த அளவுக்குச் சரியானது என்று இங்கு கேட்டுக் கொள்ளத்தான் வேண்டும். ஆசிரியர் குறிப்பிடும் பெருங்கவிதை, ஏற்கெனவே கவிஞரின் வாழ்வியல் அனுபவத்தின் எல்லையைத் தகர்த்துக் கொண்டு, அவரது ஆழ்ந்த மனத்திலிருந்து வெடித்துக் கிளம்புவது. இந்த ஒரு கண தரிசனத்தின் போது கவிஞர் தன்னை இழந்து விடுகிறார். படைப்பியக்கத்தோடு ஒன்றி விடுகிறார். அவருக்குள் தர்க்க எல்லைகள் உடைந்து நொறுங்கி விடுகின்றன. இயற்கையோடும் பிரபஞ்சத்தோடும் அவர் ஒன்றி விடுகிறார். தாகூரும் பாரதியும் இப்படித்தான் பெருங் கவிஞர்கள். Logical Postivism என்ற தர்க்கவியலை வைத்துப் பெருங் கவிஞர்களின் கவித்துவ வீச்சை விளக்க முடியாது.

பிரம்ம ஞானம் தனக்கு உடன்பாடு என்றும் ஆதி சங்கரர் வாரிசு, தான் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஆதி சங்கரரின் தத்துவம் அத்வைதம். நானும் பிரம்மமும் ஒன்று என்னும் தத்துவம். இதற்கு இன்னொரு பெயர் அத்வைதம். எல்லா உயிர்களும் ஒன்று என்பது அத்வைதம். பிரபஞ்சத்தோடும் அனைத்து வகை உயிர்களோடும் நாம் இரண்டறக் கலந்து, கரைந்து கிடக்கிறோம். நமக்குள் முரண்பாடு இல்லை. வேறுபாடில்லை. இந்த ஆதாரத்தில் தான் நான் இந்தியன் என்று ஆசிரியர் கூறுகிறார்.

அத்வைதம் என்று நாம் பேசும் பொழுது விவேகானந்தரை நினைக்காமல் இருக்க முடியாது. விவேகானந்தர் அத்வைத

அனுபவத்தை முழுமையாகப் பெற்றவர். மூளைக்குள் மட்டும் சேகரித்துக் கொள்வதாக விவேகானந்தரைப் பொறுத்தவரை அத்வைதம் இல்லை. தன்னைச் சூழ்ந்துள்ள எல்லா உயிர்களோடும், மனிதரோடும் அத்வைத உணர்வை விரித்துக் கொண்டவர் விவேகானந்தர். விவேகாந்தருக்கு முழு அளவில் சமூகத்தோடு ஒத்த உணர்வுண்டு. அந்நியர் ஆட்சியில் இருந்து இந்திய மக்கள் விடுதலை பெற வேண்டும் என உணர்வுடையவர் அவர். மக்கள் மத்தியில் ஏற்றத் தாழ்வுகள் தேவையில்லை. எல்லா மனிதர்களுக்கிடையில் சமத்துவம் தேவை என்று கருதுகிற விவேகானந்தர் ஆங்கிலேயன் நம்மை ஆள வேண்டியதில்லை. சாதி வகையில் ஏற்றத் தாழ்வுகள் தேவை இல்லை. பூணூல் போட்டதாலேயே ஒருவன் பிராமணனாக இருக்க முடியாது. சமதர்மம் தான் மனித நாகரீகத்தின் சாரமாக இருக்க முடியும். விவேகானந்தருடைய அத்வைதம் என்ற உணர்வு இப்படித்தான் சமதர்ம உணர்வாக இயங்கியது. பாரதியும் தாகூரும் இம்முறையில் தான் அத்வைத உணர்விலிருந்து சமத்துவம் மட்டும் அல்லாமல் சமதர்மத்தையும் செறித்துக் கொண்டார்கள். இவர்களும் இவ்வகையில்தான் பெருங் கவிஞர்கள்.

ஆதிசங்கரருக்குத் தன்னை வாரிசு என்று கருதும் ஆசிரியர், இந்தியர் அனைவரும் ஒன்று எனக் கருதுவது சரி. மனிதர்களுக்கு மத்தியில் சமத்துவம் எனறு பேசுவதும் ஏற்கத் தகுந்தது. இதற்கு மேல் சமதர்மம் என சங்கராச்சாரியார்களால் பேச முடியாது. அவர்கள் என்றைக்கும் பிராமணன் என்ற செருக்கோடு தான் அதிகாரம் செய்வார்கள். இவர்கள் அத்வைதம் என்ற பேருணர்வை முழு அளவில் தாங்கியவர்கள் அல்லர். இவர்கள் போலிகள், பொய்யர்கள். தத்துவத்தை மலட்டுத் தனமாக மாற்றியவர்கள்.

அறிஞர் ஈசுவரமூர்த்தி, ஏற்றத் தாழ்வு இல்லாமல் வாழ்க்கை இல்லை என்கிறார். இதற்கு மேல் அவருக்குள் பயணமில்லை. வறுமையை வைத்து அரசியல் நடத்துவோரைக் காய்கிறார். கம்யூனிசம் தோற்றுவிட்டது என்கிறார். ரஷ்யாவிலும் கொஞ்சம் பயணம் செய்தவர் ஆசிரியர். மார்க்சியம் குறித்து ஆழமான ஆய்வுகளில் இவருக்கு ஈடுபாடு இல்லை. ரஷ்யாவின் மார்க்சியம் என்னவாயிற்று? ஏன் இப்படி ஆயிற்று? என்பது குறித்த ஆய்வு நூல்களை அவர் கற்கவில்லை. ஆசிரியரின் படிப்பறிவு ஏதோ ஒரு இடத்தில் நின்றுவிட்டது.

எனக்கு மார்க்சியத்தில் அக்கறை உண்டு. கட்சி மார்க்சியரோடு

எனக்குப் பெருமளவில் கருத்து வேறுபாடு உண்டு. சமூகத்தில் நிலவும் எத்தகைய ஆதிக்கத்தையும் ஏற்றத்தாழ்வுகளையும் ஒரு மார்க்சியரால் ஏற்க முடியாது. தொழில் வளர்ச்சி என்ற பெயரில் இயற்கை அழிவதையும், உயிர்கள் அழிவதையும் மார்க்சியன் ஏற்கமாட்டான். மனிதனுக்குள் இன்று சேகரமாயிருக்கும் பேரறிவும் கலை உணர்வும் வரலாற்றுக் காலத்தில் பல கோடி மக்களின் அனுபவம். இந்த அனுபவச் சேகரிப்பில் இருந்து மனிதன் ஒரு கையளவு மட்டும் எடுத்துக் கொள்கிறான். தன் ஆளுமையை இயற்கையிலிருந்தும், சமூகத்திலிருந்தும், வரலாற்றிலிருந்தும் பெறுகிறான். பிரபஞ்சத்தின் பேரியக்கத்தினுள் மனிதனும் அடக்கம். மனிதன் தனக்கான ஆளுமையைப் பெறுவது இவ்வகை உறவிலிருந்துதான். எந்த ஒரு நிலையிலும் மனிதன் தன்னை வரலாறு முதலியவற்றிலிருந்து வேறுபடுத்திப் பார்ப்பதற்கில்லை. மார்க்சியனும் ஒரு வகையில் அத்வைதம் என்ற பேருணர்வைத் தனக்குள் கண்டவன், தன் தேவைக்காக இவனால் யாரையும் சுரண்ட முடியாது. ஒடுக்க முடியாது. அரசியல்வாதியாகத் தன்னைச் சுருக்கிக் கொண்டவன் மார்க்சியனாகவும் இருக்க முடியாது. வறுமையை வைத்து அரசியல் செய்பவன் மார்க்சியன் இல்லை.

ஈசுவர மூர்த்தி அவர்கள் பிரம்ம ஞானமென்றும், அத்வைதமென்றும் பேசும் பொழுதே Logical Postivism என்றும் பேசுவது எத்தகைய பெரிய முரண்பாடு. ஆதிசங்கரர் பெயரில் சொல்லப்படும் மாயை என்ற கருத்தை இவர் மறுப்பது சரியானக் கருத்து. மாயை என்பது இன்றைக்கும் வேறுபல வடிவங்களில் நம் மக்கள் மத்தியில் தங்கியிருப்பதையும் ஆசிரியர் சரியாகவே சுட்டுகிறார். பணம் ஒரு மாயை. பதவி ஒரு மாயை. இப்படிப் பார்த்தால் இன்னும் எத்தனையோ மாயைகளை நாம் தொகுக்க முடியும்.

அறிவியல் அணுகுமுறைதான் சரி என்பது கூட ஒரு கட்டத்தின் மாயை ஆகி விடலாம். தர்க்கம் மனித அனுபவத்தின் ஒரு கூறு மட்டுமே. மனம் என்பதைத் தர்க்கத்தைக் கொண்டு ஆழம் காண முடியாது. ஆசிரியர் உள்ளுணர்வு என்றும் தரிசனம் என்றும் பேசுவதை தர்க்கத்தைக் கொண்டு விளக்க முடியாது. கலாச்சாரம் எனக்குக் கடவுள் என்கிறார். தத்துவம் என் கடவுள் என்றும் சொல்கிறார். இவ்வகைக் கூற்றில் உண்மையுண்டு. எந்த தர்க்கத்தை விளக்க முடியும். தர்க்கம் இல்லாமல் முடியாது என்பதைப் போலவே

தர்க்கத்தைக் கடந்தும் மனிதன் வாழ்கிறான் என்பதையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கை என்பது ஒரு தவம். கவிஞனும் ஒரு வகையில் தவம் செய்கிறவன். புலன்களின் வழியே உலகத்தோடு நாம் வாழ்ந்தாலும், புலன்களைக் கடந்த உள்ளியக்கமும் நமக்குத் தேவை. அறிவியலாளனுக்கும் இத்தகைய உள்ளியக்கம் உண்டு. அறிஞர் ஈசுவர மூர்த்திக்குள்ளும் இப்படி உள்ளியக்கத்தை நாம் காண்கிறோம். இந்த அனுபவத்தை அவரால் புரிந்து கொள்ள முடியும்.

4. பிரபஞ்சத்தில் ஓர் ஒழுங்குண்டு என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். வாழ்வின் உள்ளும் இத்தகைய ஒழுங்கு உண்டு என்று அவர் குறிப்பிடுகிறார். வள்ளுவரின் அறத்தைக் கொண்டாடும் ஆசிரியர், மனிதனுக்குள் செயல்படும் இத்தகைய அற உணர்வைத்தான் குறிப்பிடுகிறார் என்று நம்மால் புரிந்து கொள்ள முடியும். இதன் காரணமாகத்தான் பணத்தையும், பதவியையும் பெரிதாகக் கருதுபவரை அவர் சாடுகிறார். இவர்களுக்குள் மனித மாண்புகள் இல்லை. மலினமான கலாச்சாரத்திற்குள்தான் இவர்கள் முடங்கிக் கிடக்கிறார்கள்.

ஆசிரியர் இப்படிச் சொல்வதை நாம் மறுப்பதற்கில்லை. எனினும் நாம் ஆய்வைத் தொடர வேண்டும். பிரபஞ்சத்தில் ஒரு ஒழுங்குண்டு என்று இவர் கூறுகிறார். ஒழுங்குண்டு என்பதைப் போலவே ஒழுங்கின்மையும் பிரபஞ்ச இயக்கத்தின் ஒரு நியதி. பிரபஞ்சம் குறித்த அறிவியல் அறிஞர்கள் இது பற்றி ஆழமாக ஆராய்ந்துள்ளார். "Order and disorder" என்ற ஆங்கில நூலைச் சுமார் 20 ஆண்டுகளுக்கு முன் நான் படித்தேன். Chaos - கேயாஸ் என்று இன்னொரு நூலும் படித்தேன். இவை போல இன்னும் எத்தனையோ நூல்கள் உள்ளன. பிரபஞ்ச இயக்கத்தினுள் ஒழுங்கும் ஒழுங்கின்மையும் உண்டு. ஒன்றில்லாமல் இன்னொன்றில்லை. குழப்பங்களும் இருக்கத்தான் செய்கின்றன. வாழ்வியல் நியதிகளும் இத்தகையவைதான். அறம் என்று ஒன்றை நாம் மதிக்கிறோம். 'மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அறம்' என்று வள்ளுவர் கூறுகிறார். மாசு இல்லாதவனாக எவனும் இல்லை. காமம், வெகுளி முதலியன வள்ளுவர் குறிப்பிடும் மாசுகள். இன்னா செய்யாமை என்பது ஒரு அறம். பொய்மையும் வாய்மை என்று வள்ளுவரே பேசுகிறார். உயிர்க்கொலை இல்லாமல் வாழ்க்கை இல்லை. வன்முறை இல்லாமல் பரிணாமத்தின் வளர்ச்சி

இல்லை. இவை குறித்தெல்லாம் இன்னும் விரிவாக ஆழமாக நாம் பேசவேண்டும்.

மேற்குலகில் புதிய புதிய தத்துவங்கள் கடந்த சில பத்தாண்டுகளில் பேசப்பட்டுள்ளன. இவற்றில் ஒன்று existentialism (தமிழில் : இருத்தலியல்) என்று கூறுவது ஒரு தத்துவம். இதன்பிறகு அமைப்பியல், பின் அமைப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம் இவையெல்லாம் இன்று தமிழுக்கும் வந்து விட்டன. தமிழ் இலக்கியத்திலும் தலித்தியம் என்றும் பெண்ணியம் என்றும் பேசுகிறோம். தமிழ் இலக்கியத் திறனாய்வுகளும் இவ்வகைப் புதிய அணுகுமுறைகளோடு வளர்ச்சி பெற்று வருகின்றன. உண்மை என்பது ஒரு கட்டமைப்பு, புனைவு. அறம் என்பதும் புனைவு. மனிதன் என்பதுகூட ஒரு புனைவு. ஆண்மை, பெண்மை, நீதி, நேர்மை, கலை, இலக்கியம் என்பனவெல்லாம் புனைவுகள், இப்படி நூறு வகையில் இவை பேசப்படுகின்றன. தமிழ் இலக்கியமும் இத்தகைய அணுகுமுறைகளோடு வளர்ந்து கொண்டிருக்கிறது. இவற்றையெல்லாம் ஆசிரியர் கண்டுகொள்ளவில்லை. ஆசிரியருடைய தத்துவப்படிப்பும், தமிழ் இலக்கிய வாசிப்பும் 1970 வரை கூட வளர்ச்சி பெறவில்லை. 80க்குப் பிறகு தமிழில் புதிய வேகம், புதிய பார்வைகள் கூடி வருகின்றன. எனக்கு இவை குறித்தும் வாசிப்போடு விமர்சனங்களும் உண்டு.

இன்றைய தமிழ்ச் சூழல் குறித்து ஆசிரியர் பேசுவதில் நம் கவனம் பதிவது மிகவும் தேவையாக உள்ளது. மலினக் கலாச்சாரம் என்று அழுத்தம் திருத்தமாகப் பேசுகிறார். தமிழனுக்குத் தற்பெருமை இருக்கிற அளவுக்குத் தன்மானம் இல்லை. தமிழிலேயே எல்லாம் இருக்கிறது என்று தன் கண்களையும் மனத்தையும் இறுக்கிக் கொள்கிறான் தமிழன். உலகத்தோடு இவனுக்கு உறவு இல்லை. இவன் வரலாறு கற்கவில்லை. பொருளியல் கற்கவில்லை. தத்துவம் கற்கவில்லை. எதைத்தான் இவன் சரிவரக் கற்றான்? தன்னை இவன் கற்கவில்லை. பணம், பதவிக்கு இவன் அடிமை. ஒரு காலத்தில் மன்னருக்கு அடிமை. படையெடுப்புகளின் போது இவன் மண்டியிட்டான். ஆங்கிலேயனுக்குச் சேவகம் செய்தான். இப்படி எவ்வளவோ சொல்லலாம்.

இன்று அரசியல்வாதிக்கு அடிமை. கட்சிக்கு அடிமை. பெரியாரியம் வளர்ச்சி பெறவில்லை. சைவம் முடங்கிக் கிடக்கிறது. அசலான தமிழியல் ஆய்வுகள் இல்லை. பெரும் பதவிகளில் இருப்பவர்

செருக்கும், சிறுமதியும் கொண்டவராக இருக்கின்றனர். முதலாளிகளுக்குத் தேசப்பற்றில்லை. மொழிப்பற்றில்லை. இயற்கை நாசம் பற்றி இவர்களுக்கு அக்கறையில்லை. அந்நியர்களை இவர்கள் தாராளமாக உள்ளே அனுமதிக்கிறார்கள். இத்தகைய சூழலில் எவை இங்கு வளர்சி பெறும்? யார் இங்கு தன்மானத்தோடு வாழ முடியும்? திராவிட இயக்கம் ஒரு காலத்தில் தமிழனுக்குத் தேவைப்பட்டது. பிராமணர்களே எங்கும் இருந்தார்கள். எல்லாவற்றையும் தம் வசத்தில் வைத்துக் கொண்டிருந்தார்கள். இவர்களை எதிர்ப்பதற்கு திராவிட இயக்கம் தேவைப்பட்டது.

1967க்குப் பிறகு திராவிட இயக்கம் சீர்குலைந்தது. அறிஞர் ஈசுவரமூர்த்தி திராவிட இயக்கத்தின் முதற்காலத் தேவை குறித்துப் பேசவில்லை. தான் சார்ந்திருந்த காங்கிரஸ் இயக்கத்தின் குறைகள் பற்றிப் பேசுவதில்லை. ஜனநாயகம் இங்கு வகைவகையாக சீர்குலைவுக்கு ஆளாகியுள்ளது. சோசலிசம் என்ற சொல் அரசியலமைப்புச் சட்டத்தில் இடம்பெற்றதோடு சரி. நேரு கொஞ்சம் செயல்பட்டார். இப்பொழுது எல்லாமே கைவிடப்பட்டுள்ளன. சோசலிசம் என்று மரியாதையோடு பேசுவதற்கில்லை. அரசியல் சட்டம் இங்கு செயல்படுகிறதா? அதிகாரம் கொடிகட்டிப் பறக்கிறது. பயங்கரவாதத்திற்கு மூல ஊற்றாக இருப்பது அரசதிகாரம். கட்சிகள் இன்று அரசதிகாரத்தோடு ஒத்துழைக்கும் முறையில் மக்கள் மீது அமர்ந்திருக்கின்றன. ஊழல் இன்று நூறு கோடி, ஆயிரம் கோடி என்ற அளவில் பெருகிவிட்டது.

2020ல் இந்தியா உலக வல்லரசுகளில் ஒன்றாகும் எனத் தலைவர்கள் பேசுகிறார்கள். இந்தியா இப்பொழுது இராணுவத்துறையிலும் தொழில்நுட்பத் துறையிலும் பெரும் வளர்ச்சி பெற்றுவருவது உண்மைதான். நூறு கோடி மக்களை வைத்துக் கொண்டு இந்தியா வல்லரசாகக் கனவு காண முடியாது. முப்பது கோடி மக்கள் என்றிருந்தால் ஒருவேளை வல்லரசாகலாம். மீதி 70 கோடி மக்களை என்ன செய்வது? இவர்கள் அனைவருக்கும் உணவு, உடை, இருப்பிடம், வேலை வாய்ப்பு, கல்வி, மருத்துவம் கூடவே சுதந்திரம், சனநாயகம் என்றெல்லாம் கொடுப்பது குறித்து அரசு உறுதி அளிக்கும் என்றால் நாமும் வல்லரசுக் கனவு காணலாம். இப்படிச் செய்ய அரசால் முடியாது. இவர்களையெல்லாம் ஒழிப்பதும் முடியாது. எல்லாவற்றையும் புதியதாக நாம் சிந்திக்கத்தான் வேண்டும். நமக்கான அரசியல், பொருளியல், கல்வி, அரசியலமைப்பு

முதலியவை என்னவாக இருக்க முடியுமென்று நாம் முழுமையாக, முற்றிலும் புதிய அடிப்படைகளில் சிந்திக்கத்தான் வேண்டும். அறிஞர் ஈசுவரமூர்த்தி இதற்கு ஆவன செய்வாரா? இறுதியாக மேலும் சிலவற்றைக் குறிப்பிட்டு இந்த ஆய்வை நிறைவு செய்யலாம்.

அறிஞர் ஈசுவரமூர்த்தி அவர்கள் தமிழில் க.நா.சு வரை குறிப்பிடுகிறார். அவருக்குப் பிறகு வெங்கட்சாமிநாதன், பிரமிள், சுந்தர ராமசாமி, தமிழவன், ராஜ்கௌதமன், எஸ்விஆர், அ.மார்க்ஸ் எனத் திறனாய்வாளர்கள் வரிசை தொடர்கிறது. கவிஞர்கள் என்ற முறையில் பிரமிள், பசுவய்யா, ஞானக்கூத்தன், ஆத்மாநாம், அபி, சிற்பி, புவியரசு, தமிழன்பன் என்று இன்னும் பல கவிஞர்கள். படைப்பாளிகள் என்ற முறையில் புதுமைப்பித்தனுக்குப் பிறகு மௌனி, கு.ப.ரா – இடையில் அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி, ஆதவன், டி.செல்வராஜ், பொன்னீலன் – இவர்களின் பட்டியல் வெகுநீளம். தற்காலத்தில் வண்ணதாசன், வண்ணநிலவன், கலாப்ரியா, ஜெயமோகன், எஸ். ராமகிருஷ்ணன், கோணங்கி, பிரேம்–ரமேஷ், அம்பை இப்படி நூறு படைப்பாளிகளைக் குறிப்பிடலாம்.

இவர்களின் படைப்புகளும் திறனாய்வுகளும் பல்கலைக்கழகத்திற் குள்ளும் கூட செல்லவில்லை. அரசியல்வாதிகளுக்கு இவர்களைப் பற்றித் தெரியாது. ஜெயகாந்தன் போன்ற ஒரு சிலரின் படைப்புகளே ஆங்கிலத்திற்குள் செல்கின்றன. திறனாய்வுத் துறையில் புதிய பார்வைகள். இவர்களின் ஒருசில படைப்புக்களாவது இந்தியத் தரத்தில் உள்ளன. உலகத்தரத்தையும் சிலரால் தொடமுடியும். சாகித்ய அகாதமியின் தேர்வுகள் குறித்து நாம் எவ்வளவோ பேசுவதற்கு இடமுண்டு. ஞானபீடப் பரிசு பெறக்கூடிய தகுதி உள்ளவர்கள் என்று இன்று ஒரு பத்து படைப்பாளிகளையாவது குறிப்பிட முடியும். சுந்தர ராமசாமி, அசோகமித்திரன், லா.ச.ரா, பிரபஞ்சன், என்று தொடங்கி இன்னும் சிலரைஃக குறிப்பிட முடியும். தமிழ் இலக்கியம் உலகத் தரத்தைப் பெறவேண்டும். டி.எஸ்.எலியட் மாதிரி இங்கு ஒரு படைப்பாளி தேவை. டால்ஸ்டாயின் மேதமை தமிழனுக்குத் தேவை.

அரசியல் அரங்கில் ஊழலை ஒழிக்கச் சனநாயகத்தை ஆரோக்கியப் படுத்த, குறைந்தளவு சமத்துவத்தைக் கொண்டுவர ஏதாவது இங்கு நடந்தாக வேண்டும். நாம் ஓய்ந்திருக்க முடியாது. அறிஞர்கள், படைப்பாளிகள் கூடிச்செயல்படுவது பெரிதும்

வரவேற்கத் தகுந்தது. பாரதியைக் குறைத்துப் பேசுவதற்கில்லை. தாகூர் அளவுக்கு அவரையும் நம்மால் மதிக்க முடியும். மேற்கத்திய தத்துவ ஆய்வு முறையை இங்குள்ள சமயங்களுக்கு, தத்துவ ஆய்வுகளுக்கு நாம் பயன்படுத்தத்தான் வேண்டும். சமூகத்தில் பதிந்துள்ள தடைகளை மட்டுமல்லாமல் நம் சிந்தனை மற்றும் மனத்தடைகளையும் உடைத்தாக வேண்டும். அறிஞர் ஈசுவரமூர்த்தி நமக்கு ஒரு முன்னோடி.

மேலும் நம் சிந்தனைக்குறியவை :

1. தாகூர் தன் சமயத்தை கவிஞர்களின் சமயம் என்றார். எதிர்காலத்தில் சமயத்தின் இடத்தை கவிதை நிறைவு செய்யும் என்றார் மேத்யூ அர்னால்டு. உள்உணர்வோடு இயங்கும் பெருங்கவிதை ஒருவகையில் சமயத்தோடு ஒத்தியங்கும். சமயம் என்பதை ஆன்மீகம் என்ற முறையில் பொருள்படுத்த முடியும். நாத்திகனும் ஆத்திகனும் இந்தத் தளத்தில் சந்திக்க முடியும்.

2. கடந்த 300 ஆண்டுகள் மேற்கில் வளர்ச்சி பெற்ற அறிவியல் சார்ந்த தத்துவம் நம்மை சிறிதளவுக்கேனும் தீண்டத்தான் செய்திருக்கிறது. இந்தியாவுக்கு வந்த பாதிரிமார்கள் பிராமணீயத்திற்கு எதிராக மக்கள் மத்தியில் சமயத்தைப் பரப்ப முனைந்த போது, தமிழ் இலக்கியத்தாலும், சமயத்தாலும் கவரப்பட்டார்கள். இங்கிருந்த சமூக அமைப்பு மேற்கத்திய அறிவியல் ஊடுருவலால் தகர்க்கப்பட இயலாத அளவுக்கு இறுகி இருந்தது. அந்நியரின் ஆதிக்கத்திற்கு இது சாதகமாக இருந்தது. விடுதலைக்குப் பிறகும் இந்த சமூக அமைப்பு தகர்க்கப்படவில்லை. இன்னும் நமக்கு இதுதான் பெரும் சிக்கல்.

3. அறிஞர் ஈசுவரமூர்த்தியும் நம் அறிவாளிகளும் சந்தித்துப் பொதுத்திட்டத்தோடு செயல்பட வேண்டிய இடம் இது. Elite Culture – அறிவாளிகள் கலாச்சாரம் இங்கு தேவைதான். இது செக்குலர் ஆகத்தான் இருக்க முடியும். தமிழ்ச் சமூகத்தில், சுதந்திர உணர்வோடு யாருக்கும் தம்மை அடிமைப்படுத்திக் கொள்ளாமல் செயல்படும் அறிவாளிகளை விரல்விட்டு எண்ணிவிடலாம். இவர்களை ஒரு வட்டத்தில் குவித்து இவர்களோடு தான் ஈசுவரமூர்த்தி உரையாட வேண்டும். இச்சகம் பேசுவோர் உறவு இவருக்கு வேண்டாம். இவரது நூல் கவிதை நூல் அல்ல கொஞ்சம் கவித்தவத்தோடு கூடிய கட்டுரை நூல்.

# "கனவுச் சிறை"
# நிறைவு பெற வேண்டிய ஒரு மகா நாவல்

1. எண்பதுகளிலும் அதன் பிறகும் தமிழில் வெளிவரும் மகா நாவல் வரிசையில் இறுதியாக வெளிவந்திருப்பது தேவகாந்தனின் "கனவுச் சிறை" ஐந்து பாகங்கள், 1300 பக்கங்கள். ஐம்பத்துக்கு மேற்பட்ட பாத்திரங்கள். 1981 முதல் 2001 வரையிலான 21 ஆண்டுக் கால அளவில் ஈழத் தமிழ் மக்களின் வாழ்வியல் அவலங்களையும், போராட்டங் களையும் மிக விரிந்த அளவில் படைப்பு நெறி பெரும்பாலும் பிசகாமல் இந்த மகா நாவல் படைக்கப்பட்டிருக்கிறது. இதற்காக தேவகாந்தன் நம் மரியாதைக்குரியவராகிறார்.

நாவல்கள், குறுநாவல்கள், சிறுகதைகள் எனத் தொடர்ந்து அவர் படைத்து வந்துள்ள உச்சமென இந்த நாவலைக் குறிப்பிடலாம்.

ஈழத்தமிழ் மக்களின் போராட்டங்களைச் சித்தரிக்கும் முறையில் அருளரின் "லங்காராணி", சோபா சக்தியின் "கொரில்லா" நாவல்கள் வெளிவந்துள்ளன. புகலிட எழுத்தாளர்கள் உட்பட ஈழத்துப் படைப்பாளிகள் எழுதிய நூற்றுக்கணக்கான சிறுகதைகளும் வெளிவந்துள்ளன.

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தங்களுக்கான அரசியல் உரிமைகளையும், தாயகத்தையும் பெறும் நோக்கில் ஈழத்தமிழ் மக்கள இடைவிடாத போராட்டங்களை நடத்தி வருகின்றனர். இவர்களின் பேரனுபவங்கள் உலக அளவில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. படைப்புக்கள் என்ற வகையில் இன்னும் பல மகா நாவல்களுக்கான செறிவாக கருக்களை இந்தப் பேரனுபவங்கள் கொண்டுள்ளன. ஈழத்தமிழ் மக்களின் இடைவிடாத போராட்டங்கள் வந்து அடைந்துள்ள இன்றைய கட்டத்தில் தேவகாந்தனின் "கனவுச் சிறை" நாவல் வெளிவருவது நம் வரவேற்புக்குரியது.

ஈழத் தமிழகத்தில் தொடர்ந்து செயல்பட்ட எந்த ஒரு போராளிக் குழுவிலும் தேவகாந்தன் இருந்ததாகத் தெரியவில்லை. 1984-இல் அகதியாக அவர் தமிழகத்திற்கு வந்து சேர்ந்தார். 1983 கலவரங்களுக்குப் பிறகு ஈழத் தமிழ் மக்கள் பல இலட்சம் பேர் அகதிகளாக தமிழகத்திற்கும், ஐரோப்பா முதலிய அந்நிய தேசங்களுக்கும் போய்ச் சேர்ந்தனர். வசதி வாய்ப்புள்ளவர்கள்

இப்படித் தாயகத்தை விட்டு வெளியேறிய நிலையில் வசதி வாய்ப்பற்றவர்களும், தாய் மண் மீது மகத்தான நேசம் கொண்டவர்களும் இலங்கையில் தங்கினர். இவர்கள் பட்ட துயரங்களுக்கு அளவு இல்லை. போராளிக் குழுக்களில் இளைஞர்கள் போராடிச் செத்தனர். போராளிக் குழுக்களிடையிலும் கடுமையான மோதல்கள். இறுதியாக இவர்களை எல்லாம் மீறி வளர்ச்சி பெற்ற விடுதலை இயக்கம் ஈழத் தமிழ் மக்களுக்கென தாயக உரிமைகளை மீட்டுத் தர முடியும் என்ற நிலை இன்று நேர்ந்துள்ளது. இவர்களின் தலைமையை இன்று போராளிக் குழுக்கள் பலவும் ஒப்புக் கொள்கிறார்கள்.

மக்களின் சனநாயக உரிமைகளை இவர்கள் மதிக்கவில்லை என்ற ஓயாத குற்றச்சாட்டு ஈழத்தமிழகத்திலும், புலம்பெயர்ந்த தேசங்களிலும் எழுந்தது என்பது உண்மைதான். தமிழகத்திலும் இத்தகைய குரல்கள் எழுந்தன. இவர்கள் பெரிதாகப் பரப்புரை செய்யும் அந்த புனிதமான சனநாயக உரிமைகளை விடுதலை இயக்கம் முழுஅளவில் கடைப்பிடித்திருக்கும் என்றால் தவிர்க்க இயலாமல், இன்றைக்கு விடுதலை இயக்கத்தோடு சமரசம் என்ற முறையில் ஓர் உடன்பாட்டுக்குச் சிங்கள அரசு வந்திருக்கும் என எவரும் சொல்ல முடியாது. வரலாறு இப்படி எத்தனையோ சிக்கல்களோடும், குழப்பங்களோடும் தான் இயங்குகிறது என்ற உண்மையை யாரும் மறுப்பதற்கில்லை.

இலங்கை என்ற ஒரு பிரதேசத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்கள் வாழ்ந்திருந்தனர். இவ்வளவு தொன்மையான வரலாறு சிங்கள மக்களுக்கு இல்லை என்பதனாலேயே, தமிழ் மக்களுக்கு மட்டுமே இந்த தேசம் உரிமையுடையது என்று கருத வேண்டியதில்லை. தமிழ் மக்களும் சிங்களரும் ஒற்றுமையோடு வாழ்ந்த காலங்களும் உண்டு. சிங்கள மக்களை நாகரிகப்படுத்தியதில் தமிழ் மக்களுக்குப் பெரும் பங்கு உண்டு. சிங்கள மக்களின் பவுத்த மதம் மரியாதைக்குரியது என்பதிலும் ஐயமில்லை.

ஐரோப்பியர் வருகையை ஒட்டி இலங்கையும் நவீன காலத்திற்குள் வந்து சேர்கிறது. இந்தக் காலத்தைத் தான் இன்று வரையில் இந்த மக்கள் மத்தியில் வளர்ந்து வரும் முரண்பாடுகளோடு இன்று நாம் எதிர்கொள்கிறோம். இரண்டு இனங்களும் இருபது ஆண்டுகளுக்கு மேலாக மிகக் கடுமையாக மோதிய நிலையில் இன்று ஒரு கட்டத்தை

அடைந்துள்ளன. அவர்களுக்கு இடையில் ஏற்பட இருக்கிற உடன்பாடு எத்தகைய அரசியல், பொருளியல் முதலிய கூறுகளோடு அமையும் என்பதை இப்பொழுதே உறுதியாகச் சொல்வதற்கில்லை. சமரசம் தவிர வேறு வழியில்லை என்பதுதான் இன்றைய யதார்த்தம் என்று தோன்றுகிறது.

உடன்பாடு எத்தகைய கூறுகளை உள்ளடக்கியதாக இருக்கும் என்ற போதிலும், ஒரு தேசம் - இரண்டு இனம் என்பது தான் அடிப்படையாக இருக்க முடியும். இப்படி ஒரு சமரசத்தைத் தான் நாங்களும் இருபது ஆண்டுகளுக்கு மேலாக வற்புறுத்தி வந்தோம் என்று இன்று எவரும் பெருமை பேசுவதற்கும் இடமில்லை. 60,000 மக்களைப் பலி கொடுத்தப் பிறகு தான் இப்படி ஒரு சமரசத்தைத் தவிர வேறுவிதி இல்லை என்ற நிலைப்பாட்டிற்குச் சிங்கள அரசு வந்து சேர்ந்திருக்கிறது.

தனி நாடு என்பதைத் தவிர வேறு இறுதி இலக்கு எங்களுக்கு இல்லை என்று விடுதலைப் போராளிகள் நம்பிக்கையோடும் உறுதியோடும் போராடினர் என்பதிலும் ஐயமில்லை. அடிமைப்பட்ட நாடுகள் விடுதலை பெறுவது என்ற போக்கு இன்றளவும் உலகில் தொடர்கிறது என்பதுவும் உண்மைதான். எனினும் இன்றைய வரலாற்றிலும் வல்லரசுகள் முதலிய ஆதிக்கச் சக்திகள் தங்கள் தேவைக்கு ஒத்த முறையிலான விடுதலை இயக்கங்களைத் தான் ஏற்கின்றன என்பதும் இன்னொரு வரலாற்று உண்மை.

ஆனையிரவு வெற்றிக்குப் பிறகு ஈழத் தமிழகம் உருவாவதற்கென வாய்ப்புகள் பிறகு என்ன ஆயின என்பதை நாம் நன்கு அறிவோம். இந்தியாவுக்கு ஒத்த ஒன்றைத் தான் ஈழத்தமிழகம் பெற முடியும். அமெரிக்காவுக்கும் இது ஏற்றதாக இருக்க வேண்டும். வேறு வழியில்லை. இலங்கை அரசுக்கு இஸ்ரேல், பாகிஸ்தான், சீனா, ரஷ்யா முதலிய நாடுகள் போர்த் தளவாடங்களைத் தொடர்ந்து வழங்கிய போதும், இந்தியாவும் அமெரிக்காவும் சிங்கள இராணுவத்திற்குத் தேவையான ஆலோசனைகள் முதலியவற்றை வழங்கியபோதிலும் சிங்கள அரசு விடுதலைப் போராளிகளை வெற்றி கொள்ள இயலவில்லை என்பது உலக வரலாற்றில் ஒரு அற்புத நிகழ்வு என்றே வரலாற்று ஆசிரியர்கள் மதிப்பீடு செய்வார்கள். இரண்டு இனங்களுக்கு இடையில் உடன்பாடு சாத்தியம் தான் என்று இன்னும் உறுதியாக நாம் நம்புவதற்கும் இல்லை. எனினும் போர்க்களத்தில் இரண்டு இனங்களும் அழிந்து

ஒழிவதைக் காட்டிலும் சமரசம் எல்லா வகையிலும் மேலானது என்பதில் ஐயமில்லை.

நாம் இவ்வளவும் சொல்வதற்கான காரணம் என்ன என்பதை இப்பொழுது குறிப்பிடலாம். நாவலின் இறுதியில் தேவகாந்தன் அவர்களின் நிலைப்பாடு என்ன என்பது தெளிவுபடுகிறது. சென்னையில் நடைபெறும் உலகத் தமிழர் கலாச்சாரப் பேரவையின் இறுதி நாள் பொதுக் குழுவில் கடுமையான விவாதம் நடைபெறுகிறது. தமிழகத்தைச் சேர்ந்த சமரன் முதலியவர்கள் தனிநாடு என்பது தான் இறுதி இலக்காக இருக்க முடியும் என்று வாதாடுகின்றனர். இவற்றுக்கெல்லாம் பதில் சொல்லும் முறையில் ஐரோப்பாவிலிருந்து வந்த ஆனந்தி பதில் கூறுகிறார்.

"ஐரோப்பாவில் புகலிடம் தேடி குடியேறிய நாங்களும், போராளிகளுக்கு ஆயுதங்கள் முதலியவற்றைப் பெற நிதி வழங்கினோம். நாங்கள் இதில் பின்வாங்கவில்லை. போராளிகளுக்கு தேவையான ஒத்துழைப்புகளைத் தந்த பிறகு இன்று நாங்கள் வற்புறுத்துகிறோம். இரண்டு இனங்கள் - ஒரு தேசம் என்பது தான் நமக்கு இலக்காக இருக்க முடியும்."

இது ஆனந்தியின் கருத்து மட்டுமல்ல புகலிடப் போராளிகளின் கருத்தும் இது ஆகும். தமிழகத்தில் இருந்து கொண்டு ஈழத் தமிழ் மக்களுக்கோ, போராளிகளுக்கோ எந்த உதவியும் செய்ய முடியாமல் கைகள் கட்டப்பட்ட நிலையில் வாய்ச் சவடால்களுக்குப் பொருளில்லை. அன்றியும் கலாச்சார இயக்கத்தின் நோக்கமும் வேறாக இருக்க முடியாது. நாவல் இந்தச் செய்தியோடு தான் முடிவு பெறுகிறது. ஆகவே தேவகாந்தனின் பார்வையும் இதுவாகத் தான் இருக்க முடியும். போராளிக் குழுக்களில் தேவகாந்தன் இல்லை என்பதை இவரது நிலைப்பாட்டிற்கு எதிரான விவாதமாக மாற்றுவதற்கும் இடம் இல்லை. ஆனால் இதே கருத்தை 1983 முதலே இவர் கொண்டிருந்தார் என்றும் சொல்வதற்கு இடமில்லை.

இரண்டு இனங்களும் ஒரு தேசத்தில், அவரவர்க்கு ஒத்த உரிமைகளோடு இணைந்து வாழ்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதே ஆசிரியரின் கருத்து அன்று உறுதியாகச் சொல்வதற்கு நாவலுக்குள்ளிருந்து சில சான்றுகளைத் தரலாம்.

2. "கனவுச் சிறை" நாவலை ஒரு மகா நாவல் என நல் மதிப்பீடு செய்வதற்கு தேவகாந்தன் படைத்துள்ள சில அற்புதமானப்

பாத்திரங்களை நாம் சான்றாகச் சொல்ல முடியும். இவர்களில் ஒருவர் சங்கரானந்தத் தேரர். தமிழ் நாவல்கள் முழுவதும் தேடினாலும் இவருக்கு நிகரான இன்னொரு துறவியை நம்மால் சொல்ல முடியாது.

சிங்கள வெறிபிடித்த பவுத்தத் துறவிகளிலிருந்து இவர் முற்றிலும் வேறுபட்டவர். சிங்கள தேசத்தில் இராணுவ உடை தரித்த புத்தரின் பிம்பம் பெருமைக்குரியதாகச் சிங்கள மக்களால் போற்றப்பட்ட சூழலில் அமைதியே உருவான புத்தரின் இன்னொரு வடிவம் சங்கரானந்தர். இலங்கையில் தமிழர்கள் மற்றும் சிங்களரின் வரலாற்று உண்மைகளைத் நன் ஆசிரியர் மூலம் கண்டறிந்தவர் இவர். இவர் மூலம் இலங்கைத் தீவின் தொன்மையான வரலாற்றையும், இரண்டு இனங்களும் நாகரிகத்தில் கொண்டும் கொடுத்தும் நாகரிகத்தில் மேன்மை அடைந்தது பற்றியும் தேவகாந்தன் விரிவாகச் சொல்கிறார். நாவலுக்குள் ஒரு விரிவான வரலாற்று ஆய்வு இடம் பெற்றிருக்கிறது.

வெறி பிடித்த சிங்கள பவுத்த துறவிகளுக்கு எதிராகச் சங்கரானந்தர் செயல்படுகிறார். பவுத்த மடத்திலிருந்து இவர் விலகி ஒற்றைத் தனி உபதேசியாக மறைந்து வாழ்கிறார். தமிழர்க்கும், சிங்களர்க்கும் இடையில் நடைபெற இருந்த மோதல்களைத் தடுக்கிறார். குணானந்தத் தேரர் தொடக்கத்தில் இவரது சீடராயினும், பிறகு இவரிடமிருந்து விலகி, சிங்கள வெறி பிடித்து அலைகிறார். இறுதியில் இவரால் சங்கரானந்தத் தேரர் கொல்லப்படுகிறார்.

தமிழ் மக்களும் சிங்களவரும் ஒத்துரிமை உடையவராய் வாழ்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதை வற்புறுத்துபவரில் முக்கியமான இன்னொருவர் திரவியம். எந்த வகையிலும் குறை சொல்ல முடியாத ஒரு அசலான மனிதர் திரவியம். தொடக்கம் முதல் இறுதிவரை நாவலில் இடம் பெறுகிறான். தமிழரான உதயனைக் காதலித்து அவனைத் திருமணம் செய்து கொண்ட சிங்களப் பெண் சுவர்ணா – 1983 கலவரத்தின் போது சிங்கள வெறியரால் உதயன் கொல்லப்பட்டார். இனித் தன் வாழ்வு தமிழ் மககளோடு தான் என்று சுவர்ணா உதயனின் நண்பர்களோடு வந்து சேர்கிறாள்.

திரவியத்தின் பொறுப்பில் சுவர்ணா விடப்படுகிறாள். இருவருக்கு இடையில் மெல்ல மெல்ல காதல் மலர்ந்து மொக்கு ஆகி

மலராக விரிவடைவதை தேவகாந்தன் சித்தரிக்கும் அழகிற்கு இணை சொல்வதற்கில்லை. திரவியம் கொழும்பு நகரில் பத்திரிக்கை நிருபராகத் தொழில்படுகிறான். இடதுசாரி அறிஞர் அணில் என்பவரோடும், ஜே.வி.பி. இயக்கத்தின் தூண்களில் ஒருவரான நிமல் பெரேரா என்பவரோடும் மாணவனாய் இருந்து அரசியல் அறிவைத் திரவியம் பெறுகிறான். இவனிடம் தான் சங்கரானந்தத் தேரர் இலங்கை வரலாறு பற்றிய தன் ஏட்டுச் சுவடுகளில் எஞ்சியவற்றை விட்டுச் செல்கிறார். சங்கரானந்தத் தேரரைக் கனவிலும் நனவிலும் தனக்குள் தாங்கி அவர் நெறியில் செல்பவன் திரவியம். இரண்டு இனங்களின் ஒற்றுமையில் தான் இந்தத் தேசம் உயிர்ப்பைப் பெறும் என்பதில் பெரும் நம்பிக்கை கொண்டவன் திரவியம். நாவலில் இடம்பெறும் அசலான மனிதர்களில் திரவியம் மிக முக்கியமானவன் என்பதை மீண்டும் ஒருமுறை வற்புறுத்திச் சொல்ல வேண்டும்.

2

சிங்கள வெறியர்களோடு போரிடுவதைத் தவிர வேறு வழி எமக்கில்லை என்ற நிர்பந்தம் ஏற்பட்ட போது, போர் வேண்டாம் அமைதிக்காகப் பாடுபடுவோம் – என்று எவரேனும் சொல்ல முற்பட்டால் அதைத் தவிர தமிழரை அடிமைப்படுத்துவதற்கான வேறு வழியில்லை என்று உறுதியாகச சொல்லி விடலாம். போரில் இன்னொரு கட்டத்தில் இனிப் போர் வேண்டாம் என்ற உடன்பாட்டிற்கு முயறசி செய்யலாம என்ற கருத்து எழுவது தவிர்க்க இயலாதது. இப்படி ஒரு கருத்தும் எதிராளியிடமிருந்து வந்தால் மட்டுமே ஏற்றுக் கொள்வதும் சரியாக இருக்கும். இப்பொழுதும் சிக்கல் திர்ந்து விடும் என்பதற்கு உறுதி இல்லை என்றாலும் அமைதிக்கான ஒரு முயற்சியில் ஈடுபட்டுப் பார்க்கலாம் என்று முன் சொல்வதில் தவறில்லை. தமிழகத்திலும் இப்படித்தான் நடந்திருக்கிறது. "கனவுச் சிறை" நாவல் இப்படி ஒரு வரலாற்றைத் தன் மையத்தில் கொண்டிருக்கவில்லை, கொண்டிருக்க வேண்டும் என்பதை நாம் விரும்புகிறோம்.

"புதியதோர் உலகு செய்வோம்", "கொரில்லா" போன்ற நாவல்களில் இந்த போர்க் காலத்தில் சில பகுதிகளேனும் இடம் பெற்றுள்ளன. ஒருவேளை இந்த நாவல்களைப் படைத்தவர்கள் போராளிக் குழுக்களில் இடம் பெற்றவர்களாக இருந்திருக்கக் கூடும். தேவகாந்தனுக்கு இப்படி அனுபவம் இல்லை என்றாலும் இந்த மையத்திலிருந்து கருக் கொண்டெழும் நாவல்கள் எதிர்காலத்தில்

நமக்கு கிடைக்கலாம். 2-ஆம் உலகப் போர் அனுவங்களை உட்கொண்ட சில இரஷ்ய நாவல்களை நாம் இங்கு நினைவு கொள்ளலாம். இவ்வகைப் பதிவு "கனவுச் சிறை" நாவலில் இல்லை என்பதை ஏற்றுக் கொண்டு நாவலின் வேறு சில முக்கியக் கூறுகளை இங்குத் தொகுத்துக் கொள்ளலாம்.

தாய் நிலத்தின் மீது, தாய் மண்ணின் மீது ஈழத் தமிழ் மக்கள் கொண்டிருக்கிற பேராவல் நாவலில் பல்வேறு இடங்களில், பல்வேறு மனிதர்கள் மூலம் கொந்தளிப்பதை வாசிக்கும் பொழுது நமக்குள் அதிர்ந்து போகிறோம். பாரதியிடம் பாரதி தேவி ஏற்படுத்திய பெரும் காட்சியையும் அதிர்வலைகளையும் நமக்குள் சில கணங்களேனும் நினைவு கூறலாம். அதே போல தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் இன்றைய சூழலில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடிகளை நினைத்துப் பார்க்கும் பொழுது நமக்குள் குமுறுகிறோம், கொந்தளிக்கிறோம். ஈழத் தமிழ் மக்களின் நெஞ்சக் குமுறலோடு நாமும் இணைகிறோம்.

"கனவுச் சிறை" நாவல் இந்த அதிர்வலைகளை நமக்குள் தொடர்ந்து ஏற்படுத்துவதன் மூலம் நம்மை உருவாக்கிய வேர்களை, மண்ணை, மரபை நினைத்துக் கொளகிறோம்.

தாய் மண் மீது, ஈழத் தமிழகத்தின் மீது மனிதன் கொண்டுள்ள பற்றுக்குச் சான்று எனத் தேடும் பொழுது சுந்தரலிங்கத்தார் நமக்குள் எழுந்து நம்மை ஆக்ரமித்துக் கொள்கிறார். மரியாதைக்குரிய செல்வநாயகம் அவர்களின் தமிழியக்கத்தில் ஊறி வளர்ந்தவர் திலீபனின் மரணம் அவரைப் பிளந்தெரிகிறது. சத்யாகிரகம் தோற்றுவிட்டதை எண்ணி அவர் புலம்புகிறார். அவரைப் பொறுத்தவரை இனிச் செல்வதற்குத் திசையில்லை. தன் மகன் சுதனும் திசை தவறிப் போய்விட்டான். தமிழகத்திற்குப் பயணமாகிறார். அகதிகளுக்கு உதவி செய்கிறார். அவர் இதயத்தின் வேதனை தீர்வதாக இல்லை. ஈழத்திற்கு இனி எந்த முகத்தோடு செல்வேன். என் மக்களை எப்படிப் பார்ப்பேன் என்று நினைத்து நினைத்து இதய நோய்க்கு ஆளாகி அநாதையாய் இறக்கிறார். இயக்கம் தோல்வியடைந்த பிறகு தன்னைத் தானே தொலைத்து விட்டு மீண்டு தன்னைப் பெற முடியாமல் தவிக்கிற அற்புத மனிதர் சுந்தரலிங்கம்.

நாவல் நெடுகிலும் ஈழத்தமிழ் மண் குறித்து எத்தனை வகை வகையான வர்ணனைகள்; காலைக் கதிரவன், மாலைக் கதிரவன், வானத்தில் மாறி மாறி எழும் வண்ணக் கலவைகள், பறவைகள்,

உயிரினங்கள், நிலங்கள், நீர்நிலைகள், உணவு வகைகள் பற்றி எத்தனை வர்ணனைகள் கடல் கடந்து சென்ற போதிலும் இந்த நிலக்காட்சிகளை யாரால் மறக்க முடியும்! இளமைக் காலம் தொடங்கி எத்தனையோ உறவுகள் மூலம் தாம் பெற்ற ஆளுமையை, உறவினர்களை, நண்பர்களை, தோழிகளை எப்படி மறக்க முடியும். இவர்களிலும் ஒரு சிலர் தங்கள் கண்ணுக்கு முன்னே காணாமல் போய்விடுகிறார்கள். இந்தத் துயரம் எப்பொழுது தீரும்?

மண்ணையும், இளமைக் காலத்து உறவுகளையும் நினைக்கும் பொழுதெல்லாம் எவர் நெஞ்சிலும் கவிதைகள் பொங்குவதில் குறைவில்லை. ராகினி கவிதை எழுதினாள், காணாமல் போனாள். அரசி கவிதை எழுதுகிறாள். தூய மனத்தோடு தொடர்ந்து வாழ்கிறாள். இன்னும் சிலர் கவிதை எழுதவில்லை எனினும் கவிதை உள்ளத்தோடு வாழ்கிறார்கள். யோகேஷ் வரனுக்கும் கடலுக்கும் உள்ள உறவை ஒரு காவியத்தில் தான் சொல்ல முடியும். இவன் கடலின் குழந்தை. இறுதியில் கடல் என்னும் இவனின் தாய் இவனைத் தனக்குள் அரவணைத்துக் கொள்கிறாள். தியாகுக்கு அன்பு என்னும் கவிதையைத் தவிர வேறு என்ன தெரியும். இவனுக்குள்ளும் கவிதையாய் எழுந்த சிந்தாமணியை இவன் இழக்க நேருகிறது. இளமைக் காலத்தில் இவனோடு பழகிய சுதனை, ராஜியை மீண்டும் ஒருமுறை காண்பதற்காக அப்பாவியான அந்தத் தியாகு கடலில் நீந்திச் செல்கிறான். ராஜியைக் காண்கிறான். சுதன் இவனைக் காண வரவில்லை. சுதன் இவனை பொருட்படுத்தவில்லை என்ற கவலையோடு தாயகம் செல்கிறான். திரும்பும் பொழுது இவன் கையில் குழந்தை. தன் தாயகம் விட்டுச் சென்று அகதியாகி யார் யாரிடமோ அகப்பட்டுத் தன்னை இழந்து தாய்லாந்தில் பெற்றுக் கொண்ட நேசமலரின் குழந்தையோடு தாயகம் திரும்புகிறான். நைனாத் தீவுக்கு வந்து சேர்ந்த பொழுது இவனைத் தெரிந்தவர்கள் என்று எவரும் இல்லை.

ராஜியைப் பொருத்தவரை மண்ணின் நேசம் முழு அளவில் அவளை ஆக்கிரமித்திருந்தது. சுதன் தனக்குச் சொல்லாமல் தன்னை விட்டுப் பிரிந்து இயக்கத்தில் சேர்ந்து கொண்ட போதிலும் அதற்காக இவனை ராஜி மதித்தாள். இவனைத் தேடிச் சென்னைக்கு வந்தாள். தனக்குக் காதலனாக இருந்த சுதன் இப்பொழுது மாறிவிட்டான். பணத்திற்கும், ஆடம்பரத்திற்கும் சுதன் அடிமையாகி விட்டான். ஜெர்மனிக்கு இவனோடு சென்று மனைவி என வாழ்வதில் ராஜிக்கு

அறவே விருப்பமில்லை. தன் மண்ணை மறந்து ராஜியால் வாழ முடியாது. நாவலின் இறுதியில் அவனோடு அவள் ஐரோப்பாவிற்குச் செல்லும் பொழுதும் இல்லற வாழ்க்கை அவளுக்கு நோக்கமாக இல்லை. அங்கிருக்கிற தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் மண்ணை, தமிழ் மண்ணின் கலாச்சார வேர்களைக் கற்றுத் தந்து அந்தக் குழந்தைகளை தமிழ்க் குழந்தைகளாக வளர்த்தெடுக்க வேண்டும் என்பது ராஜியின் நோக்கம். சுதனும் கூட இறுதியில் தனக்குள் ஒரு மாற்றத்தைக் கொண்டிருந்தான். தமிழ்க் கலாசசாரம் பேரவையில் சந்திரமோகனோடு இணைந்து அவன் பணியாற்றினான். தமிழும் கலாச்சாரமும் இல்லாமல் இவனுக்கும் வாழ்வில்லை.

நாவலின் மையத்துக்கு அருகில் வரக்கூடிய மண் மீது பற்று என்பது நாவலில் நம்மைப் பெரிதும் கவர்கிற ஒரு கூறு என்பதில் ஐயமில்லை. ஒரு மகா நாவலுக்கான ஆற்றல் தருவது இந்தக் கூறு என்பது மட்டுமல்ல. யோகேசுவரன், தியாகு சுந்தரலிங்கனார், அரசி முதலியவர்கள் ஒரு மகா நாவலில் இடம் பெறத்தக்க அற்புதமான மனிதர்கள். இவர்களுக்குள் கவிதை மட்டுமல்லாமல் காவியத்தின் சில பரிமாணங்களும் உள்ளூர இயங்குகின்றன. காவலும் கூட ஒரு கவிதையாக, காவியமாக, இத்தகைய மனிதர்கள் மூலம் பரிமாணம் கொள்ள இயலும்.

நாவலின் மையத்திற்கு அருகில் வரக்கூடிய இன்னுமொரு கூறு, நெருக்கடிகள் மிகுந்த சமூகச் சூழல் அல்லது போர்ச் சூழலில் மனிதர்கள் எவ்வாறெல்லாம் தம் மண்ணை இழந்து, வாழ்வை இழந்து மரியாதை கெட்டு வாழ வேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாகிறார்கள் என்பது ஆகும். வன்னிப் பகுதியில் ஆயிரமாயிரம் குடும்பங்கள் மழையிலும், வெய்யிலிலும், பசியிலும், பட்டினியிலும் மனிதத் தரத்திலிருந்து கீழிறங்கி வாழ வேண்டியிருப்பதை ஆசிரியர் சித்தரிக்கிறார். அரசி சந்திக்கும் ஒரு கிழவி துணைக்கு யாரும் இன்றி தன்னந்தனியவளாய் வாழ்ந்து கொண்டிருக்கிறாள். தன் இடத்திலுள்ள நகைகளையோ, பணத்தையோ யாரேனும் பறித்துக் கொள்வார்கள் என்று அஞ்சி ஒவ்வொரு நாள் இரவிலும் தன் வீட்டைச் சுற்றியுள்ள வெற்றிடத்தில் அங்கங்கே குழிகளில் மாற்றி மாற்றி வைத்துக் கொண்டிருக்கிறாள்.

சென்னையில் வாழ்கின்ற விசுவலிங்கத்தின் குடும்பக் கதை வாசகர் நெஞ்சத்திலிருந்து என்றும் விலகாத கதை.

விசுவலிங்கத்திற்குச் சொத்து என்று ஏதுமில்லை. ஈழத்தில் வாழ்கிற போதே கொழும்பு நகரத்தில் ஊழியராகப் பணிபுரிந்தவர். அவருக்கு ஆறு குழந்தைகள். அவர் மனைவி சரசுவதி கருக்கொண்ட பொழுது இன்னும் இந்தக் கிழவருக்குக் காமம் தீரவில்லையா என்று கேலி பேசுகிறாள். அன்றிலிருந்து விசுவலிங்கம் இரவு வரும் பொழுது தன் படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு மாடிக்குப் போய் விடுகிறார். வீட்டில் அவருக்கு மரியாதையில்லை. பெண் மக்கள் விருப்பம் போல நகரத்தில் சுற்றித் திரிகிறார்கள். காலையில் சென்றால் அகதிகளுக்கு ஏதாவது ஒரு உதவி செய்து அவர்கள் தரும் காசைக் கொண்டு வயிற்றை அரைகுறையாக நிரப்பிக் கொண்டு முன் இரவில் திரும்பி வருகிறார். வீட்டில் யாரோடும் அவர் பேசவில்லை. இந்த எளிய மனிதர் தான் மகேசுவரியின் வேண்டுகோளை ஏற்று பம்பாய்க்குச் சென்று ராஜேந்திரனைப் பார்த்து வருகிறார். அவன் மனத்தில் இறக்கம் வரச் செய்கிறார். இன்னொரு சமயம் அசாமுக்குச் சென்று தன் உயிருக்கு ஆபத்தான சூழலில் அம்பாவை அழைத்து வரச் செல்கிறார். வியக்கத்தக்க முறையில் சரசுவதியோடு மீண்டும் அவர் ஒரே படுக்கையில் படுக்கும் நிலை ஏற்படுகிறது. தேவகாந்தன் எந்த வயதிலும் ஆண், பெண் உடலுறவின் தேவையை அழகாகச் சொல்கிறார். நாவலில் இது ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

திருமணம் முடிந்து மூன்று மாத அளவில் கணவனை இழந்த அரசிக்கு ஆண் துணை தேவை. இறுதியில் அவள் திரவியத்தோடு இணைகிறாள். இந்த அம்சம் குறித்து இன்னும் சிறிது சொல்ல வேண்டும். ராஜியை உள்ளார்ந்த பெரும் வேட்கையோடு நேசிக்கிறான் யோகேசுவரன். விடுதலை இயக்கத்தைச் சேர்ந்தவர்களை இந்தியாவுக்கும், ஈழத்திற்கும் இடையில் எந்த ஆபத்துக்கும் அஞ்சாமல் கடலில் படகைக் கடத்தும் மாவீரன் யோகேசுவரன் கடலே அவனுக்குத் தாய். இயக்கத்தவருக்கு இவன் இப்படி எல்லாம் ஓயாது உண்மையாக உழைத்தபோதிலும் போராளி இயக்கத்தில் இவன் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. இதுபற்றி அவனுக்கு வருத்தமுண்டு. குழந்தைத் தனத்தை இழக்காத இந்த வீரனின் நேசத்தை ராஜி ஏற்றுக் கொள்கிறான். மகாபலிபுரத்திற்கு அவளாகவே அவனை அழைத்துச் சென்று இரவில் ஒரு விடுதியில் தங்கி அவனுக்குத் தன்னைத் தருகிறாள். இப்பொழுது உனக்கு நிறைவு தானே என்று கேட்கிறாள் ராஜி. “மோகமுள்” நாவலில்

இதற்குத்தானா? என்று யமுனா, பாபுவைக் கேட்கிற காட்சி நமக்குள் வந்து போகிறது.

யோகேசுவரனை ராஜி மறக்கவே இல்லை. பாலியல் உறவு பற்றிச் சொல்லும் ஆசிரியர், நாவலில் இவர்கள் மீண்டும் சந்திக்கவில்லை. இப்படி இவர்கள் உடம்பின் உபாதையைத் தீர்த்துக் கொண்டார்கள் என்பது பற்றி ஆசிரியர் எப்படிச் சிந்திக்காமல் இருக்க முடியும். உனக்கு நிறைவுதானா? என்று ராஜி கேட்கும் பொழுது தனக்கு விருப்பம் இல்லை என்பது போல ராஜி சொல்வதாக நாம் எடுத்துக் கொள்ள முடியுமா? இந்த இடத்தில் ஆசிரியர் இன்னும் நிதானமாக இயங்கி இருக்க வேண்டும்.

நாவலின் இறுதியில் சுதனோடு ஐரோப்பியாவிற்குச் செல்ல ராஜி உடன்படுகிறாள். சுதனுக்கு இவள் மனைவி என்ற போதிலும் குடும்பம் நடத்துவதற்காக ராஜி செல்வதாக இல்லை. இப்பொழுது அவர்கள் நாற்பது வயதைக் கடந்து விட்டார்கள். விசுவலிங்கத்தைப் பொறுத்தவரை நாற்பது வயதை எப்பொழுதோ கடந்து விட்டவர். அவருக்கு இன்னும் உணர்வு வேட்கை இருக்கிறது. ராஜிக்கோ, சுதனுக்கோ இல்லை என்று நாம் எடுத்துக் கொள்ள முடியுமா? வாழ்வியல் சிக்கலை எதிர்கொள்ள ஆசிரியர் ஏன் தயங்க வேண்டும். இப்படிச் சொல்வதன் மூலம் ராஜியை புனிதவதி ஆக்கிவிட முடியுமா?

மண்ணில் உள்ள வேர்களை இழந்த பிறகு அகதிகளாகித் தமிழகத்தில் பல முகாம்களில் எத்தனையோ வசதிக் குறைவுகளைத் தாங்கிக் கொண்டு ஈழ மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ராஜி இவர்களுக்கெல்லாம் ஓடி ஓடி உதவி செய்கிறாள். முகாமில் வாழும் மக்களின் அவலம் குறித்து வெளியிலிருந்து பார்க்கிற பார்வை தான் நாவலில் இடம் பெறுகிறது. உள்ளிருந்து பார்க்கும் பார்வை மூலம் மனித அவலங்களை விரிவாகவும், உணர்ச்சிகரமாகவும் சொல்ல முடியும். இந்த வாய்ப்பை ஆசிரியர் தவறவிடுகிறார். ஐரோப்பாவிற்கும், அகதிகளாய் சில இலட்சம் மக்கள் சென்றிருக்கிறார்கள். நேசமலர் போலச் சென்ற இடமெல்லாம் வாழ்விலிருந்து துரத்தப்படும் பெண்களும் நாவலில் இடம் பெறுகிறார்கள். விமானப் பயணத்திற்காகக் கற்பையும் இழக்க நேர்கிறது.

சென்னையில் வந்து தங்கியிருக்கும் நீதிபதி ராஜநாயகம் பற்றிக்

குறிப்பாகச் சொல்ல வேண்டும். இவரது குடும்பத்தில் ஒரு பெண், இராணுவத்தால் பாலியல் வல்லுறவுக்கு ஆட்பட்டவள். இவர் குடும்பத்தில் இன்னொரு பெண் போராளி இயக்கத்தில் சேர்ந்து விடுகிறாள். சோகம் சுமந்தவராய் ராஜநாயகம் சென்னையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். ராஜி போன்றவர்களைப் பாசத்தோடு ஆதரிக்கிறார். பலருக்கு இவரது இல்லம் இடம் தருகிறது. ராஜீவ்காந்தி கொலை வழக்கில் தண்டனை பெற்றவர்களுக்காக அடிக்கடி இலண்டன் சென்று வருகிறார். நிதானம் தவறாதவர் எனினும் அவருக்குள் சோகப் புயல் அலை வீசிக் கொண்டிருக்கிறது. தன் உணர்வுக் கொந்தளிப்புக்களை இயல்பாகவே பின் - நவீனத்துவப் போக்கில் ஷீலா போன்ற கதைகளை எழுதுகிறார். பெருமைக்குரிய நீதிபதியும் இப்படித் தன்னை இழந்து அவலம் சுமந்து வாழ வேண்டியிருக்கிறது. இப்படி இன்னும் பல குடும்பங்கள் வந்த இடத்தில் தங்கள் சோகங்களை மறந்து வெட்டி ஆர்பாட்டத்தில் திரியும் ஷீலா போன்றவர்களும் நாவலில் இடம் பெறுகிறார்கள். ஐரோப்பாவிற்குச் சென்றவர்களிலும் ஒரு பகுதியினர் தம் தாயத்தைப் பற்றிய நினைவு அற்றுத் தமக்குத் தாமே அந்நியமானவர்கள். மனித வாழ்வின் மேன்மையை இவர்கள் எந்தப் புள்ளியிலாவது சந்திப்பதற்கு வாய்ப்பு இருக்க முடியாது.

சுந்தரலிங்கத்தின் மனைவி வாலாம்பிகையை நினைக்கும் பொழுது நம் நெஞ்சம் குமுறுகிறது. தமிழகத்தில் இதய நோயால் கணவன் இறந்த செய்தி வாலாம்பிகைக்குத் தெரியாது. சென்றவர் சில ஆண்டுகள் கழிந்த போதிலும் அவரிடமிருந்து எந்தச் செய்தியும் இல்லை. சுதனை ஏற்கனவே இந்தத் தாய் இழந்து விட்டாள். தன் மகள் அரசி கணவனை இழந்து தன்னோடு வாழ்ந்து கொண்டிருக்கிறாள். கணவனைத் தேடி இந்தத் தாய் தமிழகம் செல்கிறாள். எங்கெங்கோ தேடிப் பிறகு தன் கணவன் முன்பே இறந்த செய்தியைக் கேள்விப்படுகிறாள். இப்படி ஒரு சோகம் எந்தப் பெண்ணுக்கும் நேர்ந்திருக்கக் கூடாது. அப்புறம் வாலாம்பிகை சென்னையில் தங்க விரும்பவில்லை. தன் தாயகத்திற்குத் திரும்புகிறாள்.

சமூக நெருக்கடிகள் எல்லாக் காலத்திலும் சில வடிவங்களில் இருக்கத்தான் செய்கின்றன. போர்க் காலத்தில் நெருக்கடிகளின் கொடூரம் பல மடங்கு அதிகரிக்கிறது. மனித வாழ்வு சீரழிவுகளுக்கும், சித்திரவதைகளுக்கும், சிதைவுகளுக்கும்

உளளாக்குகிறது. வாழ்வு சிலரை மனிதத் தரத்திற்குக் கீழிறக்கினாலும், சிலர் மனிதத் தரத்திலிருந்து தாழுவதில்லை. எந்த ஒரு நாவலுக்கும் இது ஒரு முக்கியமான கருப்பொருள் என்பதில் ஐயமில்லை.

3

"கனவுச் சிறை" நாவலில் இடம்பெறும் கதையின் குவி மையத்திற்கு இப்பொழுது வந்து சேருகிறோம். இந்த மையத்தில் தான் மகேசுவரி, ராஜி, ராஜேந்திரன், சுதன் ஆகியவர்கள் ஒன்று சேர்கின்றனர். கதை என்பதையும், நாவல் என்பதையும் இங்கு தான் வேறுபடுத்திப் பார்ப்பதற்கான வாய்ப்பும் நமக்குக் கிடைக்கிறது. மகேசுவரி கனடாவிலிருந்து சென்னைக்கு வருகிறார். ராஜியை எப்படியாவது சுதனோடு இணைத்துவிட வேண்டும். ராஜேந்திரனும் தன் தாய் மகேசுவரியை இப்பொழுது தான் சந்திக்கிறான். ராஜியைப் பொருத்தவரை ஒரு துறவி போல வாழ்ந்து கொண்டிருக்கிறாள். முகாமில் ஏற்பட்ட அவதூறு காரணமாக இப்பொழுது அவள் முகாமுக்கும் செல்வதில்லை. முகாமில் ஏற்பட்ட சிக்கலை அதன் நேர்முகத்தில் ராஜி சந்திக்காமல் வெறுமனே சென்னையில் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கிறாள். மீண்டும் சுதனைத் திருமணம் செய்து கொள்வதில அவளுக்குச் சிறிதளவும் விருப்பமில்லை. ஆனால் மகேசுவரி பிடிவாதமாயிருக்கிறாள். தாய் என்ற முறையிலும் தன் கடமையைச் செய்து முடிக்க அவள் விரும்புகிறாள்.

சுதனைப் பொறுத்தவரை ராஜி விரும்பினால் அவளை மணந்து கொள்ளலாம். ஏற்கனவே அவன் பல தவறுகளைச் செய்து விட்டான். ராஜிக்குத் தெரிவிக்காமல் அவன் பலவற்றைச் செய்தான். இயக்கத்தில் சேர்ந்து வங்கியில் கொள்ளையடித்தான். இயக்கத்திலிருந்து விலகியதோடு, கொள்ளையடித்த பணத்தை வைத்து ஆடம்பரமாக வாழ்ந்தான். உடன் செல்ல ராஜி மறுத்தவுடன் ஷீலாவை அழைத்துக் கொண்டு சென்றான். ஷீலாவோடு அவன் தொடர்ந்து வாழவில்லை. அவளும் சம்பாதிக்கிறாள் சுதனின் கட்டுப்பாட்டை அவள் மீறுகிறாள். அவனை விட்டுப் பிரிந்து சென்ற ஷீலா எங்கெங்கோ இருந்து விட்டு இறுதியில் ஒரு அர்ஜீனியனோடு வாழ்வதாக அறிவிக்கிறாள். இத்தகைய ஒருவனை ராஜியால் ஏற்றுக் கொள்ள இயலாது.

தன் தாயைச் சந்திப்பதற்காக ராஜேந்திரன் மும்பையிலிருந்து வருகிறான். தனக்குச் சொந்தமான நிலத்தை மகேசுவரி விற்று அந்தத் தொகையைக் கொண்டு இராஜேந்திரனை வெளிநாட்டுக்கு அனுப்பினாள். அதன் பிறகு மகேசுவரியோடு அவன் தொடர்பு கொள்ளவேயில்லை. மும்பையில் தங்கி அகதிகளை அயல்நாடுகளுக்குக் கடத்துகின்ற தொழிலை மேற்கொண்டான். ஊழலும் பொய்யும் நிறைந்த தொழில் இது. நிறையவே சம்பாதித்தான். இப்படிக் குணம் திரிந்தவன் தான் ஒரு இரவு விடுதியில் அசாமியப் பெண்ணைச் சந்திக்கிறான். அவள் கண்ணீர்க் கதை கேட்டு மனமிறங்கி அவளை மணந்து கொள்கிறான். இந்தச் செய்தி தன் தாய்க்கோ மற்றவர்களுக்கோ தெரியாது. இந்த நிலையில் தான் ராஜேந்திரன் சென்னைக்கு வந்து தன் சகோதரி ராஜியையும், தன் தாய் மகேசுவரியையும் சந்திக்கிறான்.

ராஜேந்திரனை மகேசுவரி கடுமையாகக் காய்கிறாள். கணவன் இழந்த பிறகு குடும்ப நிர்வாகத்தை முழுமையாக மேற்கொண்டவள் மகேசுவரி. தன் மகனுக்காக நிலத்தை விற்றாள். ராஜேந்திரன் இப்படி நன்றி கெட்டவனான். தாயின் கோபம் கண்டு அவள் விருப்பத்திற்கு ராஜேந்திரன் உடன்படுகிறான். அம்பாவை குழந்தையோடு அசாமிற்குக் அனுப்பி விட வேண்டும். அம்பாவை தனக்கு மருமகள் என அவளால் ஏற்க முடியாது.

மகேசுவரி மூர்க்கம் பிடித்தவள் மகன் தன் சொல்லைக் கேட்டாக வேண்டும். இல்லை என்றால் அவள் எதுவும் செய்வாள். இவளுக்குத் தன் சாதி முக்கியம். இவள் உயர் சாதிக்காரி. அசாமியப் பெண் தன் குடும்பத்தில் உறுப்பினராக முடியாது. அவள் குழந்தை தனக்கு வாரிசாக முடியாது. ராஜியிடம் இப்படி மூர்க்கத்தனமாக மகேசுவரியால் பேச முடியாது. ஏற்கனவே கமலா, ராஜநாயகம் முதலியவர்கள் இவள் திருமணம் செய்து கொள்ளாமல் எப்படி வாழப் போகிறாள் என்று ஓயாது இவளோடு விவாதித்திருக்கிறார்கள். இவளுக்குச் சென்னையிலும் வேலையில்லை. அகதியாக வந்தவள் தன் அளவில் நிறுத்திக் கொள்ள வேண்டும். அகதிகள் அரசியல் முதலிய நடவடிக்கைகளில் ஈடுபடுவதை அரசு ஒப்புக் கொள்ளாது. அகதிகளை எப்பொழுதும் அரசு கண்காணிக்கிறது. தமிழ்நாட்டில் இத்தகைய கண்காணிப்பு அண்மைக் காலத்தில் தீவிரப்பட்டிருக்கிறது. ஈழத்திற்கு இவள் திரும்பிச் செல்வதும் சாத்தியமில்லை. எந்தப் போராளிக் குழுவிலும்

சேர்வதற்கான மனநிலை இவளுக்கு இல்லை. ஐரோப்பாவுக்குச் சென்றால், தமிழ்க் குழந்தைகளுக்கு மத்தியில் பணிபுரிய முடியும். சுதனும் அவன் நண்பர்களும் தன்னோடு ஒத்துழைப்பார்கள். இல்லற வாழ்க்கை என்பது ராஜிக்கு நோக்கமில்லை. இந்த நிலையில் சுதனோடு செல்ல உடன்படுகிறாள். மகேசுவரியைப் பொறுத்தவரை அவளது நோக்கம் நிறைவேறுகிறது. ராஜேந்திரனோடு கனடா திரும்புகிறாள். சுதனும் இப்பொழுது மாறியிருக்கிறான். அவனோடு செல்வதில் சிக்கலில்லை.

கதையின் குவி மையத்தில் அதுவரையிலான சிக்கல்கள் தீவிரப்பட்டு உச்சநிலை அடைந்து பிறகு ஓரளவுக்குத் தீர்கின்றன. மகேசுவரி என்ற தாய்க்கு மக்கள் கட்டுப்படுகிறார்கள். இவளது தாய்மைக்குள் ஈழத்து உயர்சாதிக்குரிய மூர்க்கத்தனம் குடிகொண்டிருக்கிறது. எங்கேயோ தொடங்கிய இந்தக் கதை கடைசியில் ஒரு குடும்பத்தின் கதை என்றாகி விடுகிறது. மகேசுவரியைப் பொறுத்தவரை தேசம், விடுதலை பற்றி எல்லாம் அக்கறை இல்லை. போர்ச் சூழலில் சிதைவுபட்டதன் குடும்பத்தைத் திரும்பவும் தன் கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வருகிறாள். பெண்ணுக்குத் திருமணம் மிக முக்கியம். சாதியைப் போலவே திருமணமும் முக்கியம். வேறு வகையில் மகேசுவரியால் சிந்திக்க முடியாது. ராஜேந்திரனுக்குத் தன் சாதிப் பெண்ணை மணமுடித்து வைக்க வேண்டும். அம்பாவை அவன் முற்றாக மறந்து விடவேண்டும். இதற்காகத்தான் அவனைக் கனடாவுக்கு அழைத்துச் செல்கிறாள். சுதனுக்கும் ராஜிக்கும் முன்பே திருமணம் பத்திரப் பதிவு நடந்து முடிகிறது. அது இப்பொழுது நிறைவு பெறுகிறது. மகேசுவரிக்கு இது போதும். இவர்களை பற்றி இவளுக்கு இதற்குமேல் அக்கறை இல்லை. அவர்களைத் தெரிந்து கொள்ளவும் விருப்பமில்லை.

இந்தக் கதைப் பின்னலை இப்பொழுது 2 மறு ஆய்வுக்கு உட்படுத்திப் பார்க்கலாம். பம்பாய்க்குச் சென்று தன் தாய் முதலியவர்களை அறவே மறந்துவிட்டு கடத்தல் போன்றதொரு தொழிலில் ஈடுபட்ட ராஜேந்திரன் தனக்குள் சீர் கெட்டவன், அன்பற்றவன், பலரை ஏமாற்றுவதற்கும் பழகிக் கொண்டவன். இவனுக்குள்ளிருந்து எப்படி இரக்கம் சுரக்கும். இரவு விடுதியில் சந்தித்த பெண்ணை எப்படி இவன் தன்னோடு கூட்டி வைத்துக் கொள்வான். இவனுக்குள் மனமாற்றம் எப்படி நிகழ முடியும். இதன்

பிறகு கடத்தல் தொழிலைக் கைவிட்டு விட்டானா? தன் தாயையும் சகோதரியையும் இவனாகவா தேடி வந்தான்? இவனைச் சந்தித்து விசுவலிங்கம் பேசிய பொழுது எப்படி இவன் தனக்குள் உடைய முடியும்? ராஜேந்திரன் மனத்திற்குள் மிகப்பெரிய அளவில் போராட்டம் நடந்திருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் மனம் மாற முடியாது. மனம் மாறினான் என்று வைத்துக் கொண்டாலும் தாயின் சொல் கேட்டு அம்பாவையும், குழந்தையையும் எப்படி இவனால் உதற முடியும்.

இதன் காரணமாகத்தான் இதைக் கதை என்று நாம் சொல்கிறோம். எவனொருவனுக்குள்ளும் மனமாற்றத்திற்கு வாய்ப்பு உண்டு. தன் மையத்திற்குள், ஒரு சூழலுக்குள் அகப்பட்டு சிக்கித் தடுமாறி மேல் ஏறமுடியாமல் தவித்துப் பிறகு தன்னை உடைத்துக் கொண்டால் ஒழிய மனமாற்றம் நிகழ்வது சாத்தியமில்லை. இந்தச் சிக்கலை நாவல் என்ற கலை சொல்ல வேண்டும். இதற்காகத் தான் நாவல் என்ற படைப்பு தேவைப்படுகிறது. மனிதனுக்குள் நடைபெறும் உள்ளியக்கத்தை நாவல் சொல்வதன் மூலம் எந்த ஒரு மனிதனையும் புரிந்து கொள்ளக்கூடிய அறிவை நாவல் நமக்கு வழங்குகிறது. கதை முக்கியம் என்றாலும், கதையை விட மனிதனின் உள்ளியக்கத்தினுள் செய்யும் பயணம் முக்கியமானது.

இப்பொழுது ராஜியின் கதைக்கு வருவோம். ராஜி தன் பாதையை முற்றாக மாற்றிக் கொள்வதற்கான அவளது உள்ளியக்கம் குறித்து நம்மால் எதுவும் அறிந்து கொள்ள இயலவில்லை. யோகேசுவரனை அடிக்கடி நினைத்துக் கொள்கிறாள். அவன் இறந்தான் என்று கேள்விப்பட்ட பொழுது, அவளின் அவனை நோக்கிய பயணம் முடிவுக்கு வருகிறது. யோகேசுவரனோடு சென்று ஈழத்தில் ஏதாவது செய்வதிலும் அவளுக்கு விருப்பமில்லை. சமூகச் சேவைக்கு மேல் இவளுக்கு எதுவும் ஈடுபாடு இல்லை. இவள் யாரையும் கலவரப்படுத்தமாட்டாள். யாருக்கு எதிராகவும் கலகம் செய்யமாட்டாள். இவளுக்குத் தேவை அமைதியான வாழ்வு, குழந்தைகளோடு இவள் இருந்துவிடலாம். இது அவளுக்குப் போதும்.

சுதனைப் பற்றியும் பெரிதாகச் சொல்வதற்கில்லை. திரவியத்தை அவன் சந்தித்துப் பேசிய போது "நான் முற்றாகத் தோற்றுவிட்டேன்" என்று சொல்கிறான். இயக்கத்தில் சேர்ந்தது இவனைப் பொறுத்தவரை ஒரு தற்செயல் நிகழ்ச்சி. இவனாக விரும்பி இயக்கத்தில் சேரவில்லை. போகிற போக்கில் இயக்கத்தில் சேர்ந்தான்.

ஆயுதப் பயிற்சி பெற்றான். வங்கியில் கொள்ளையடித்தான். இயக்கத்தோடு இவனுக்கு எந்த முரணும் இல்லை. தொடக்கத்தில் இவன் மிக நல்லவன். இவனுக்கு என சுயசிந்தனையோ, மனஉறுதியோ இல்லை என்பது உண்மைதான். கொள்ளையடித்த பணம் பற்றி இவனுக்குக் குற்ற உணர்ச்சி இருந்ததாகத் தெரியவில்லை. கொஞ்ச காலம் அச்சத்தோடு வாழ்ந்தான். இவன் சேர்ந்திருந்த இயக்கம் இப்பொழுது இல்லை என்று ஆகியிருக்க வேண்டும். இவைபற்றி எல்லாம் ராஜியிடம் இவன் சொல்லவில்லை. இப்படி ஒரு சுதனை ராஜி ஒப்புக்கொள்ள மாட்டாள், என்பது இவனுக்குத் தெரியும். எப்படியாவது ஆசை காட்டி இவளை ஜெர்மனுக்கு அழைத்துச் சென்று ஆடம்பரத்தில் மூழ்கடிக்க வேண்டும், அப்பொழுதாவது அவள் மனம் மாறலாம். ராஜியின் உடல் இவனுக்குத் தேவை. இந்த உடல் இல்லை என்றால் ஷீலாவை அழைத்துக் கொள்ளலாம். இவன்தான் சுதன். ஷீலாவும் இவன் ஆதிக்கத்தை உதறிக்கொண்டு வேறு இடம் சென்றுவிட்டாள். இவன் தனியனானான். கலாச்சாரப் பேரவையில் சேர்ந்து பாடுபடுகிறான். தன் சகோதரி அரசி, தாய் வாலாம்பிகை ஆகியவர்களைக் குற்ற உணர்வோடு சந்திக்கிறான். இலங்கைக்கு அவர்கள் திரும்பிச் செல்வதற்குப் பணம் தருவதாகச் சொல்கிறான். வாழ்க்கையில் இவனுக்கு வேட்கை இல்லை. ராஜி தன்னோடு வந்தாலும் நல்லது தான். இல்லை என்றாலும் குற்றமில்லை.

இவன் துறவியில்லை. இவனுக்குள்ளும் மனத்தளவில் தொடர்ந்து போராட்டங்கள் தொடர்ந்து நடந்திருக்க வேண்டும். நாவலில் இதுபற்றி ஆய்வுகள் இல்லை. மீண்டும் இங்கு ஒரு கதையைத்தான் எதிர்கொள்கிறோம். எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் அதிக அளவில் ஒரு குடும்பத்தின் கதை. இந்தக் கதை கூட ஒரு நாவலாகவில்லை. "கனவுச் சிறை"யை ஒரு நாவல் என்று வாசிப்பதற்கு இந்தக் கதையை ஒதுக்கிவிட்டு வாசிப்பதற்கு நிறைய வாய்ப்பிருக்கிறது. இதுபற்றி மீண்டும் இங்கு சொல்ல வேண்டியதில்லை.

இந்தக் குடும்பக் கதையில் திடீரென ஒரு குழப்பம் ஏற்படுகிறது. கனடாவில் கார் விபத்தில் ராஜேந்திரன் இறந்து விடுகிறான். மகேசுவரி அடைந்த அதிர்ச்சிக்கு அளவில்லை. ராஜேந்திரன் சாவுக்குத் தானும் ஒரு காரணமாகி விட்டதை உணர்கிறாள். மகேசுவரிக்குள்ளும் மனமாற்றம் நிகழ்கிறது. இப்பொழுது

அம்பாவையும், குழந்தையையும் ஏற்றுக் கொள்ளும் முடிவுக்கு வந்து சேர்கிறாள். விசுவலிங்கத்தை அனுப்பி வைக்கிறாள்.

இப்படி ஏற்பட்ட அதிர்ச்சி மகேசுவரியின் சாதி உணர்வு, மூர்க்கத்தனம் ஆகியவற்றைக் குலைக்கிறது. போர்ச் சூழலில் தன் தேசத்தில் எவ்வளவோ நடைபெற்றிருக்கின்றன. இவை எல்லாம் அவள் மனத்தை மாற்றவில்லை. தன் குடும்பத்திற்குள் தனக்கு நேர்ந்த இழப்பு அவள் மனத்தை மாற்றுகிறது. இதே அளவுக்குத் தனக்குள் குறுகிப் போனவள் மகேசுவரி. விதவையாய் நெடுங்காலம் இருந்ததும் இதற்கு ஒரு காரணமாகும். சமூக உணர்வைப் பெறுவதற்கு இவளுக்கு வாய்ப்பில்லை என்று எப்படிச் சொல்ல முடியும்.

மகேசுவரியின் மனமாற்றம் எவ்வளவு தான் தேவை என்று நாம் வைத்துக் கொண்ட போதிலும், குடும்பக் கதை என்ற பண்பை இந்த நிகழ்ச்சி மாற்றவில்லை. மகேசுவரியின் இன்னொரு மகள் கால் ஊனமானவள் எனினும் செல்வக் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் இளைஞன் இவளை மணந்து கொள்கிறான். கனடாவில் இவர்களோடுதான் மகேசுவரியும் வாழப் போகிறாள். விஜியும் கூட எதையும் விட்டுக் கொடுப்பதாக இல்லை. விஜியின் கால் ஊனம், அவளை விரும்பி ஒருவன் ஏற்றுக் கொண்டது ஆகிய நிகழ்ச்சிகள் மகேசுவரிக்குள் மன இரக்கத்தை முன்பே ஏற்படுத்தியிருக்க வேண்டும். இப்படியும் நடந்து விடவில்லை. குடும்பக்கதை, குடும்பக் கதையாகவே எஞ்சுகிறது. அன்றியும் ஈழத் தமிழகத்தின் இருபதாண்டு வாழ்க்கையைச் சொல்லும் நாவலில் இப்படி ஒரு கதை மையத்தில் இருக்க வேண்டாம். ஓரத்தில் இப்படி எத்தனையோ கதைகள் இருக்கலாம். மையத்தில் இருக்கும் கதையும் நாவல் ஆகவில்லை என்பது நம் குறை.

தேவகாந்தனின் "கனவுச் சிறை" நாவலை மகா நாவல் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். மகா நாவல் என்ற ஆக்கத்திற்குரிய சில கூறுகள் நாவலில் இடம் பெற்றிருப்பதை ஓரளவுக்கேனும் சுட்டிக் காட்டினோம். ஈழத் தமிழகத்தில் நடைபெற்ற போர்ச் சூழலுக்குள் தேவகாந்தன் பயணம் செய்யவில்லை. பயணம் செய்யாமலும் இந்தச் சூழ்நிலையைச் சித்தரிக்க முடியும். இதற்கு மாறாகப் போர்ச் சூழலால் பாதிக்கப்பட்டு அந்தச் சூழலை விட்டு வெளியேறியவர்களின் வாழ்கையைத் தான் இவர் முக்கியமாகத் சித்தரிக்கிறார்.

இன்றைய ஈழ / தமிழகச் சூழலில் பெரும் சிக்கல்களை எதிர்கொண்டு நாம் விரும்புகிற அளவுக்கு ஒரு நாவலைப் படைப்பதற்கு வாய்ப்பில்லை. அரசியல் கெடுபிடிகள் தொடர்ந்து தீவிரமாக இருக்கிற சூழலில் ஒரு நாவலாசிரியர் அதுவும் தமிழகத்தில் இருந்து கொண்டு இப்படி ஒரு நாவலைப் படைக்கவும் இயலாது. என்ற போதிலும் தூரத்து இடி முழக்கங்களை இங்கிருந்தே நாம் கேட்கிறபடியான திறப்புக்களையும் நாவலில் அங்கங்கே வைத்திருக்கிறார். இருபதாண்டுக்கான வரலாற்றை ஓரளவுக்கேனும் தெரிந்த வாசகர்கள் நாவலுக்குள் உள்ள இடைவெளியைக் கண்டு கொள்ள முடியும்.

ஈழத் தமிழகத்தின் கடந்த ஐம்பதாண்டு கால வரலாற்றை அங்கங்கே பகுதி பகுதியாக ஆசிரியர் சொல்லி வைக்கிறார். இலங்கைத் தீவின் இரண்டாயிரம் ஆண்டுக்கு மேற்பட்ட வரலாறும் சங்கரானந்தர் மூலம் நமக்குச் சொல்லப்படுகிறது. சில புதிய தெளிவுகள் நமக்குக் கிடைக்கின்றன. 1983 கலவரங்கள் உட்பட எவ்வளவோ நிகழ்ச்சிகள். போர் நிகழ்வுகள் சொல்லப்படுகின்றன. ஜெயவர்த்தனே. பிரேமதாசா, சந்திரிகா, உதவிக்கு வந்த அமைதிப்படை பற்றி எல்லாம் பல குறிப்புகள் - ஜே.வி.பி. இயக்கம் பற்றி நிறைய விவரங்கள்.

யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்பு செல்லும் வழிகளில் எவ்வளவோ தடைகள். நிகழ்வுகள். எந்த ஒரு போராளிக் குழுவையும் இவர் குற்றம் சொல்லவும் இல்லை. நியாயப்படுத்தவும் இல்லை. போராட்டத்தை இவர் குறை சொல்லவே இல்லை. இவை எல்லாம் நமக்கு மனநிறைவு தருகிறது.

இன்னும் சிலவற்றைச் சொல்ல வேண்டும். ராகினி என்ற கல்லூரி மாணவியை காட்டிக் கொடுத்த தகையாட்டி நடராசா எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு சென்னையில் வைத்துக் கொல்லப்படுகிறான். இதற்கான நியாயத்தை நாம் வரவேற்கிறோம்.

சுவர்ணா என்ற தமிழனை நேசித்த சிங்களப் பெண்ணை குணானந்தர் நாசப்படுத்துகிறார். ஒரு பவுத்தத் துறவியின் காம வெறிக்கு இந்த நிகழ்ச்சி ஒரு சான்று எனினும் இவளை ஆசிரியர் கொன்றிருக்க வேண்டாம். சுவர்ணாவை அவன் கற்பழித்து விட்டுப் போயிருப்பான், எனினும் திரவியம் சுவர்ணாவிடம் தன் அன்பைக் குறைத்துக் கொள்ளமாட்டான். சுவர்ணா என்ற சிங்களப் பெண்

தன்னைத் தமிழ் மயப்படுத்திக் கொள்வதை நாவல் சிறப்பாகச் சொல்லியிருக்க முடியும்.

நாவலில் எத்தனையோ நல்ல கூறுகளில் இன்னுமொன்று கடைசியாக குணானந்தர் மனம் மாறி விடுகிறார். அவரை விட்டு இளந்துறவியர் பிரிந்து செல்கின்றனர். கொடியவன், காமுகன் என்றும் அறியப்பட்ட ஒருவன் மனம் மாறுவதை நாவல் சொல்லுகிறது. எந்த மனிதனுக்குள்ளும் நல்லவனும் இருக்கிறான். தீயவனும் இருக்கிறான். இவர்களுக்கு இடையில் போராட்டமும் நடைபெறுகிறது. இந்த உள்ளியக்கம் தான் நாவலை ஒரு கலையாக்குகிறது.

24.10.05

பெறுதல் :

திரு. தேவகாந்தன் அவர்கள்,
சென்னை

அன்பு நண்பருக்கு,

வணக்கம். மேலும் தொடர்ந்து சிலவற்றை இந்த மடலில் எழுத விரும்புகிறேன். கோவையில் நீங்கள் இருந்த பொழுது முக்கியமாக ஒன்றைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். நேரம் வாய்க்கவில்லை. இந்த நாவலில் இடம்பெறும் மனிதருக்கு நீங்கள் பார்த்த முன் மாதிரி உண்டா? எப்படி இந்த நாவலை எழுதினீர்கள்? எனறு அறிய விரும்புகிறேன். யோகேஷ் பற்றியும், சர்வானந்தர் பற்றியும் சில செய்திகளைக் கூறினீர்கள். நீங்கள் பார்த்த யோகேஷ் வேறு பரிமாணங்களுடன் வந்திருக்கிறார். சர்வானந்தர் பற்றி நண்பர் இரவீந்திரனும் கூறினார். புத்தத் துறவிகளில் இப்படிச் சிலர் உண்டு என்றார். சங்கரானந்தர் மூலம் வெளிப்படுகிற வரலாற்றாய்வு என்பது பெரும்பகுதி உங்களுடைய ஆய்வு மற்றும் படைப்பு. இத்தகைய ஆய்வும் படைப்பும் தேவையானவை ஒரு நாவலாசிரியர் வரலாற்றுக்குள்ளும் பயணம் செய்வது இன்றியமையாத கடமை.

இந்த நாவலில் எனக்கு மிகவும் பிடித்த மனிதர் திரவியம் தான். இவர் இடதுசாரி சிந்தனையாளராகவும் இருக்கிறார். ஜே.வி.பி. இயக்கம் ஒரு வகையான மார்க்சிய இயக்கம். 1960–களின் இறுதியில் இந்தியாவில் தோன்றிய நக்சலைட் இயக்கம் மாதிரி இந்த இயக்கமும். இவர் இடதுசாரி தீவிரவாதியாக இருந்தார். உலகளவில் அந்தக் காலத்தில் இப்படித் தீவிரவாத இயக்கங்கள் எழுந்ததை நாம் பார்க்கிறோம். ஏகாதிபத்தியம் மூர்க்கத்தனமாகச் செயல்பட்டதன் விளைவாக இவ்வகை இயக்கங்கள் உலகளவில் ஒழிக்கப்பட்டன. இவ்வகை இயக்கங்களின் தோற்றத்திற்கு மாவோ சிந்தனைகளும் காரணமாக அமைந்தன.

திரவியத்தைப் பொறுத்த வரை பலவற்றை உள்வாங்கிக் கொண்டவராக இருக்கிறார். இரண்டு இனங்களும் ஒரு தேசத்தில் சேர்ந்து வாழத்தான் வேண்டும் என்று கருதினார். இவரை எங்கிருந்து கண்டுபிடித்தீர்கள்? இவரது சிந்தனைகள் உங்களோடு ஒத்துச் செல்கின்றன, என்று கருதுகிறேன். சரிதானா? ராஜியைக் காட்டிலும் திரவியம் நாவலின் மையத்திற்கு வந்திருக்கலாம். அரசியை இன்னும் சற்று அழுத்தமாக சித்தரித்திருக்க முடியுமானால் நாவலின் மையம் ஆற்றல் பெற்றிருக்கும்.

சுதனுக்கும், ராஜேந்திரனுக்கும் முன் மாதிரிகளை எளிதாகச் சொல்லிவிட முடியும். விசுவலிங்கத்திற்கும் முன்மாதிரி சொல்ல முடியும். இவர்களுக்கெல்லாம் அரசியல் உணர்வு குறைவு. இழந்த வாழ்க்கையை மீண்டும் பெற இவர்கள் அங்கும் இங்கும் அலைகிறார்கள். தேசம், விடுதலை ஆகியவற்றில் இவர்கள் வாழ்க்கை மையம் கொள்வதில்லை. இன்றும் நாம் பார்க்கிறோம். இலட்சக்கணக்கான மக்களுக்கு குடும்ப வாழ்க்கையில் போதுமான நிறைவு கிட்டவில்லை எனினும் குடும்பத்திற்கு வெளியில் இவர்கள் செல்வதில்லை. ஒரு தொழில், வருமானம் கூடுதலாக அதிகாரம் இவை இத்தகையவர்களுக்குப் போதும். இந்த வாழ்க்கையும் அவர்களுக்கு நிறைவு தருவதில்லை, எனினும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

உலகத் தமிழர் கலாச்சாரப் பேரவை – இதற்கு முன் மாதிரி உண்டு என்று கருதுகிறேன். சேதுமாதவன், இராஜபாண்டியன் ஆகியவர்கள் நமக்குத் தெரிந்தவர்கள். சமரன், குன்றத்தூர் பெரிய பெருமாள் ஆகியவர்கள் யார் என்று தெரியவில்லை.

இப்படி நான் விவரிக்க வேண்டியதில்லை. அசல் மனிதர் யார்? கற்பனைப் பூச்சு ஏன் தேவைப்படுகிறது? இவர்களுக்குள் நீங்கள் சுயமாகச் செய்த பயணம் என்ன? என்றெல்லாம் எழுதினால் நல்லது.

இப்பொழுது யதார்த்தம், யதார்த்தவாதம், நவீனத்துவம் பற்றி நாவலின் வழியே சிலவற்றைச் சொல்லலாம். வாழும் எந்த ஒரு மனிதனும் தன்னைப் பற்றியும், தன் வாழ்க்கைச் சூழல் பற்றியும் ஏதோ ஒரு வகையான பார்வையைக் கொண்டிருக்கிறான். அவனைப் பொருத்த வரையில் இது யதார்த்தப் பார்வை. இந்தப் பார்வையிலிருந்து தன்னையும், தன்னைச் சூழ்ந்துள்ள உலகம் பற்றியும் சில கருத்துக்களை எந்த ஒரு மனிதனும் பெற்றிருக்கிறான். காதலிப்பவன் உலகத்தையே சொர்க்கம் என்பான். வாழ்வில் தோல்வி அடைந்தவன் உலகத்தையே நரகம் என்பான். பக்தி உள்ளவனுக்கு கடவுள், வழிபாடு முதலியவை இல்லாமல் முடியாது. பகுத்தறிவுவாதிக்கும் பொருள் வகை உலகம் தவிர வேறு இல்லை. திருடன் பார்வையில் எல்லாமே திருடர்கள். இப்படி எல்லாம் இல்லறத்தான், துறவி, அரசியல்வாதி, கட்சிக்காரன், வியாபாரி, அதிகாரி என்று பலருக்கும் யதார்த்த உலகம் வேறு வேறாக இருக்கின்றன.

உலகம் ஒன்றுதான் என்றாலும் வரலாறு மற்றும் சமூகத்தின் இயக்கம் எல்லோரையும் பாதிக்கின்றன, என்ற போதிலும் ஒவ்வொருவரும் உள்வாங்கிக் கொள்கிற உலகம் தனிவகைப் பட்டதாக இருக்கிறது. ஒவ்வொருவரும் வாழ்வின் யதார்த்தம் என்று கூறுவது வேறு வேறாக இருக்க முடியும். யதார்த்த உலகில் நூற்றுக்கணக்கான கூறுகளை, தளங்களை, தடங்களை, எல்லோரும் தமக்குள் கொண்டிருப்பது சாத்தியமில்லை. சிலருக்குத் தான் வாழ்வின் அடிப்படைகள் மீது கவனம் குவிகிறது. பலர் மேல் மட்டத்திலேயே இருக்கிறார்கள். சிக்கல் தீவிரப்படும் பொழுது வேறு தளங்களை இவர்கள் நாடிச் செல்ல முடியும்.

இதை மேலும் நான் விவரிக்கத் தேவையில்லை. ஒவ்வொருவரும் அவரவருக்குள் வந்துள்ள சூழலை முன் நிறுத்தி யதார்த்தம் என்று பேச முடியும். யதார்த்த உலகின் சில கூறுகளை மட்டும் இவர்கள் எடுத்துக் கொள்கிறார்கள் அல்லது முதன்மைப்படுத்துகிறார்கள். இதுதான் வாழ்க்கை என்று அவர்கள் பேசும் பொழுது இவை யதார்த்த வாதம் என்று குறிப்பிடுகிறோம். இதற்குமேல் எதுவும் இல்லை, என்பதற்கு அழுத்தம் தருவது யதார்த்தவாதம்.

தவிர்க்க முடியாமல் இப்படித்தான் மனிதர்கள் யதார்த்தம் பற்றிப் பேச முடிகிறது. மார்க்சியவாதி வர்க்கப் போராட்டம் என்பதை முதன்மைப்படுத்தி, சிலவற்றை எல்லாம் விளக்கி யதார்த்த வாதம் பற்றிப் பேசுகிறார். சங்கரானந்தர் பவுத்த மதத்தின் அறவியலுக்கு அழுத்தம் தந்து அறவியல் யதார்த்த வாதம் பற்றிச் சொல்ல முடியும். அறம் தான் வாழ்வுக்கு அடிப்படை வேறு இல்லை, என்று இவர் சொல்வார். குணானந்தருக்குப் பார்வை வேறு. ஆதிக்கத்தை உள்வாங்கிக் கொண்ட இவருக்கு புத்தர் வேறு வகையில் காட்சி தருவார். விசுவலிங்கத்தின் யதார்த்தப் பார்வை தனி வகையானது. திரவியத்தின் பார்வை வேறு. ராஜி, மகேசுவரி, ராகினி, அரசி ஆகியவர்களின் பார்வைகளும் வேறு வேறானவை. தியாகு, யோகேஸ்வரன் ஆகியவர்களின் பார்வையும் வேறானவை.

யதார்த்தம், யதார்த்தவாதம் என்று தமிழ்ச் சூழலில் பேசத் தொடங்கியவர், மார்க்சியர். வாழ்வின் யதார்த்தத்தில் இவர்களைப் பொறுத்தவரை பொருளியலும், அரசியலும் முதன்மை பெறுகின்றன. குடும்பம் இல்லாமல் முடியாது. தொழில் இல்லாமல் முடியாது. உணவு முதலியவை வாழ்வின் அடிப்படைத் தேவைகள். காதல், பரவசம், தவம், தியானம் முதலியவை வாழ்விற்கு முதன்மையானவை இல்லை. கலை இல்லாமலும் வாழ்க்கை நடைபெறலாம். சமயம் தேவையில்லை. துறவு தேவையில்லை. இவை எல்லாம் வாழ்வை மறுக்கக் கூடியவை. கலை, இசை, ஓவியம் ஆகியவை மேட்டுக்குடிகளின் தேவைகள். இப்படிச் சொல்லுகிறது இவர்கள் பார்வை. கட்சி முக்கியம், முதலாளி அயோக்கியன், தொழிலாளி நல்லவன் என்று பேசுவது இவர்களின் பார்வை.

இவர்களுக்குத் தியாகு, யோகேசுவரன், ராகினி முதலியவர்கள் தெரியமாட்டார்கள். இவர்கள் கற்பனையில் வாழ்கிறவர்கள். வாழ்வின் ஆதாரங்களிலிருந்து விலகியவர்கள். இவர்களுக்கு விசுவலிங்கம் பிடிக்கலாம். இவர்கள் பார்வையில் ராஜி குழப்பவாதி.

வாழ்க்கையைத் தீர்மானிப்பவை பொருளியல் மட்டுமல்ல. வாழ்வின் ஆதாரச் சக்தியோடு கலை, கலாச்சாரம் முதலியனவும் உள் அடங்கும். இவற்றிற்கு அழுத்தம் தந்து அதற்கேற்ற முறையில் வாழ்வை ஒருங்கிணைத்துக் கொள்ள முடியும். இவர்கள் கற்பனையில் மூழ்கியவர்கள் என்று சொல்ல வேண்டியதில்லை.

வாழ்வென்பது எந்தச் சமூகத்திலும் பல தளங்களைக் கொண்டது.

கணிதமும், வானவியலும், மெய்யியலும் வாழ்வின் தளங்களில் உள் அடங்கும். மார்ச்சுக்கும் இந்த உண்மை தெரியும். கட்சிக்காரனுக்குத் தெரிவதில்லை. இவன் பார்வையில் நவீனத்துவம் தவறானது. பின்-நவீனத்துவம் கோளாறு உடையது.

நாமும் ஒன்றுக்கு மேற்பட்ட தளங்களில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். குடும்பத்தோடு வாழ்கிறோம். சில சமயங்களில் உடைத்துக் கொள்ளவும் செய்கிறோம். உணவு, உடை முதலிய தேவைகளை விட சில சமயங்களில் கலை, கல்வி முதலியவற்றிற்கான தேவைகள் அதிகரித்து வருகின்றன. இப்படித்தான் இலக்கியம் நமக்குத் தேவைப்படுகிறது. இலக்கியவாதி வாழ்விலிருந்து அன்னியப்பட்ட வேண்டியதில்லை.

வாழ்வில் தியாகுவுக்கு இடமுண்டு. யோகேசுவுக்கும் இடமுண்டு. மகேசுவரிக்கும் இடமுண்டு. வாழ்வின் மேல் தளங்களிலிருந்து அடித்தளங்களுக்கு ஒவ்வொருவரும் செல்ல முடியும். சங்கரானந்தர் அடித்தளத்தோடு தொடர்புடையவர். யோகேஷ், தியாகு ஆகியவர்களும் அடித்தளத்தில் வாழ்கிறவர்கள். இந்த அடித்தளம் என்பது வாழ்வின் ஆதார தளம்.

திரவியம் அடித்தளத்தில் வாழ்கிறவர். அடித்தளத்திற்குள் செல்ல முடியாதபடி ராஜி தடுமாறுகிறாள். மகேசுவரி, ராஜேந்திரன் மரணத்திற்குப் பிறகு அடித்தளத்தினுள் எட்டிப் பார்க்கிறாள். இப்படி எல்லாம் "கனவுச் சிறை" நாவலின் பாத்திரங்களைப் பல்வேறு தளங்களில் நிறுத்திப் பார்க்க முடியும். ஒவ்வொருவரின் இயக்கத் தளத்தையும் மதிப்பிட முடியும். ஒரே தளத்தில் யாரும் இறுதிவரை வாழ்வதில்லை. இயக்கம் இல்லாமல் யாருக்கும் வாழ்க்கை இல்லை. பொருளியலை வாழ்க்கை என்று ஒரு சமயம் கருதுபவரும் இன்னொரு சமயம் கலாச்சாரத்திற்கு முதன்மை தர முடியும். கலாச்சாரம் என்பதனுள் மெய்யியல் கூறுகள் உள்ளன. மெய்யியலை முதன்மைப்படுத்தி வாழ்வின் அனைத்துத் தளங்களையும் ஒரு பார்வைக்குள் கொண்டு வர முடியும். இலக்கியவாதிக்கு இவ்வகைப் பார்வை இன்றியமையாது; யதார்த்தம், என்பதும், யதார்த்தவாதம் என்பதும் கூட இப்படித் தனக்குள் விரிவு பெற முடியும். நவீனத்துவம், பின் - நவீனத்துவம் முதலியவற்றை உள்ளடக்கிக் கொள்ள இயலும்.

எனக்குள்ளும் தெளிவுபடுத்திக் கொள்வதற்காக இவ்வளவும்

எழுதினேன். வாழ்வின் அடித்தளம் என்பது அன்பு, அறம், உழைப்பு, பகிர்வு – சுருக்கமாகச் சொன்னால் சமதர்மம் என்று கருதுகிறேன் சமதர்மம் என்ற தளத்திற்கு வரும்பொழுது தான் வாழ்க்கை விரிவும், அழகும், ஆற்றலும் பெறுகிறது. இந்த வாழ்க்கை தான் அர்த்தமுடைய வாழ்க்கை. கலை, இலக்கியம் முதலியவற்றை இங்கிருந்து தான் எடுத்து கொள்கிறோம். இவ்வகை அறத்தை அடிப்படையாகக் கொண்டுதான் ஒரு தேசத்தின் அரசியலும், பொருளியலும் அமைய வேண்டும். யதார்த்தம் பற்றி ஆய்வு இங்கு தான் நிறைவு பெறுகிறது. மேல் மட்டத்தில் மட்டுமே வாழ வேண்டும் என்று நிர்பந்தங்களுக்கு உள்ளானவர்கள் துர்பாக்கியசாலிகள். வாழ்வின் பேறு இவர்களுக்கு இல்லை. இவர்களுக்கு விடுதலை இல்லை. வாழ்வின் அவலங்களிலேயே இவர்கள் உழல்கிறார்கள். மரணம் என்பதன் மூலம் வாழ்க்கை நிறைவு பெறமுடியும். அதிகாரம், பண வெறி ஆகியவற்றோடு முடங்கியவர்கள் ஒரு வகையில் தண்டனைக்கு உள்ளானவர்கள். இத்தகையவர்களை படைப்பிலக்கியம் கலைத்துப்போட வேண்டும்.

இவர்களுக்குள்ளும் உள்ளொளி ஏற்ற வேண்டும். வாழ்வின் முடக்கங்களிலிருந்து இவர்களும் தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டும்.

இப்படி ஒரு பார்வையிலிருந்து இந்த நாவலை மீண்டும் ஒரு மதிப்பீட்டுக்கு உட்படுத்த முடியும். இந்த மடலை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். இலக்கியம் என்ற வகையில் மிகச் சிறந்த படைப்பாளியாக நீங்கள் விளங்குகிறீர்கள். வரலாறு பற்றிக்கூட நீங்கள் அறிவு பெற்றிருக்கிறீர்கள். இன்னும் கொஞ்சம் ஆழத்திற்குச் செல்ல இயலுமானால் மெய்யியல் பார்வை உங்களுக்கு வசப்படுவது எளிதாக அமையும். இப்படி ஒரு பார்வையில் இருந்து தான் ராஜி, சுதன், மகேசுவரி முதலியவர்களையும் விமர்சனம் செய்கிறோம். ராஜநாயகம்இன்னும் தனக்குள் விரிவு பெற இயலும். விசுவலிங்கம் பற்றிக் குறை சொல்வதற்கில்லை. தனித்தனி நாவல்களாக வைத்துப் பார்க்கிற பொழுது குறை தெரிவதில்லை. எல்லாவற்றையும் சேர்த்து ஒரு மகா நாவல் என்று பார்க்கிறபொழுது மையத்தில் குறை தெரிகிறது. என் விவாதம் என்பது நான் மேலும் கற்றுக்கொள்வதற்காகத்தான்.

இதுவரை நான் விவரித்ததிலிருந்து பொதுவாக இலக்கியம் பற்றி என் வாசிப்பு என்ன என்பதை நீங்கள் அறிந்து கொள்ள முடியும்.

நாவல் அல்லது சிறுகதையின் வடிவம், உத்தி பற்றிப் பெரும்பாலும் என் பார்வை தங்குவதில்லை. வாழ்வின் மெய்யியலை எந்த அளவுக்கு இலக்கியம் தனக்குள் உள்ளுறையாகக் கொண்டிருக்கிறது, என்பதில் தான் என் கவனம் குவிந்திருக்கிறது. இதைத்தான் உங்கள் நாவல்களிலும் நான் தேடுகிறேன். மனிதனின் அடிமனத்தைத் தொடும் பொழுது வாழ்வின் மெய்யியலைத் தொடுகிறோம். புறத்திலிருந்து புறம் தரும் தூண்டுதலின் நெருக்கடியின் விளைவாக அகமனத்திற்குள் சென்று நம்மை நிலை நிறுத்திக் கொள்ள முயல்கிறோம். இதற்குத்தான் மெய்யியல் தேவைப்படுகிறது. அகமனம் தான் கலைத்துவத்திற்கும் ஊற்றாக விளங்குகிறது. கவிதையும் மெய்யியலும் இங்கு கை கோர்த்துக் கொள்கின்றன. இங்குதான் வாழ்க்கை நிறைவு பெறுகிறது. பேரிலக்கியங்கள் இந்த ஆதாரத்தில் நிலை கொள்கின்றன.

இந்த இடத்தில் காலம் என்ற வரையறை செயல்படுவதில்லை. காலம் கடந்த அமரத்துவம் என்பதன் இயக்கத்திற்குள் நாம் செல்லுகிறோம். சமயங்கள் இந்தக் காலம் கடந்த தன்மையைத் தமக்குள் கருவாகக் கொண்டிருக்கின்றன. எல்லையற்ற பரம்பொருள் என்பதன் உள்ளடக்கம் காலம் கடந்த அமரத்துவத்தைத்தான் குறிக்கிறது.

இத்தகைய விளக்கம் காரணமாகத்தான் உங்கள் நாவலில் உள்ள கலைத்துவத்தை நான் பெரிதாகப் பாராட்டுகிறேன். யோகேஷ், சங்கரானந்தர் முதலியவர்கள் இந்தக் கலைத்துவத்தின் வீச்சை உட்கொண்டவர்கள். இந்தக் கருதான் நாவலின் மையத்தில் திரண்டிருக்க வேண்டும். புரட்சிக்காரனுடைய நெஞ்சில் இருப்பது இந்தக் கலைத்துவம். ராஜி ஒரு புரட்சிக்காரி ஆகவில்லை, என்பது என் வருத்தம். மகேசுவரி ஒரு வேளை முன்பே மகனை இழந்திருந்தால் இந்த மையத்திற்கு வந்து ராஜியோடு கலந்திருப்பாள். சுதன் இந்த மையத்தை நெருங்க முடியுமென்று தோன்றவில்லை. ராஜிக்கு இனி எந்த வாழ்க்கை சாத்தியப்படும் என்று தெரியவில்லை, இத்துடன் முடித்துக் கொள்கிறேன். உங்கள் மீது எனக்கு என்றைக்கும் பெரும் மரியாதை உண்டு.

# மௌனியின் கதைகள்

1

மௌனியின் படைப்புகளில் எதார்த்தம் வெளிப்படையாகத் தெரிகிற கதைகளில் குறிப்பிடத்தக்கவை 'இந்நேரம் இந்நேரம்', 'மிஸ்டேக்', 'மாறாட்டம்' அகியவை. இந்நேரம் கதையில் தனக்குரிய மணப்பெண்ணுக்குப் பரிசம் போட்டுத் திரும்புகிற பெற்றோரை எதிர்பார்த்து செல்லக்கண்ணு காத்திருக்கிறான். சிவராமய்யரின் கொல்லைப்புற மேட்டை வெட்டிச்சமப்படுத்துகிற கடுமையான வேலையில் தன் மனஅவசத்தை குறைத்துக் கொள்கிறான். மௌனி சொல்ல வந்த கதை இதுதான். மணச்செய்தியை எதிர்பார்த்துக் காத்திருக்கிறவனுக்கு மூன்று ஆள் செய்யவேண்டிய வேலையை ஓர் ஆளாக நின்று பண்ணையார் ஏவாமலேகூட செய்து முடிக்கிறான். மாலையும் சிறுகடுகு ஆகிற கதை. மேற்குவீட்டு அய்யர் தன் நிலத்தை குத்தகைக்கு ஒப்படைத்தன் மூலம் ஏமாந்தது பற்றியும். செல்லக்கண்ணு வுக்கு உரிமை உடையவளுக்கு இன்னொருவன் திருட்டுத்தாலி கட்டியது பற்றியும் இக்கதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'மிஸ்டேக்' கதையில் வண்டிக்காரச் சுப்பன் வாடகை கிடைக்காத நிலையில் வண்டியில் தன்னைப் பரப்பி உட்கார்த்திக் கொண்டு வருகிறதைப் பார்க்கிறபோது, ஏட்டு அனந்தராமையருக்கு ஆத்திரம் ஏற்படுகிறது. இதே வண்டியில் பிரயாணம் செய்து சென்ற அனந்தராமய்யர் சர்க்கிள் வீட்டுக்கு முன் இறங்குகிறார். அதைக் கண்டு சர்க்கிளுக்கு ஆத்திரம்.

இந்தக் கதையில் மனிதர்களுக்கிடையில் நடைபெறும் நாடகத்தின் வேடிக்கையைச் சித்தரிப்பதில்தான் மௌனியின் கவனிப்பு தெரிகிறது. 'இந்நேரம்' கதையில் நாம் இன்று கண்டு வெறுக்கிற பண்ணையாரின் ஆணவம், செல்லக்கண்ணுவின் அடிமைப்புத்தி கதையில் இல்லை. நில உடைமையாளர் தன் பண்ணை நிர்வாகத்தை, ஆட்களை வைத்துத்தானே நடத்த வேண்டும். நிலத்தைக் குத்தகைக்கு விட்டால் குத்தகைக்கு எடுத்தவர் ஏமாற்றத்தான் செய்வார். இது அன்றைக்கும் சரி, இன்றைக்கும் சரி தொடரும் நிலவரம். இதைக்கொண்டு நில உடைமையாளரைக் குறைசொல்ல வேண்டும் என்று நாம் மௌனியிடம் எதிர்பார்க்க வேண்டியதில்லை.

சில்க் ஜிப்பாவும் விசிறி மடிப்போடு கூடிய அங்கவஸ்திரமும் அணிந்து மாலையில் காற்றுவாங்கச் செல்லும் வக்கில் அய்யரை கிராமவாசி தேடி வருகிறான். இப்பொழுது நாகரிக பாணி மாறியிருக்கிறது. கிராமவாசி தேடிவந்த வக்கில் அய்யர் கதர் ஜிப்பாவும் நேரு குல்லாவுமாக மேடையில் அமர்ந்திருக்கிறார். கிராமவாசிக்கு அகப்பட்ட சில்க்ஜிப்பாக்காரர் அவர் தேடிவந்த வக்கீல் அல்ல. ஆள்மாறாட்டம் செய்தவர் இக்கதையில் காங்கிரஸ்காரரும் தான். மௌனி இக்கதையில் அரசியல் விமர்சனம் செய்கிறார் என்பதை விட மனித நாடகத்தை வேடிக்கையாகப் பார்க்கிறார் என்று சொல்வது பொருந்தும். 'குடும்பத்தேர்', 'குடைநிழல்' போன்ற வேறுசில கதைகளையும் எதார்த்தத் தளம் வெளிப்படையாகத் தெரிகிற கதைகள் எனக் குறிப்பிடலாம்.

எதார்த்தத் தளம் முற்றிலும் மறைந்திருப்பதாக் தோன்றும் சில கதைகளில் கூர்ந்து பார்க்கும்போது எதார்த்தத் தளத்தைக் காணமுடியும். 'மாபெரும் காவியம்' கதையில் கிட்டு ஒரு ஏழை குமஸ்தா. தன் மகனுக்கு பம்பரம் வாங்கித்தர முடியாத வறுமை. என் தலைவிதியை நான் எழுதிக்கொண்டிருக்கிறேன் என்று குமாஸ்தா கிட்டு கதையின் இறுதியில் கூறுகிறான். இங்கும்கூட வறுமை பற்றி மௌனி உருக்கமாக எதையும் சொல்லவில்லை. அப்பா காவியம் எழுதிய தாள்களைப் பையன் கடையில் போட்டு பம்பரம் வாங்கினான். காய்ச்சல் கண்டு இறக்கிற பையன் – அவனுக்குள் ஒரு காவியம் என்ற உணர்வை மௌனி நமக்குள் ஏற்படுத்துகிறார்.

2.

'பிரபஞ்ச கானம்' கதையில் பாடிக்கொண்டிருக்கிற பெண் இறக்கிறாள். இசைதான் அவள் உயிரைக் கொன்றது என்ற முறையில் சித்திரிப்பு இல்லை. மாறாக அவள் இதய நோயாளி என்ற விவரம் கதையில் இடம் பெறுகிறது.

மௌனியின் அனைத்துக் கதைகளிலும் சமூக எதார்த்தம் குறைந்த அளவிலேனும் வெளிப்படுகிறது. இளம்பெண்ணை வயது முதிர்ந்தவர் திருமணம் செய்துகொண்டு தவிக்கிறார். எதிர்வீட்டில் இருக்கும் இளைஞனிடம் இவளைப் பறிகொடுத்துவிடுவோமோ என்ற சோகம் அல்லது பரிதவிப்பு கிழவருக்கு இருக்கிறது. கிழவர் இளம் பெண்ணை இரண்டாம் மனைவியாக ஏற்றுக்கொள்வது பற்றி மௌனிக்கு விமர்சனம் இல்லாமல் இவ்வகைக் கதைகளை

எழுதியிருக்க முடியாது.

மௌனியின் பல கதைகயில் இளைஞர்களின் காதல். காதல் தோல்வி சொல்லப்படுகிறது. சென்னை நகரம், கடற்கரை, தேவதாசிகள் இவர்களோடு இளைஞர் உறவு என்ற முறையில் கதைகள் சொல்லப் படுகின்றன. தேவதாசியிடம் உறவு கொண்டு இளைஞன் பிரிகிறான். பிறிதொரு சமயம் தனக்கு அவளிடம் பிறந்த பெண்ணை எதிர்கொள்ளத் திறனில்லாமல் மௌனமாக வெளியேறுகிறான். தான் காதலித்த பெண் பிறகு திருமணமாகி அல்லது கணவனோடு தன்னை எதிர்ப்படுகிறபோது சோகம் தாளாமல் இவன் செத்துப்போகிறான்.

இவ்வாறான கதைகளில் காதலுக்காக அலைகிற அதேசமயம் திருமணம் என்ற பந்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல் தவிக்கிற இளைஞனை இக்கதைகள் சொல்லுகின்றன. இந்த இளைஞன், சில பத்தாண்டுகளுக்கு முன்பு தமிழகச் சூழலில், கனவியலில் தன்னைப் புதைத்துக்கொண்ட இளைஞன். தேவதாசிகள் என்ற சமூகம், தமிழகத்தின் பல நகரங்களில் இருந்த காலச்சூழலையும், வசதியான குடும்பத்து இளைஞர்கள் இவர்களின் கவர்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டதையும் நாம் நினைவுபடுத்திக் கொள்ள முடியும். விடுபடமுடியாத கவர்ச்சி, அதேசமயம் விளக்கொளியில் விட்டில் கருகிச்சாகிற மாதிரி இந்த வாழ்க்கை. இந்த வாழ்க்கைப் பின்னலில் மௌனி கதைகளில் தெளிவான சில இழைகள்.

மௌனி கதைகளில் தெரிகிற தேவதாசிப் பெண்கள், காசுக்காக இளைஞரைக் கவர்ந்துகொள்பவர் அல்லர். இப்பெண்களிடம் குடும்ப வாழ்வுக்கான விருப்பம் குடிகொண்டிருக்கிறது. தாய்மைக்கான ஏக்கம் நிறைந்திருக்கிறது. என்னதான் அன்போடு இளைஞனை அரவணைத்த போதும் இந்த இளைஞனுக்கு அந்தப் பெண்ணிடம் அருவருப்பு தொடர்கிறது.

மௌனியின் இறுதிக்காலத்துக் கதைகள் இரண்டை இங்கு குறிப்பிட வேண்டும். 'அத்துவான வெளி', 'தவறு' ஆகியவை மறைபொருள் தன்மை பெரிதும் கொண்ட கதைகள். புரிதலுக்கு இடம் தர மறுக்கிற இக்கதைகளிலும் எதார்த்தத்தின் சில வெளிக்கோடுகளும் தெரிகின்றன. 'என்னைத் தெரியவில்லையா? உங்களைத் தானே தேடிக்கொண்டிருக்கிறேன். உங்களை எனக்குத் தெரியும். என்னை உங்களுக்குத் தெரியவில்லையா?' என்று

விடாப்பிடியாக தன்னை ஒருவன் தொடர்ந்து வருகிறான் (அத்துவான வெளி). இவ்வாறான அக உலகக் கலைஞன் என்று சொல்லப்படும் மௌனியின் கதைகளை எதார்த்தத் தளம் பற்றிய புரிதலுடன் நாம் நெருங்க முடியும். சில கதைகளைத் தவிர, பெரும்பாலான கதைகளில் மௌனி நம் எல்லைக்குள் இயங்குவதை இரசிக்க முடியும்.

3.

சமூக விமர்சனம் என்ற நோக்கில் மௌனி கதைகள் எழுதவில்லை. மௌனியிடன் சமூக விமரிசனம் நாம் எதிர்பார்க்கிற அளவில் இல்லை. சமூக விமர்சனம் தீவிரமாக வெளிப்படக்கூடிய கதைகளில் கூட மௌனி இந்த நோக்கைக் கடைப்பிடிக்கவில்லை. புதுமைப்பித்தன் மாதிரி கிடைக்கிற சந்தர்ப்பங்களையெல்லாம் சமூகத்தைச் சாடுவதற்காக மௌனி பயன்படுத்திக்கொள்ளவில்லை. ஆனால் சமூக அக்கறை அல்லது சமூக நலன் அறவே வேண்டாதவர் மௌனி என்று சொல்வதற்கு மௌனியின் கதைகளை நாம் ஆதாரமாக்கிக் கொள்ள முடியாது. மௌனியின் இயங்குதளம் நாம் விரும்புகிற சமூக விமரிசனம் என்ற தளம் அல்ல.

மௌனியின் கதைகளிலிருந்து அவரது கருத்தியலை நாம் முழுமையாக அறிந்தகொள்ள இயலாதெனினும், அவரது கருத்தியலின் இழைகள் அங்கங்கே தென்படுகின்றன. ஒரு பிற்போக்குவாதி என்று நாம் முடிவு செய்வதற்கு இடையூரான இழைகளும் நமக்குத் தட்டுப்படுகின்றன. 'குடும்பத்தேர்' கதையில் மரபு முறையில் வரும் குடும்பத்தை மௌனி சார்ந்திருப்பது தெரிகிறது. அம்மா இறந்ததும், கிருஷ்ணய்யருக்குத் தன் குடும்பத்தை நிர்வாகம் செய்வதில் தடுமாற்றம் ஏற்படுகிறது. குடும்பத்தேர் ஆட்டம் காண்கிறது. ஓர் உறுப்பு பழுதுபட்டபோது, இன்னொரு உறுப்பு முன்னைய உறுப்பின் இடத்தை ஏற்கிறது. தாயார் இல்லாத நிலை சீர்படுகிறது. குடும்பம் அமைதியாய்ச் செல்கிறது. இந்தக் கதையில் தாய்க்கு முதன்மை கிடைத்திருக்கிறது. ஆனால் மனைவி குறிப்பிடப்பட்டாலும் குடும்பப் பொறுப்பில் அவள் இடம் சொல்லப்படவில்லை. கூட்டுக்குடும்பச் சூழலில் தந்தை இல்லாதபோது தாய்க்கு முதன்மை கிடைக்கிறது. மனைவியைப் பொறுத்தவரை கூட்டுக்குடும்பத்தில் ஒரு நிழல். இவளும் தாயாகி அடுத்த தலைமுறையைத் தாங்கும் வரை தன் ஆளுகைக்காக இவள் காத்திருக்க வேண்டும். ஆகவே மனைவிக்கு ஏன் இடம் தரவில்லை

என்று மௌனியைக் குறைசொல்ல முடியாது.

'குடைநிழல்' கதையில் வரும் ஜோன்ஸ் ஆங்கிலோ இந்தியப் பெண். நவீன நாகரிகம் உடையவள் உடலை விற்றுப் பிழைக்க நேர்ந்த அப்பெண், மழையில் குடை நிழல் தந்த இளைஞனுக்கு தன் அன்பைத் தருகிறாள். அவன் தந்த பணத்தை அருவருப்போடு பார்க்கிறாள். தன் அன்பை மதிக்கத்தெரியாத இளைஞனை, அதே சமயம் தன்னிடம் கொண்ட கவர்ச்சியிலிருந்து விலக முடியாத இளைஞனை, 'அன்பானவனே, என்னைவிட்டுப் போய்விடு' என்று அக்கறையோடு சொல்கிறாள். ஜோன்சிடம் இயங்குவது தாய்மை குணம். ஆங்கிலோ இந்தியப் பெண், நாகரிகம் தெரிந்தவள், உடலை விற்றுப் பிழைப்பவள் என்ற அம்சங்கள் மௌனியின் கண்ணை மறைக்கவில்லை. மரபில் ஊறிய வைதிகர் என்று மௌனியைக் குற்றம் சொல்வதற்கில்லை.

டாக்டர் கோமதி நவநாகரித்தை விரும்புகிறவள். கமலத்திற்கு மருத்துவம் செய்கிறாள் எனினும் அவள் இறக்கிறாள். அன்பான அப்பெண்ணின் மனத்தில் நிறைந்திருக்கிற கணவனுக்கு கோமதி தன்னைத் தருகிறாள். நவநாகரிகத்தின் ஆணவம் செயலிழக்கிறது. குடும்பம் வேண்டாம், மனைவியாய் வாழ்வதே வெறுப்புக்குரியது என்று கருதிய கோமதி, கமலம் விட்டுச் சென்ற இடத்தைத் தான் நிரப்புகிறாள். மனைவி என்பது இங்கு அடிமைத்தனத்தின் சின்னமாக இல்லை. மரபு முறையில் வரும் மனைவி என்ற இடம் இங்கு மறுக்கப்படுவதும் இல்லை. இருவர்கிடையில் நிறைவான அன்பு இங்கு ஆட்சி செய்கிறது. குடும்பம் என்ற அமைப்பை மௌனி உதறிக்கொள்ள வேண்டுமென்று நாம் எதிர்பார்க்க வேண்டியதில்லை.

கௌரி (உறவு - பந்தம் - பாசம்) தன்னை உதறிச் சென்ற தன் காதலன் பற்றி, அவன் நண்பனிடம் பேசுகிறாள். கௌரி உடலை விற்றுப் பிழைக்கும் குலத்தைச் சேர்ந்தவள். பலர்க்கு இடம் தந்த போதிலும், மனத்திலும் ஒரு கணவன் நிரந்தரமாக இடம் பெற்றிருப்பதை கௌரி சொல்கிறாள். குடும்பத்தில் வாழ்கிற ஒரு பெண், ஒரு கணவனிடம் எப்படி நிரந்தரமாய்த் தன் உடலை விற்றுக்கொள்ள முடிகிறது. நிரந்தரமாய் எப்படித் தன் கணவனிடம் கற்பிழக்க நேர்கிறது என்பதும் தனக்குப் புரியவில்லை என்கிறாள் கௌரி. மரபில் நம்பிக்கையுள்ள வாசகனை இங்கு அதிர்ச்சிக்குள்ளாக்குகிறார் மௌனி. ஆகவே மௌனியின்

கருத்தியல் நம் வெறுப்புக்குரியதல்ல என்பதை நாம் இங்கு அழுத்தமாகச் சொல்ல முடியும்.

4.

மௌனியின் பலகதைகளில் வரும் காதலைத் தேடி அலைகிற இளைஞன், உண்மையில் காதலில் நிறைவு காண்பவனாக இல்லை. 'ஏன்' என்ற முதற்கதையில் பள்ளிவயதில் இவன் காதலிக்கிற பெண், நான்காண்டுகளுக்குப் பின் கைக்குழந்தையோடு இவன் எதிர்வீட்டில் நிற்கிறாள். அதே பெரிய கண்கள். ஏன், எதற்கு என்ற கேள்வி. காதலா, எதற்கு, ஏன் என்று இதற்குப் பொருள். இவன் செத்துப் போகிறான். அப்பெண் திகைக்கிறாள் - ஏன், எதற்கு என்ற கேள்வியோடு.

மௌனியின் இந்த முதற்கதை இத்துடன் முற்றுப்பெறவில்லை. இதே கதை இன்னும் எத்தனையோ வடிவங்களில் தொடர்கிறது. 'காதல் சாலையில்' திரும்பவும் இந்த இளைஞன் தன்னைக் காதலித்தவள் - கருப்பு ரோஜா - தன் கணவனோடு இவனை எதிர்கொள்கிறாள். வீட்டில் தங்க முடியாமல் வெளியேறி குப்பியிலுள்ள மதுவை அடிக்கடி அருந்திக்கொண்டு நீண்ட சாலையில் நடக்கிறான். சிட்டுக்குருவி ஏன் என்று கேட்கிறது. இவனைப் பார்த்து காகம் கரைகிறது. நாய் குலைக்கிறது. ஏன் எதற்கு என்ற கேள்வியோடு. எங்களுக்கும் காதல் உண்டு. உனது காதல் ஏன் இப்படி? மனிதனுக்கு என்ன நேர்ந்தது? இப்படி நமக்குள் சில உணர்வுகள். இவனும் செத்துப் போகிறான். வானம் அழகு பெறுகிறது.

இதே இளைஞன் திரும்பத் திரும்ப இன்னும் சில கதைகளில் வருகிறான். 'எங்கிருந்தோ வந்தான்' கதையில் பத்மாவுக்குத் திருமணமாகி விட்டது. காதல் நிறைவேற வேண்டுமென்று இவன் விரும்பவில்லை. அதிலிருந்து தப்பித்துவந்து இசைப்பாடலில் இவன் தன்னை உருக்கிக் கொண்டிருக்கிறான். பத்மாவும் செத்துப் போனாள். அவனுக்குக் காதல் தேவை. காதலில் இவன் ஊன்உருக வேண்டும். உயிரை வெளியேற்றிக் கொள்ள வேண்டும். காதல் நிறைவில் இந்த உருக்கம் வராது. தன் மாமா மகள் கமலா கல்லூரியில் தன் பாட்டுக்கு வயலின் வாசிக்க அழைக்கிறாள். இவன் வயலின் வாசிக்கிறான். இவன் வயலின் வாசிப்பில் தனக்கொரு செய்தியை, காதல் குறிப்பை அவள் எதிர்பார்க்கிறாள். வாசிப்பில் அவள் எதிர்பார்த்த குறிப்பில்லை. உச்ச நிலைக்குச் செல்ல, அந்த

வாசிப்பின் வழியே அவன் உயிர்ப்பறவை அவன் கூட்டைவிட்டு விடுதலைபெற்றுப் பறந்து செல்கிறது.

பிரபஞ்சகானத்தில் இதே கதை. தான் காதலித்த எதிர்வீட்டுப் பெண்ணுக்குத் திருமணமான மூன்றாம் நாள் நலங்கில் அவள் பாட்டுப்பாட வேண்டும். இவன் வற்புறுத்துகிறான். பாடிக்கொண்டே அவள் உயிர்துறக்கிறாள். அவளுக்குள் வந்து தங்கியிருந்த இயற்கையழகும் கானமும் விடுதலை பெற்றுப் பிரபஞ்சத்தோடு சேர்கின்றன. பிரபஞ்சம் பேரழகைப் பெறுகிறது.

இந்த இளைஞனுக்குக் காதல் நிறைவு தேவையில்லை. இவனுக்குச் சோகம் தேவை. சோகம்தான் இவனுக்குள்ளிருந்து தேனிசையாகக் கிளம்பும். இவனுக்குள்ளிருந்து காவிய உணர்வைக் கிளறும். பிரபஞ்சத்தின் அழகு இவனுக்குள் மறைந்திருக்கிறது. பிரபஞ்சம் இவனுக்குள் அழகான இசையாக தங்கியிருக்கிறது. இவற்றை இவன் தனக்குள்ளிருந்து வெளியேற்ற வேண்டும். உயிரைக் கொடுத்து இசை மூலம் தன்னை வெளியேற்றிக் கொள்ள வேண்டும். சாவின்போது பிரபஞ்சகானம் தனக்குக் கேட்கும். ஆகவே சாவு இவனுக்கு இனியது. இப்படி அலைகிறவன் மௌனியின் இளைஞன். காதலில் நிறைவு திருமணம் என்றால் இவன் கருகிப் போவான். இந்தக் கதைகளில் வரும் பெண்கள் குடும்பப் பெண்கள் என்பதையும் கதையில் வரும் இளைஞன் திருமணமாகாதவன் என்பதையும் நாம் கவனித்துக் கொள்ள வேண்டும். புயல் அடிக்கிறபொழுது அந்தப் புயலின் அழகைக் காண படகேறிக் கடலுக்குள் சென்ற ஷெல்லி அந்த இளைஞன். தன் உடல் என்ற வயலின் மூலம் தன்னை முழுமையாக இசைத்து உருக்கி தன்னை வெளியேற்றிக் கொள்பவன். சோக இசைதான் ஷெல்லியைப் போல இவனுக்கும் இனியது. மௌனியின் ஆண் வானத்தில் பறக்கிறவன். ஆனால் மௌனியின் பெண் நிலத்தில் பதிந்தவள்.

காதலில் இந்த இளைஞன் மாதிரி அவள் தவிப்பவளாக இல்லை. தரையில் பதிந்திருக்கும் அவள் கேட்கிறாள், காதல் எதற்கு? ஏன்?. ஆணுக்குக் காதல் என்பது வானத்தில் பறக்க, சுகம் பெற, பெண்ணுக்குள் காதல் என்பது தவிக்க, சுமைபெற, ஆதரவற்றுத் தவிக்க. உற்றுப்பார்த்து ஆண் இவளுக்குள் காதல் தீயை மூட்ட முடியும். அப்புறம் ஏன் எதற்கு என்ற கேள்விக்கு இடம் கொடாமல் பத்மா மாதிரி அவளும் செத்துப் போவாள். கறுப்பு ரோஜா தப்பித்துக் கொண்டாள்.

5.

மௌனியின் சில கதைகளில் இவளுக்குப் பெயர் கௌரி. சில கதைகளில் சுசீலா. ஒரு கதையில் கமலா. இந்தப் பெண்ணுக்குள் பிரபஞ்சம் தழுவி நிற்கும் ஒரு பெண் தெரிகிறாள். இவள் காதலி. இவள் தெய்வம். 'சிகிச்சை கதையில் கமலத்துக்குள் பெண் தெய்வம். இவள் துர்க்கை. கௌரி. 'பிரக்ஞை வெளியில்' கதையில் தன் மனைவியிடம் அழகை மட்டுமல்லாமல் அடிக்கடி இவன் ஒரு பயங்கரத்தையும் சந்திக்கிறான். இந்தப் பயங்கரம் பேரழகு. இவள் பயங்கரம் கண்டு நகரத்திற்கு இவன் செல்கிறான். மீண்டும் அவன் அங்கு சந்திப்பது தன் மனைவியின் பெயரில் இன்னொரு சுசீலா. 'சாவில் பிறந்த சிருஷ்டி'யிலும் இந்த கௌரிதான். அவள் கணவன் கிழவன். பிறர் முன்னிலையில் அவன் தன்னை எவ்வளவு சிறுமைப்படுத்தினாலும் தாங்கிக் கொள்கிறாள். 'உறவு-பந்தம்-பாசம்' கதையில் வரும் கௌரியும் இத்தகையவள்தான். உண்மையில் மௌனியிடம் இயங்கும் இந்த உருவம், நெடுங்கால மரபில் தொடர்ந்து வரும் தாய்மை அல்லது தாய்த் தெய்வம் அல்லது சக்தி. பாரதி போன்ற பெரும் கவிஞர்களைக் கொள்ளை கொண்டவள் இந்த சக்தி. ஆற்றல் மிக்க இந்தப் பெண்ணை, தாய்த் தெய்வத்தை ஆண் கட்டி ஆள முடியாது. இவள் பேராற்றலுக்கு முன் இவன் தூசு.

6.

மௌனியின் கதைக்கலை பற்றி சிலவற்றைக் கூறவேண்டும்.

1. ஏற்கனவே நாம் பார்த்த 'இந்நேரம், இந்நேரம்', 'மிஸ்டேக்' ஆகியவை ஒருவகைக் கதைகள். இவற்றில் புற நிகழ்வுகள் விவரிக்கப்படுகின்றன. ஆசிரியர் கதைக்கு வெளியில் இருக்கிறார். புற நிகழ்வுகளை இணைக்கிற அர்த்த தளம், ஆசிரியரின் பார்வையையும் உணர்வையும் கொண்டிருக்கிறது.

2. 'குடும்பத்தேர்', 'குடைநிழல்' ஆகிய கதைகள் ஒற்றைப் பரிமாணம் உடையதாக இருந்தாலும் உருவ அளவில் நிறைவு உடையவை. இக்கதைகளில் எதார்த்த தளமும் உளவியல் தளமும் ஒன்றை மற்றது மீறாமல், ஒன்றோடு மற்றது பொருந்தி இயங்குபவை. இக்கதையின் உருவ அழகை இப்படித்தான் விளக்க வேண்டும்.

3. 'சாவில் பிறந்த சிருஷ்டி', 'பிரக்ஞை' ஆகிய கதைகளில் செயல்படும் கலையியல் சற்று வேறுவகையானது. சுப்பையர் ரயில் பயணத்தின் போது எதிரில் அமர்ந்திருக்கும் சுப்பு என்ற

இளைஞனையும், இளவயதுடைய தன் மனைவி கௌரியையும் தனக்குள் இணைத்துப் பார்த்துக் கொள்கிறார். சுப்பையர் வயது முதிர்ந்தவர். தம் வயதுக்குப் பொறுத்தமில்லாதவள் கௌரி. கௌரியும் சுப்புவும் இணைப்பொருத்தமுடையவர்கள். பிறந்தகத்தில் கலகலப்பாக இருக்கும் கௌரி தன்னோடு கலகலப்பாக இல்லை என்பது சுப்பையரின் ஆத்திரம். இளைஞனும் இவளும் தனக்குள் உறவாடிக்கொள்ளக் கூடும் என்பது இவரது அச்சம். ஆகவே இருவரையும் சீண்டுகிறார். ரயில் நின்றதும் தண்ணீர் பிடித்துவரச் சென்றவர் வேண்டுமென்றே நேரம் கழித்து அவசரமாக வந்து ஏறுகிறார். நேரம் தவறுவதன் மூலம் இருவருக்குள்ளும் உறவு ஏற்படும் என்று கற்பனை செய்துகொள்கிறார். இப்படி உறவு ஏற்பட்டால் அப்புறம் அவளை தான் வதைக்க முடியும். சுப்பையர் நினைக்கிறபடி அப்படி ஏற்படவில்லை. எனினும் தன்னைத் துன்புறுத்துகிற தன் மனத்தை என்ன செய்வார்?

பிரம்மா சிவன் கதை சொல்கிறார். நாம் எல்லோருமே சாவில் பிறந்த சிருஷ்டிகள் என்கிறார். பிறவியிலேயே நாம் சரியாக வார்க்கப் படவில்லை. வக்கிரங்களோடுதான் வார்க்கப்பட்டிருக்கிறோம். சுப்பு மாதிரிதான் சுப்பையரும். இளமையில் வக்கிரத்தோடு இருந்தார். சுப்புவின் வக்கிரம் தப்பில்லை கௌரியின் எதிர்வீட்டு சுப்புணி, எதிரில் அமர்ந்திருக்கும் சுப்பு, வயதான சுப்பையர் பெயர் வகையில் ஒப்புமைப்பட்டிருப்பதாகக் கூறியவுடன் ஓர் உண்மையை மௌனி நமக்குள் பளிச்சிட வைக்கிறார். வயது வேறுபாட்டாலும் இவர்களுக்குள் ஒத்த தன்மை. இவர்கள் எல்லோருக்குள்ளும் வக்கரிப்பு. இவர்கள் 'சாவில் பிறந்த சிருஷ்டிகள்'

'பிரக்ஞை வெளியில்' என்ற கதையில் கிராமத்திலிருந்து நகரத்திற்கு வந்த சேகர் கடற்கரையில் சுசீலாவைச் சந்திக்கிறார். இருவர்க்கிடையில் ஒருவரைவிட்டு மற்றவர் அகல முடியாத உறவு. கிராமத்தில் வாழ்கிற தன் மனையின் பெயர் சுசீலா. தன் கணவனைப் பிரிந்து வாழ்கிற சுசீலா எவ்வளவு மனத்துயர் அடைவாள் என்று நினைக்கிற நகரத்து சுசீலா. உணர்வளவில் இவன் மனைவியோடு ஒன்றிவிடுகிறாள். இவனைத் தன் கணவனாக தனக்குள் ஏற்கிறாள். கார்விபத்தில் இவன் இறக்கிறபோது அவள் கன்னி. எனினும் விதவை எனத் தன்னை உணர்கிறாள். இவள் கன்னி விதவை. இங்கும் பெயர் ஒன்றிப்பு என்பது மனிதர்களுக்கிடையில்

சிக்கலுக்குக் காரணியாகிறது. சங்கரன், கௌரி ஆகிய பெயர்கள் அர்த்தச்செறிவு உடையவை. கமலம், நிதானம், அழகு பொறுமை ஆகியவற்றை உணர்த்தக்கூடும். சுசீலா இதுபோலப் பொருள்படலாம்.

8.

'மாறுதல்', 'காதல் சாலை' ஆகிய கதைகளில் காகம், குருவி, நாய், ஆந்தை ஆகியவை பேசுகின்றன. சேதி சொல்லுகின்றன. மாறுதல் கதையில் வண்டி, ஆடு, எண்ணெய் வியாபாரி கொண்டு செல்லும் குடம் ஆகியவை மரணம் என்பதை ஏதோ ஒருவகையில் உணர்த்தும் குறியீடுகள். மனைவி இறந்து கிடக்கிறாள். பெற்றோர் வருகை எதிர்பார்த்துத் தெருவில் காத்திருக்கிறான். உணர்வுமயமாக இருக்கும் இவனுக்கு வழியில் செல்லும் மாட்டு வண்டியும் பிறவும் ஏதோ ஒருவகையில் குறியீடுகள். காதல் சாலையிலும் அவனுக்கு இதேபோன்ற மனநிலை. உச்சநிலையில் முரண் நிலையை உணரும் மனிதன் பார்வையில் பொருட்கள் வேறு அர்த்தங்களைச் சுட்டி நிற்கின்றன.

மௌனியின் பிற கதைகளில் இத்தகைய ஆற்றல் மிக்க குறியீடுகளை நிறைய எதிர்ப்படுகிறோம். 'அத்துவான வெளியில்' வீட்டில் எதிரில் பிரபஞ்சம் தழுவியிருக்கும் ஒரு மரம். மயான வெளியில் இன்னொரு மரம். அழியாச்சுடரில் தேவதாசிப் பெண். உலகியல் கடந்த உண்மை ஒன்றின் குறியீடு. மௌனியின் கதைகளில் வரும் குறியீடுகள், சமிக்ஞைகள் நூற்றுக்கணக்கில் இருக்கின்றன. தற்காலத் தமிழ் இலக்கியத்தில் உயர் அளவில் குறியீடுகளை உருவாக்கியவர் மௌனி என்று கூறலாம். எதார்த்த தளத்திலிருந்து கதை கலை இயல் என்ற தளத்தினுள் இயங்குகிறது. எதார்த்தத்தின் ஏதோ ஒரு அம்சத்தை இக்குறியீடுகள் உட்கொண்டிருக்கும் என்றபோதிலும் இக்குறியீடுகள் பன்முக அர்த்தங்களை உட்கொண்டிருப்பதாகத் தோன்றுவதன் மூலம் வாசகனிடம் புரிதலையும் அதேசமயம் புரியாமையையும் - ஆகவே நிறைய அதிர்வுகளையும் ஏற்படுத்துகின்றன. இவ்வகைக் கதைகளுக்காகவே மௌனி பெருமைப்படுத்தப்படுகிறார்.

எதார்த்த தளத்திலிருந்து இக்கதைகள் முற்றாக விடுபடவில்லை. அன்றியும் எதார்த்தத்துக்குள்ளிருந்து பீறிடும் நீரூற்றின் வழியே கலைத்தளத்திற்குள் மௌனி நம்மை இழுத்துக் கொண்டு செல்கிறார். இத்தகைய உணர்வுத்தளம் நம் வாழ்வியலுக்குள்ளும் வந்த தளம்

தான். 'பிரபஞ்சகானம்' 'அழியாச்சுடர்' கதைகளின் தளம் இதற்கு மேலும் நாம் அனுபவம் கொள்ளாத திசையில் நம்மைவிட்டு விலகிச்செல்கிற தளம். எதார்த்த தளத்திலிருந்து இதனை நாம் எட்டிப்பிடிக்க முடிவதில்லை.

9.

மௌனியின் கலையியல் பற்றிச் சொல்லும்பொழுது, இவர் கதைகளில் அடிக்கடி இடம்பெறுகிற 'பாழ்பட்ட வசீகரம்' என்ற தொடர் குறிப்பிடத்தக்கது. 'விரோதம்', 'பயங்கரம்' போன்ற சொற்களும் சேர்ந்தே இடம்பெறுகின்றன. மௌனியின் கலை உணர்வில் இதை மையம் எனச் சொல்லலாம். கன்னி, விதவையாகிறாள். வசீகரம் பாழடைவதாகிறது. அற்புதமான அழகுடன் கட்டப்பட்டிருக்கிற கோட்டைகள், ஆணவத்தின் சின்னங்கள், அற்பங்கள். வாழ்க்கையின் மையத்தில் மரணம் இருக்கிறது. மரணத்தைத் தேடித்தான் வாழ்க்கை இயங்குகிறது. கலையிலும் அறிவிலும் பண்பாட்டிலும் மேம்பட்டவர்களாயினும் தேவதாசிகள் பாழ்பட்ட வசீகரங்கள். 'அழியாச்சுடரில்' வரும் பேரழகி, பாழ்பட்ட வசீகரம். இசையிலும் காவியப் பயிற்சியிலும் தன்னை இழக்கிற மனிதன் பாழ்பட்ட வசீகரம். பாழ்பட்ட வசீகரத்தினுள் பாழ் இயல்பாகப் பொருந்தி இருக்கிறது. வசீகரம் பாழ்பட்டுக்கொண்டிருக்கிறது. கௌரி தனக்குள் மற்றவரை இழுத்து அழிக்கிறாள். மௌனியின் கதைகள் அனைத்தும் இப்படி ஒரு முனையில் அர்த்தப்படுத்த இயலும் போலத் தோன்றுகிறது. இதன் ஆழத்தில் மௌனியின் கருத்தியலை நாம் உய்த்துணர முடியும். மௌனிக்குத் தன்கால உலகம் பிடிபடவில்லை. தன் காலச் சமூக அளவில் நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தோடு, அல்லது பகுத்தறிவு இயக்கத்தோடு அவருக்கு ஈடுபாடு இல்லை. கடவுள் பற்றிக்கூட அவருக்கு நம்பிக்கை இருந்ததாகத் தெரியவில்லை. தன்கால வரலாற்றுச் சூழலில் அவர் மனம் ஒன்றவில்லை. சூழலிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டவர் மௌனி. கணிதத்திலும் அதன்பிறகு இசையிலும் தத்துவ நூல்களிலும் இத்தகைய அருவங்களில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். இவற்றின் வசீகரித்தலில் ஆழ்ந்தபோது புறவாழ்க்கை அவரைப் பொறுத்தவரையில் அர்த்தமற்றது.

தூய்மையின் இயற்கையழகில் அவர் மனம் தோய்ந்திருந்தார். அல்லது இந்த இயற்கை அழகைக்கூட அருவப்படுத்தி இந்த

அருவத்தின் அழகை அவர் கண்டிருக்க வேண்டும். குறியீடுகளை இத்தகைய மனம் அதிக அளவில் உற்பத்தி செய்துகொள்ளும். இத்தகைய மனிதர் தம்மைத்தாமே கடவுளாக அல்லது பிசாசாகத் தண்டித்துக் கொண்டவர். ஆய்வுக்காகத் தன் ஆன்மாவை பிசாசிடம் ஒப்படைத்துக் கொண்ட ஃபாஸ்டஸ் மாதிரி மனிதர் இவர். இவரைப் பலரால் நெருங்க முடியாது என்றாலும் ஒரு நாகரிகத்திற்கு, முனைப்புக் கொண்ட இத்தகையவர் தேவை.

10.

'எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்' என்ற வாசகத்தின் தொனிக்குள் நாம் பிளாட்டோவின் கருத்தியலைக் கேட்க முடியும். மேல் உலகில் களங்கமற்ற தூய வடிவங்கள் இருக்கின்றன. மண்ணுலகில் இவற்றின் பிரதிபலிப்புகள் களங்கத்தோடு குறையுடையதாய் உருவம் தரிக்கின்றன. பிளாட்டோவின் இந்தக் கோட்பாட்டை சங்கராரின் அத்வைதத்திற் குள்ளும் நாம் காணலாம். குறைகளோடு, களங்கங்களோடு தெரிகிற மனிதனுக்குள் / உயிர்களுக்குள் ஆழ்ந்து செல்லும்பொழுது குறைகளற்ற தூய வடிவத்தில் துலங்கும் பிரம்மத்தை தரிசிக்க முடியும். பிரம்மம் என்ற பேரொளி உள்ளே மறைந்து கிடக்க, வெளியில் நாம் நிழல்களாய் உலவுகிறோம். பெர்க்லி என்ற மெய்யியலாளரை மௌனி விரும்பிப் படித்ததாகக் கூறப்படுகிறது. புற உலகம் எத்தகையதென்று நமக்கு உண்மையில் தெரியாது. நம் புலன்களில் படுகிற உலகம்தான் நமக்குத் தெரிகிறது. நம் உணர்வுகள் உண்மையானவை. புற உலகத்தின் உண்மை பற்றி நாம் உறுதி சொல்ல முடியாது. இப்படிக் கருதியவர் பெர்க்லி. புற உலகத்தோடு, சமூகத்தோடு உறவு கொள்ளாமல் மௌனி வாழ்ந்தார். கணிதத்திலும் இசையிலும் படிப்பிலும் தன்னைப் பெருமளவில் ஈடுபடுத்திக் கொண்டார்.

இளமைக்கால அனுபவங்கள் என்று சொல்லக்கூடிய அனுபவங்களைப் பற்றிய நினைவுகளோடு மட்டும் இவர் வாழ்ந்துகொண்டிருந்தார். தன்னைச் சூழ உள்ள சமூகச்சூழலில் தன் ஆக்கத்திறனை வளர்க்கக்கூடிய தூண்டல்களை இவர் காணவில்லை. தனக்குள்ளேயே இவர் ஆழத் தேடிக்கொண்டிருந்தார். தனக்குள் தொடரும் மரபை இவர் புதுப்பித்துக் கொண்டார். உள்ளிருந்து ஒளியைத் தேடினார். மரணம் அடிக்கடி அவர்வீட்டுக்கதவைத் தட்டிக் கொண்டிருந்தது. தனக்குள் பிரபஞ்ச கானத்தைக் கண்டார். புற உலகை மறுத்ததன் மூலம் புற உலகின் ஆற்றல் தனக்குள் வந்து

இயங்குவதைத் தொலைத்துக் கொண்டவர். அக உலகக் கலைஞராகத் தன்னை உருவாக்கிக் கொள்ளும் முறையில் தன்னைத் தண்டித்துக் கொண்டார். மௌனியின் அகஉலகில் அர்த்தங்கள் குறைவு. அர்த்தங்களை மறைக்கிற ஒளியின் தோற்றங்கள் அதிகம். இந்த ஒளி உண்மை ஒளியல்ல.

*குறிப்பு : 1980–ன் தொடக்கத்தில் நெய்வேலியில் நடைபெற்ற 'மௌனி' கருத்தரங்கில் இடம்பெற்ற விவாதங்களின் தொடர்ச்சியாக எழுதிய கட்டுரை*

# அசோகமித்திரன் கதைகள்

1.

கதை சோகத்தில் முடியலாம் அல்லது கதை முழுவதும் சோகம் அல்லது கேலித்தொனி நிரம்பியிருக்கலாம். ஓர் உயர்ந்த கதைக்கு கேலித்தொனி பொருந்தி வராது. சோகமும் அதன் ஆழத்தில் இயங்கும் கருணையுமே பொருந்தி வரும். வீராசாமி கதையின் இறுதியில் கேலியே நிரம்பியிருக்கிறது. இதில் சோகம் ஏறியிருக்கலாம். 'புலிக்கலைஞன்', 'எலி' கதைகளில் சோகமும் கருணையும் நிறைகின்றன.

'பிரத்யட்சம்' கதையில் கேலி சோகமாகிறது. சோகம் கருணையாக வில்லை. மேலே கூறியதை மேலும் திருத்தமுறக் கூறலாம். கேலி மேம்போக்கான உணர்வு. சோகம் ஆழ்ந்தது. கருணை, மிக ஆழ்ந்தது. கலைக்கு மிக நெருக்கமான உணர்வு கருணைதான். சோகம் துன்பந்தரும். தொல்லை தரும். கருணை மனத்தை இயங்க வைக்கும். கட்டும். உறுதிப்படுத்தும். கேலியை சோகமாக்கினால் போதாது. சோகத்தைக் கருணையாக்க வேண்டும். இதற்கு ஆழ்ந்து பார்க்க வேண்டும்.

'மணல்' கதையில் சோகமே நிறைகிறது. கருணை நிறைந்தால் மட்டுமே அது உயர் படைப்பாகும். (தமிழவன் பார்வையில் – வீராசாமி கதை, சரோஜினி கதை : அதன் Ligocal description க்காகச் சிறந்த கதையாகும். புலிக்கலைஞன் கதை அவருக்குத் தொந்தரவு தரும். எலிக்கதை கோபமூட்டும். அரசியலைக் கேவலப்படுத்துதலுக்காக – (பிரத்யட்சம் அமெரிக்க நாகரிக விமர்சனமாக எஞ்சும். எனக்கு இது ஒத்துவராது.)

அசோகமித்திரன் கேலி, சோகம், கருணைக்கிடையில் தவிக்கிறார். எல்லாக் கலைஞர்களையும் போலவே. ஓர் உயர்கலைப் படைப்பில் கருணையைக் கற்றுக்கொள்வதைத் தவிர வேறு என்ன கல்வி இருக்கிறது? காலம், இடம், மனிதர்கள், உறவுகள் பற்றிய கல்வியை ஒரு கலை தருவது தேவையாகக் கூட இருக்கலாம். இவற்றை வேறிடத்திலும் கற்றுக் கொள்ளலாம். நிறுத்தி நிதானமாகப் பயிலக்கூடிய கலையின் தகுதிக்குக் கருணைக் கல்வியே பொருத்தம். காலம், இடம் பற்றிய கல்விகூடக் கருணையைக் கற்பிப்பதற்கான வழி – களம் தான். கருணைதான் ஆழமான, விரிந்த பார்வையைத்

தருகிறது. இதைக் கற்றுத்தருவதற்குத் தான் சரியான காலம், களம் பற்றி விரிவான விவரங்கள் தரவேண்டியிருக்கிறது.

2.

'விமோசனம்' (குருஷேத்ரம் தொகுப்பில்) கதையில் சரஸ்வதி கோபித்ததில் என்ன தப்பு? அந்தக் கோபத்திற்காகக் கூட அவள் எவ்வளவு புலம்புகிறாள்? அவள் தண்டிக்கப்படலாமா? கணவன் கோபம் உடையவனாக இருக்கலாம். ஆனால் இவளுடன் அவன் வாழக்கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! கருணைதான் கலையின் ஊற்று என்று அசோகமித்திரன் கருதியிருந்தால் கதையை இப்படி முடித்திக்க முடியுமா? கணவனின் – அவன் கணவனாகவே இருப்பதாகிய – குணத்திலேயே ஊன்றிக் கதை சொல்வதன் நோக்கம் சரிதானா? வேறுநோக்கம் ஏன் விரியவில்லை?

யதார்த்த வகைக் கதை, கோபத்திலும், கேலியிலுமே நிலைத்திருக்க வேண்டுமா? அரசியலுக்கு – இன்றைய நடைமுறை. அரசியலுக்கு இது தேவைதான் – ஆனால் சரியான அரசியலுக்கு இது போதுமா? ஒரு பாத்திரத்தின் களமாகிய காலம், இடம் ஆகிய சூழல் ஒரு கதைக்கு அவசியம் என்பதில் எனக்கு மறுப்பில்லை. இதை நானேகூட இன்றைய நிலையில் புரிந்துகொள்கிறேன். இதைப்புரிந்து கொள்வதற்கான அறிவு இன்று எனக்குச் சாத்தியம். இன்று என் கோபத்தைக் கிளறி விடுவதாகிய கலை எனக்குத் தேவையில்லை. கோபத்தால் நான் சிதைகிறேன். என் காரியங்கள் சிதைகின்றன. எனது பொறுமை கனமேற வேண்டும். என் நியாய உணர்வு மேம்பட வேண்டும். எனது ஆவேசம் கோழையின் ஆவேசமாகிவிடக்கூடாது. பலவீனனின் ஆவேசமாகிவிடக்கூடாது. நீதிமானின் ஆவேசமாக இருக்க வேண்டும். ஒரு குற்றவாளியின் ஆவேசமல்ல; ஒரு நீதிபதியின் ஆவேசமாக இருக்க வேண்டும்.

வீராசாமி சோம்பேரி. வேலை கிடைக்காமல் மனைவியின் சம்பாத்தியத்தில் சாப்பிட்டு சோம்பேறியானவன் இவன். வேலை இல்லை. கிடைக்கவில்லை. இது அவனது இளமை முதல் தனக்குள் இவனை மாட்டி வைத்திருக்கிறது. இதனால்தான், இவன் மனைவியைச் சுரண்டுவதை மனைவி எதிர்க்கும்போது அவளை அடிக்கத் துடிக்கிறான். இதற்கு இவன் என்ன செய்வான்? இதற்கு விதி என்று பெயர் வைத்தவர்கள் பார்வை நம்முடையதைவிட விரிவானது, வளமானது. அது நிலவுடமைவாதம் என்பதில் பயனில்லை. இந்நிலையில், கோபமே உருவமாக அவன் இருந்துவிட

மாட்டான். மனைவியை அடித்ததற்காக, அப்புறம் தான் இப்படி இருப்பதற்காக, வேலையில்லாததற்காக அவன் வருந்துவான். காரணங்களை அறியத் தொடங்குவான். தன்னை மாற்றிக்கொள்ள முடியாதபோது துடிப்பான். இவன்தான் மனிதன். இப்படிப் பார்ப்பதுதான் மனிதப் பார்வை, சமுதாயப் பார்வை, வரலாற்றுப் பார்வை, தத்துவப் பார்வை.

வீராசாமிக்குள் இருக்கும் மனிதனைத்தான் கலை தேட வேண்டும். அவனுக்குள் மாட்டிக் கொண்ட ரௌடியை - கோழையை - வஞ்சகனைக் கண்டறிவதற்குக் கலை வேண்டாம். அதற்குப் போலிசும், சட்டமும் போதும்.

அசோகமித்திரன் ஒரு கட்டுரையில் கூறுகிறார், "மக்கள் வாழ்க்கையில் வேற்றுமைகள் இயற்கையில் ஏற்பட்டதாகும். அந்தந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப, சீதோஷ்ண நிலைக்கேற்ப வெளியார் படையெடுப்பு மற்றப் பொருளாதாரக் கலாச்சாரப் பாதிப்புக்கு ஏற்ப வேற்றுமைகள் இருப்பது வெறுக்கத்தக்கதாகாது"

இது ஒரு கடுமையான பிரச்சினை. இலக்கியவாதிகளுக்கு முன்னர், அவர்கள் தெரிந்தோ, தெரியாமலோ இந்தப் பிரச்சினை பூதாகரமாக வடிவெடுக்கிறது. பாத்திரங்களை உருவாக்குவதில், அவர்களின் வளர்ச்சியில், சூழ்நிலை சித்தரிப்பில் இப்பிரச்சினை முன்வந்து நிற்கிறது.

மனிதர்களைப் பற்றிய விரிவான பார்வை தமிழ் நாவலாசிரியர்களுக்கு இல்லை. நாவல் பெரிய உளச்சார்பு உடையது. மார்க்சிய வகை அறிவை இவர்கள் பயன்படுத்தவில்லை. எளிமையான (spantaneous) மார்க்சியமே இவர்களுக்குள் செயல்படுகிறது. மனிதர்களைக் கால, இட, பிரதேச, சமூகச் சூழலில் வைத்து எழுதுவது இலக்கியவாதி களுக்குத் தாமாகப் பழகிப்போன விடயம். இதற்கு ஒரு திட்டவட்டமான, தெளிவான, சரியான வரையறையை மார்க்சியம் தர முன்வருகிறது. இதை நாவலாசிரியர்கள் புறக்கணிப்பது, மனிதர்களைப் பற்றிய அக்கறையின்மையைத் தான் இறுதியில் காட்டுகிறது. இந்த வரையறைகள் தான் இறுதியானவை என்பதால் அல்ல; இந்த நெறிதான் சரியான நெறி என்ற முறையில். மனிதர்களின் பயணம், நோக்கு முதலியவற்றையும் இந்த நெறி தீர்மானிக்க வல்லது. அசோகமித்திரன் அறவே இதை 'உணர்வுபூர்வமாக' அறியாதவர்.

பாத்திரங்களின் சூழலை விரிவாக அசோகமித்திரன் தருகிறார், அவர் அறிந்தவகையில். அவர் கதைகளில் வரும் அளவு தரைமட்டத்தில் உள்ள மனிதர்களை வேறு யாரும் கதைகளில் கொண்டு வரவில்லை. இவை இரண்டும் அசோகமித்திரனிடம் சிறப்பான அம்சங்கள். மனிதர்களை அவர்களின் வரலாற்று, பொருளியல் சூழலில் வைத்துப் புரிந்து கொள்ளாததால் வரும் எல்லாப் பிரச்சினைகளும் அசோகமித்திரன் கதைகளில் நிறைய வருகின்றன.

3.

ஓர் இலக்கியவாதி என்ற முறையில் ஒருவர் அதிக அளவு செய்யக்கூடியது, மனிதர்களைப் பற்றியும், நிகழ்வுகளைப் பற்றியதுமான அவரது சிறப்பியல்பான பார்வையை நமக்குத் தருவதுதான். பார்வைதான் முதன்மையே தவிர விவரங்கள் அல்ல. அவர் பார்வைக்கான நியாயங்களை விவரங்கள் தருமே ஒழிய, விவரங்களுக்காக அவர் எழுதவில்லை. நமது வாழ்க்கையில் நாம் கண்ட விவரங்களுக்கு மேலான அர்த்தப்படுத்தலில் பழகியவர்க்கு, இலக்கியவாதியின் தேவை இன்றியமையாததல்ல. அசோகமித்திரன் நமக்கு வழங்கும் பார்வையின் சிறப்பியல்பு – தனித்தன்மை யாது?

மனிதர்களை, ஒரு பார்வையாளனுக்கே சாத்தியமான உயர் அளவில் வறட்சியாகப் பார்ப்பது அவர் பார்வை. மனிதர்களை, அவர்களின் கற்பனைகளை, கிறுக்குத் தனங்களை, வெறிகள் ஆகியவற்றிலிருந்து விலக்கிப் பார்ப்பது அசோகமித்திரனின் பார்வை. வாழ்க்கையை ஒரு கருத்தாக்கத்தில் அடைப்பது அவருக்கு உடன்பாடில்லை. வாழ்க்கை ஏதோ மேலான, வரலாறு தழுவிய லட்சியங்களுக்காக நடைபெறுவது என்பது அசோகமித்திரனுக்கு உடன்பாடில்லை. நாம் எதையாவது சாதிக்கப் பிறந்தவர்கள் என்ற மாயை அசோகமித்திரனுக்கு இல்லை. காதல் மயக்கம் அவர் கதைகளில் அறவே இல்லை.

சிலசமயம் தியாகிகள் – நாதமுனிமாமா – வருவார்கள். இவர்கள் அசோகமித்திரனின் சாரத்தில் வந்த மனிதர்கள் அல்லர். பாச்சா மாதிரி, ராஜகோபால் மாதிரி, சசிகலா மாதிரி நம்மைச் சூழ உள்ள வறட்சியை, அர்த்தமில்லாத தன்மையை இவர்கள் பார்த்துக் கொள்கிறார்கள். கடவுள் நம்பிக்கை அசோகமித்திரன் பார்வைக்குள் இல்லை. டார்வின் கொள்கையை விட மனிதனை போட்டி,

வன்முறையில் பார்க்கும் வகையில்தான் அசோகமித்திரனுக்கு உடன்பாடு. தன் மனிதர்களை அசோகமித்திரன் வறுமையில் வைத்தே பார்க்கிறார். ஒருவகையில் நம்பிக்கையின்மை என்ற இவர் பார்வை கூறுவது பாதி விளக்கம்தான்.

சரோஜினி போட்டோ ஸ்டூடியோகாரனைச் சந்திப்பது, காதலால் அல்ல – ஒரு பாதுகாப்புக்கு – தன்வீட்டுச் சூழலிலிருந்து தப்புவதற்காக. இவளை எல்லோரும் ஏறி மிதிக்கிறார்கள். இது இவருக்குச் சம்மதமில்லை. இந்த வறட்சிப்பார்வை (வறட்டுப் பார்வையல்ல) தமிழ் இலக்கியத்தில் இன்றைய சூழலுக்குள் தேவைதான். வெறும் விவரங்கள் நிறையத் தருவதுகூட இதனால்தானோ! வறட்சிப்பார்வையால் தானோ!

நிகழ்வியல் என்ற கோட்பாடு இவருக்கு அதிகம் பிடிக்கலாம். அசோகமித்திரன் நம்பிக்கை தருவதற்காக எழுதவில்லை. சமுதாய சீர்திருத்தம் கருதி எழுதவில்லை.

4.

ஒரு கலைப்படைப்பு, ஒரு குறிப்பிட்ட நிகழ்வை அல்லது பாத்திரத்தைத் தான் சித்திரிக்கிறது. ஒரு குறிப்பிட்ட சித்திரிப்பு, ஒரு பொதுப் படத்தை, பொது உண்மையைக் கொண்டிருக்கிறது என்ற முறையில் –

அசோகமித்திரன் கதைகள் இப்படி அமைகின்றன. சரோஜினி தனி நிகழ்வல்ல. பொது நிகழ்வு. எலி – ஒரு குறியீடு. அசோகமித்திரனின் சில கதைகள் அத்தகைய வாய்ப்பை வேண்டுமென்றே மறுத்து விடுகின்றன. உதாரணம்: 'மாறுதல்'. ஒரு கலைப்படைப்பு படைப்பாக உயர்வதும், தத்துவத்தரம் பெறுவதும் இம்முறையில். இதை அசோகமித்திரன் ஏன் இழந்துவிடுகிறார். தத்துவப்பார்வை கூடாது. பொதுவயப்படுத்தலில் உண்மையில்லை என்பதாலா? அசோக மித்திரனுக்கு இது ஒரு போராட்டம். இப்படிச் செய்கிறார். செய்ய மறுக்கிறார். இது அந்த அளவுக்கு நல்லதுதான். ஆனால் இந்தப் பிரச்சினைக்கான தீர்வு ஏன் இழுக்கிறது? இதை அசோகமித்திரன் பார்க்கத் தவறுகிறாரா?

ஒரு படைப்பு வெறும் விவரத்தொகுப்பு ஆகக் கூடாது. அதற்குள் தேர்வு செயல்பட வேண்டும். அதுவும் சரி. அந்தத் தேர்வு ஒரு நோக்கோடு, பார்வையோடு நடைபெற வேண்டும். இதுவும் சரிதானே! பார்வை – எப்படி? எது? அப்புறம் பிரச்சினை. அதுவும்

தேவைதான். தத்துவச் சிந்தனைக்குள் போனால் படைப்பாற்றல் செத்துவிடும் என்பது அசோகமித்திரனின் கொள்கை. இது பிரச்சினை. மறைத்துச் சொல்லுதல் ஒரு கதை உத்தி. மறைத்துச் சொல்லுதலே கலை ஆகிவிடாது. 'பிரத்யட்சம்' கதையில் இந்த உத்தி அருமையாகப் பயன்படுகிறது. அது தேவை அங்கு. ('மாறுதல்' கதையில் தேவையா?)

ஒரு கலை செய்யக்கூடிய காரியம் சிக்கலான சமூகச் சூழலில், நம் பங்கை, நம் நடைமுறையை நமக்கு உணர்த்திவிடுவதுதான். இந்தச் சமூகச் சூழலில் நமக்கான சாத்தியப்பாட்டையும் உணர்த்துவதுதான். வீராசாமி ஒரு அயோக்கியன் என்ற உணர்வை நமக்கு ஏற்படுத்தும்போது நமக்கு ஒரு எரிச்சல், வெறுப்பு மிகுந்திருக்கிறது. சாதாரண வாழ்க்கை எல்லைக்குள் ஒரு வீராசாமியைச் சந்திக்கும்போது நமக்கு உடனடிப் பிரதிபலிப்பாக ஏற்படுவது எரிச்சல்தான். நிகழ்வுக்கும், கலைக்கும் இடையிலான ஒரு வெளியில் இது நிகழாது.

கலை அவனை செயலுக்குத் தூண்டுவதற்கு முன்னர் அவனைப் பக்குவப்படுத்தட்டும். வாழ்க்கை அனுபவங்களை எதிர்கொள்வதற்கும், பொருள்படுத்தவதற்கும், மனிதர்களை நேசிப்பதற்கும், உயரிய வாழ்க்கை பற்றிய ஆர்வத்தையும், அறிவையும், வாழ்க்கை எல்லைக்குள் காலமும், வரலாறும் வந்திருப்பதையும் அவனுக்கு உணர்த்தட்டும். வெற்று ஆவேசம் அவனைக் குலைக்கும். கலை தனது இத்தகைய மேம்படுத்தும் செயலைப் புறக்கணித்துவிடக் கூடாது. பயிற்சி கொடுக்காமல் துப்பாக்கியைக் கையில் கொடுக்க வேண்டாம். வீராசாமி, சரோஜினி, சுப்பு இவர்களுக்குள் நம்மை உணரச் செய்வது உயரிய கலை. இல்லாவிட்டால் இது துணைப் பாடநூல்.

5.

அசோகமித்திரன் கதையாகாத, கதையல்லாத கதைகளை நிறைய எழுதியிருக்கிறார். அதிக அளவு இணைவு இல்லாத சில நிகழ்ச்சிகளின் – அர்த்தப்படுத்த முடியாத சில நிகழ்ச்சிகளின் கோவைகளை நிறையப்படைத்திருக்கிறார். ஒரு எழுத்தாளரிடம் இதன் சதவீதம் அதிகமாகிவிடக்கூடாது.

'இன்னும் சில நாட்கள்' தொகுப்பில் 'குருவிக்கூடு' இன்னும் முடியவில்லை. 'விழா' போன்றவை முதல், இடை, முடிவு

இணையவில்லை. 'காட்சி' இணையவில்லை. 'சார் சார்' கதையாகிறது. Melodramatic. 'வரவேற்பறை' இணையவில்லை. 'விரிந்த வயல்' சரியாக இணையவில்லை. குழப்பமே மிச்சம். 'தப்பமுடியாது' பரவாயில்லை. இந்த அம்சத்தை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் கதைகளின் பகுதிகள் ரசனைக்குரியவை. 'விழா'வில் பிரதமர் பற்றியக் குறிப்புகள் குழறுபடியாக இருக்கிறது. இது ரசிக்கத்தக்கதாக இல்லை. 'தொழிலாளிக்குப் பிள்ளை' குறும்புத்தனமானது. 'நட்சத்திரத்தில்' சினிமா நட்சத்திரத்தின் முகத்தில் புளி, மருத்துவமனையில் குழந்தைப் பகுதி, உருக்கமானது. 'காட்சி'யில் முதற்பகுதி – தொல்லை. கடைசிப் பகுதி – காவியத் தன்மையுடையது.

இப்படியே...

ஒரு எழுத்தாளன் தகுதியை எடுத்தக் காட்ட, சில கதைகளும், சில கதைகளின் சில பகுதிகளும் போதுமானது என்றால் – இப்படியும் இருக்க முடியும். அசோகமித்திரன் தகுதியை நாம் பாராட்ட முடியும். 'நட்சத்திரம்' கதையில் பையன் குணமாகித் திரும்ப வேண்டும் (தன் மகனுக்கு அம்மை வந்திருக்க வேண்டும். இது குரூர ரசனைதானே) அதற்காகவே இவனைப் பாராட்டும்படி நேர்ந்திருக்க வேண்டும். அப்போது இவனின் இளிவரல் நிலைமை இவனுக்கே சங்கடமாக வேண்டும். (பல கதைகளை மறுஉருவாக்கம் செய்யமுடியாது போலத் தோன்றுகிறது)

6.

பல வருடங்களாக அசோகமித்திரன் கதைகள் எழுதுகிறார். இந்தக் கால எல்லைக்குள் அசோகமித்திரன் ஒருவராகத்தான் இருந்திருக்க முடியுமா? இவருக்குள்ளும் மாற்றங்கள் இருந்திருக்க முடியும். அந்த மாற்றங்கள், மாறுதல்களை ஏதாவது வரைபடம் போல முறைப்படுத்த முடியுமா? அல்லது மாறுதல்களுக்கிடையில் மாறாத ஒரு அசோகமித்திரனை எடுத்துக்காட்ட முடியுமா?

இது மிகச்சிரமமான பிரச்சினை.

நடை – சில சமயங்களில் ஆவேசம். பல சமயங்களில் அடக்கம். சிறுசிறு வாக்கியங்கள் உணர்ச்சியற்ற வாக்கியங்கள். – தனித்தன்மை. இம்முறையில் அசோகமித்திரனில் இருந்து ஒரு தேர்வைச் செய்ய முடியும். அசோகமித்திரனிலிருந்து ஒரு கையடக்கப் பதிப்பு வேண்டும்.

7.

மொாத்தத்தில் இலக்கிய வாசிப்பும், பயிற்சியும், விமர்சனமும் எதில் போய் முடிவடைய வேண்டும்?

இலக்கியச் சேகரிப்பில் அல்ல. பெருமையிலோ, புளகாங்கிதத்திலோ அல்ல. சமுதாயத்தின் தரத்தை உயர்த்துவதிலோ அல்ல. வாசகன், பயிற்சியாளன் தன்னை அறிவதில், தன்னைத் தயாரிப்பதில், தன்னை மேம்படுத்திக் கொள்வதில், தன் உள்ளத்தையும் தெரிந்து வைத்துக் கொள்வதில், தன்னைச் சூழ உள்ள மனிதர்களை நேசிப்பதில், புரிந்து கொள்வதில், காலத்தோடும், வரலாற்றோடும் தான் இணைவதில், தன் தற்பெருமை, ஆணவம் ஆகியவற்றைக் கழற்றி வைத்துக் காலாற நடத்தலில் முடிவடைய வேண்டும். மனிதர்களை உயர்ந்த பீடத்தில் உயர்த்திவிட்டு அவர்களைச் சுமக்காததில், இப்படியாக...

இடைவழியில் இலக்கியத்தை என்ன செய்கிறோம்? நமக்கென நமக்கானதென, ஒரு பார்வையை உருவாக்கிக் கொள்கிறோம். அந்தப் பார்வையின் வழியே நமக்குத் துணையானதென அசோகமித்திரனில் மற்றவர்களில் ஒரு தேர்வைச் செய்கிறோம். இதை கனமாக இல்லாமல், எளிதாக ஏற்கிறோம். (சுமக்கவில்லை) நமது மனித உறவுகளில் இந்த இலக்கியப் பண்புகள் ஏதாவது பாதிக்குமாறு இடம் தருகிறோம். நாம் தவிர்க்க வேண்டியது - வாத்தியார் ஆதல், வியாபாரியாதல். அசோகமித்திரன் இதற்குப் பயன்படுகிறாரா? நிதானமாகவே மதிப்பிட வேண்டும்.

இடைப்பிறவரல் :

நிச்சயமாக ஒரு எழுத்தாளன், தான் வாழும் காலம், அதன் வரலாறு, தன் காலக் கடமை - இப்படியாக . . . அரசியல், பொருளாதாரம் முதலியவற்றை அறிந்திருக்க முயற்சி செய்ய வேண்டும். மனித உறவு சிக்கல்களை இப்படி அறிந்திருக்க வேண்டும். முன்னைய எழுத்தாளர்கள், அவர்கள் எடுத்த பிரச்சினைகள் முதலியனவும் தெரிந்திருக்க வேண்டும். இது தொடக்க நிலைப் பயிற்சியாக இருக்க வேண்டும்.

*குறிப்பு : கட்டுரை எழுதிய காலம் இப்பொழுது நினைவில் இல்லை. எண்பதுகளின் தொடக்கத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

# அழிவின் தத்துவம்

1.

தோழர் எஸ். என். நாகராசன் அவர்கள் கடந்த பத்து ஆண்டுகளில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாகிய இந்நூலில், அவரது மையக் கருத்து என்ன? என்பது பற்றி அறிமுகம் என்ற முறையில் இங்கு சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன்.

நாகராசன் உயிரியல் கற்றவர், குறிப்பாக மரபியல் கற்வர், மரபியல் ஆய்விலும் ஈடுபட்டவர். கிராமத்தில் பிறந்து வளர்ந்தவர். வேளாண்மையோடு நெடுங்காலம் தொடர்பு கொண்டவர். 1954 முதல் மார்க்சியத்தோடு ஆழ்ந்த உறவு கொண்டவர். மார்க்சியக் கட்சிகளோடு அவருக்கு உறவும், பிரிவும் உண்டு. சோவியத் யூனியனின் தகர்வு அவரது மார்க்சியம் குறித்த நம்பிக்கைகளை ஆழப்படுத்தியுள்ளது. மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றல்களை வகுக்கவும், தொகுக்கவும் அவருக்கு அது தூண்டுதலாயிற்று. அவரது வைணவச் சார்பு, மார்க்சியத்தை மரபோடு சேர்த்துக் கற்றுக்கொள்ள உதவியாய் இருந்திருக்கிறது. சமய நம்பிக்கை எதுவும் அவரிடம் எஞ்சியிருக்கவில்லை. இந்நூலின் கட்டுரைகளைச் சரியான பார்வையில் நண்பர்கள் புரிந்துகொள்வதற்கு இந்த விவரங்களை இங்கு தருவது தேவையாக இருக்கிறது.

நவீன அறிவியல் தொழில் நுட்பம் குறித்த மார்க்சியக் கண்ணோட்டம் பற்றிய இக்கட்டுரைகள் இரண்டு பகுதிகளில் அடங்குகின்றன. அறிவியல் பற்றிய அவரது பொதுவான கண்ணோட்டம் முதற்பகுதியிலும் நவீன அறிவியல் தொழில் நுட்பம் குறித்த அவரது சிறப்பான பார்வை இரண்டாவது பகுதியிலும் இடம் பெறுகின்றன. தன் கட்டுரைகளைச் சிலசமயம் ஆங்கிலத்திலும், சில சமயம் தமிழிலும் எழுதுகிறார். தமிழகத்திற்கு வெளியில் கருத்தரங்கத் தேவை கருதி ஆங்கிலத்தில் எழுதுகிறார். இந்தக் கட்டுரைகளைத் தமிழில் மொழிபெயர்த்து இங்கு தருகிறோம். மொழி பெயர்ப்பில் எனக்கும் நண்பர் சிங்கராயருக்கும் பங்குண்டு.

தமிழகத்தில் 1980 வாக்கில் மக்கள் அறிவியல் என்ற அமைப்பை நாகராசன் அவர்களின் நெறிப்படுத்தலில் கோவையில் தொடங்கினோம். கல்பாக்கத்திலும், மதுரையிலும் இந்த அமைப்பின் கிளைகள் உருவாயின. மக்கள் அறிவியல் இயக்கத்தின் சார்பில்

நாகராசன் முதலியவர்களின் சிறப்பான கட்டுரைத் தொகுப்பு ஒன்று கோவையிலுள்ள யாழ் நூலகத்தின் வழி வெளிவந்தது. இந்த சமயத்தில் தான் மக்கள் அறிவியல் என்ற கருத்தாக்கம் தமிழகத்தில் வலுவாக உருவாயிற்று.

இந்தியாவில் தொழில் வளர்ச்சி குறைவாக இருப்பதற்குக் காரணம் மக்கள் மத்தியில் விஞ்ஞான மனோபாவம் இல்லை. ஆகவே மக்கள் மத்தியில் விஞ்ஞான மனோபாவத்தை உருவாக்க வேண்டும் என்ற முறையில் நேருவின் தலைமையில் விஞ்ஞானிகளும், சமூக இயலாளர்களும் கூட ஒரு அறிக்கை வெளியிட்டனர். இந்த அறிக்கை இந்தியாவில் பரவலாக விவாதிக்கப்பட்டது. இக்கருத்திற்கு உடன் பட்டும் எதிர்த்தும் மெயின் ஸ்டீரீம் இதழில் முதன்மையாகவும் வேறு சில இதழ்களிலும் தொடர்ச்சியாகவும் கட்டுரைகள் வெளிவந்தன. இந்தக் கட்டுரைகளை தொகுத்து பரிமாணம் சார்பில் ஒரு நூலை நாங்கள் கொண்டுவர முயன்றோம். நூலும் வெளியாயிற்று. இந்தச் சூழலில் தான் நாகராசன் நவீன அறிவியல் தொழில் நுட்பம் குறித்த தன் கண்ணோட்டத்தை உருவாக்கி எழுதத் தொடங்கினார் என்பதை இங்கு குறிப்பது பொருந்தும். முதன் முதலாக 63–64ல் நாங்கள் நாகராசன் அவர்களோடு தொடர்புகொண்டோம் உயிரியல் மாணவராகிய அவர் மார்க்சிய நோக்கில் மனிதனின் தோற்றம் குறித்து இடைவிடாமல் பேசுவதோடு எழுதியும் வந்தார். விலங்கிலிருந்து மனிதன் எம்முறையில் வேறுபட்டான் என்பது குறித்த எங்கெல்சின் சிந்தனைகளில் தொடங்கி, ஜோசப் நீதான், கிறிஸ்தோபர் காடுவெல் முதலியவர்களையும் மேற்கோள் காட்டிப் பேசினார். டார்வின் பற்றி அவருள் நிறையத் திறனாய்வுகள் இருந்தன. காடுவெல்லின் ஆய்வுகள் குறித்த அற்புத உணர்வோடு நாகராசன் பேசுவார். மார்க்சியத்தின் உள் ஆழங்களை இடையறாது தோண்டி எடுத்துக்கொண்டிருந்தார் காடுவெல். அறிவியலின் எல்லாத் துறைகளும் அவரது ஆய்வுகளால் ஒளி பெற்றன. காடுவெல்லை பெர்னால் முதலிய மார்க்சியர் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் வரலாற்றில் என்ன நேர்ந்தது என்பதை நாம் காணமுடியும். காடுவெல்லைச் சார்ந்தவர்கள் பின்னால் மாவோவை ஏற்றுக்கொண்டனர். பெர்னாலைச் சார்ந்தவர்கள் சோவியத் திரிபு வாதத்தில் ஆழ்ந்தனர். பரிணாமம் குறித்து இன்றுவரை தொடரும் சிக்கல்களில் ஆழ்ந்த அக்கறை

கொண்டவராக நாகராசன் இருப்பதில் வியப்பில்லை. இயற்பியல் கற்றவர்கள் இயந்திரவியல் பொருள் முதல்வாதத்தை எளிதாக ஏற்றுக்கொள்கின்றனர். உயிரியல் கற்ற நாகாசன் மார்க்சின் இயங்கியலுக்குள் ஆழமாகச் செல்லக்கூடியவராக இருக்கிறார். இந்தக் கட்டுரைத் தொகுப்பிலும் நாகராசன் அவர்களின் மார்க்சியப் புரிதலுக்கு அவர் கற்ற உயிரியல் கல்வி எவ்வாறு சிறப்பாகப் பயன்பட்டிருக்கிறது என்பதை நாம் காண முடியும்.

2.

நாகராசனுக்கு மரபியல் ஆய்வறிஞர் என்ற முறையில் டார்வினின் பரிணாமக் கோட்பாடு குறித்துத் தொடக்கம் முதலே மாறுபட்ட கருத்து இருந்திருக்கவேண்டும . டார்வினை மார்க்ஸ் பாராட்டினார் என்பது உண்மைதான். அதே சமயம் டார்வினோடு அவர் முரண்பட்டார். வலு உள்ளவைதான் வாழும் என்ற டார்வினின் கோட்பாடு முதலாளியம் பற்றிய ஒரு கேலிச் சித்திரம் என்று எங்கல்ஸ் எழுதினார். மால்தூசின் மக்கள் தொகை பற்றிய கோட்பாட்டை மார்க்ஸ் கடுமையாகச் சாடினார். இந்த விவரங்களோடு மேலும் ஒரு முக்கியமான உண்மையை நாகராசன் தொடர்ந்து சுட்டிக் காட்டுகிறார். உயிரினங்களின் பரிணாமத்தில் உயிரினங்களுக்கு இடையில் நடைபெறுவதாகச் சொல்லப்படும் போட்டியைக் காட்டிலும் கூட்டுறவு/ஒத்திசைவுக்குக் கூடுதலான இடம் உண்டு என்பது ரஷ்ய சமூகவியலாளர் ஆகிய குரோபோட்கினுடைய கொள்கை. இவர் அராஜக வாதம் என்ற மெய்யியலின் முதல்வர் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. தோழர் நாகராசன் ஒத்திசைவு என்ற கருத்தைத் தொடர்ந்து வற்புறுத்துகிறார்.

வலு உள்ளவைதான் வாழும், வாழ முடியும், வாழ வேண்டும் என்ற கொள்கை வன்முறை சார்ந்த ஒரு மெய்யில் போக்கு. இந்தப் போக்கை, மனிதனுக்காகத்தான் பிற உயிர்கள் படைக்கப்பட்டன என்ற கிறித்துவத்தினுள்ளும், இறைவனால் வாக்களிக்கப்பட்வர்கள் யூதர்கள் என்ற யூத மதத்தின் கருத்தினுள்ளும், இருப்பதை நாகராசன் சுட்டிக் காட்டுகிறார். இந்த வன்முறைப்போக்குதான் பேக்கனினுள்ளும், டார்வினுள்ளும் ஆழப்பதிந்துள்ளதைச் சுட்டிக் காட்டுகிறார். இதன் நீட்சியைத்தான் மேற்குலகின் ஏகாதிபத்திய போக்கினுள் நாகராசன் காண்கிறார். இந்தப் போக்கின் தீவிரமான ஒரு வெளிப்பாடுதான் பாசிசம் என்கிறார்.

மேற்கத்திய மெய்யிலாகிய மார்க்சியத்தினுள்ளும் இயல்பாகவே இந்தப் போக்கு பதிந்திருப்பதை எடுத்துரைக்கிறார். உற்பத்திச் சக்திகளின் பெருக்கத்திற்கு மார்க்ஸ் அழுத்தம் தந்தார் என்பது உண்மைதான். இந்தக் கருத்தினுள் மேற்கத்திய வன்முறை ஆதிக்கம் செயல்படுவதை நாகராசன் காண்கிறார். உற்பத்திச் சக்திகளின் பெருக்கம்தான் தொழில்புரட்சி. இந்தத் தொழில்புரட்சி உடன்விளைவு. இயற்கையை அறிவியல் தொழில் நுட்பம் கொண்டு மனிதன் அடக்கி ஆள வேண்டும். அப்பொழுதுதான் பொருள் உற்பத்தி பெருகும். இதன் காரணமாகத்தான் மனித வாழ்வில் இன்பமும், சுதந்திரமும் கூடும். உற்பத்திப் பெருக்கத்தின் விளைவாகத்தான் எல்லோருக்கும் எல்லாம் என்ற சோசலிசக் கனவு சாத்தியமாகும். மார்க்ஸ் இத்தகைய கருத்தாக்கங்களைத் தனக்கு ஆதாரமாகக் கொண்டிருப்பதை நாகராசன் சுட்டிக்காட்டுவதோடு இந்தப் போக்கை கூர்மையான திறனாய்வுக்கே உட்படுத்துகிறார். சீனாவ ின் டெங் தலைமையிலான கம்யூனிஸ்டு கட்சியையும், மற்றும் இந்தியாவிலுள்ள கம்யூனிஸ்டு கட்சிகளையும் திறனாய்வுக்கு உட்படுத்துகிறார். இங்கெல்லாம் மாவோ நெறிபற்றி நாகராசன் பேசுகிறார்.

எல்லாவகை ஆதிக்கங்களிலிருந்தும் மக்களுக்கு விடுதலை வழங்குவதாகிய மார்க்சியத்தினுள் இப்படி மறைமுகமாக ஆதிக்கம் வந்து தங்கி இருப்பதை நாகராசன் கண்டறிந்து சொல்லுகிறார். ஆதிக்கம் எந்த வடிவத்தில் இருந்தாலும் மக்களை அது அடிமைப்படுத்ததான் செய்யும். அடிமைப்பட்ட நிலையில் சுதந்திரம் பற்றிப் பேசமுடியாது. இயற்கையை அடிமைப்படுத்துவதன் விளைவாகவும் இப்படி அடிமைத்தனம் உருவாகி விடக்கூடும். இயந்திரங்களுக்குக் கூடுதலான இடம் கொடுப்பதும் அடிமைத்தனம்தான். மார்க்சியம் நம் காலத்தில் தீர்க்க வேண்டிய முக்கியமான சிக்கல் இது என்பதில் ஐயமில்லை. மாவோவின் நெறியில் இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கு நாகராசன் வழி காண்கிறார்.

*3.*

இந்த இடத்தில் பரிணாமக் கோட்பாடு பற்றி நாகராசன் முன்வைக்கும் இன்னொரு திறனாய்விலும் நம் கவனம் செல்லவேண்டும் டார்வினின் பரிணாமக் கோட்பாட்டை அப்படியே நாம் நம்ப வேண்டுமானால் உயிரற்ற பொருளிலிருந்து உயிர் தோன்றியது என்பதை நாம் நம்பியாக வேண்டும். இத்தகைய

நம்பிக்கை, தொடர்ந்து ஆய்வறிஞர்களால் கேள்விக்குள்ளாகிவருவதை நாகராசன் சுட்டிக்காட்டுகிறார். உயிரற்ற பொருளுக்கும், உயிர் இனத் தோற்றத்திற்கும் இடையில் கடக்க முடியாத ஒரு பாதாளம் இருப்பதைச் சுட்டிக் காட்டுவதோடு இங்கிருந்துதான் ஆன்மா கடவுள் முதலிய கருத்தாக்கங்கள் தோன்றி வலுப்பெற்றிருப்பதை நாகராசன் சொல்கிறார். இந்த இடத்தில் ஆன்மா அல்லது கடவுள் கருத்தை விட்டுவிலகித் தான் நாகராசன் மேற்செல்லுகிறார். (இந்த இடைவெளியை பெரும்பள்ளமென உணர்ந்த கிறிஸ்டோபர் காடுவெல் கூறிய கருத்தை நாகராசன் எடுத்துக்காட்டுகிறார். தெர்மோடைனமிக்சின் இரண்டாவது விதிக்கு எதிர்விதி என ஒன்று இருக்கவேண்டுமென்று காடுவெல் எழுதியிருக்கிறார் என்று இந்த விதி கண்டறியப்படுமோ? தெரியவில்லை).

இதற்கு மாறாக ஒரு செல் உயிரி ஆகிய அமீபா முதற்கொண்டு இறுதியில் மனிதன் வரையிலான பல்வேறு உயிரினங்களின் மட்டங்களில் செயல்படுவது என்ன? என்ற ஆய்வில் ஈடுபடுகிறார். எந்த உயிர் இனத்தினுள்ளும் பல்வேறு நுண் உறுப்புகள் ஒன்றுக்கு மற்றது உதவியாக, ஒன்று மற்றதோடு பொருந்தி செயல்படுவதைச் சொல்லுகிறார். தன் குறையைத் தானே கலைந்து கொள்ளும் திறன் இந்த உயிரியினுள் இயக்கம் கொண்டிருப்பதைச் சொல்லுகிறார். இதனுள் உற்பத்தியும் பகிர்வும் சமத்துவ முறையில் செயல்படுகின்றன. இதன்மூலம்தான் உயிர் இயக்கத்தினுள் சுதந்திரம் வாய்த்திருக்கிறது என்கிறார் நாகராசன். மார்க்ஸ் இதைக் காணவில்லை என்கிறார். உயிர்களினுள் செயல்படும் இத்தகைய இயங்கியல் பற்றிய அறிவை ஒயிட்ஹெட் வளர்த்தெடுத்தார் என்று கூறுகிறார். புற உலகின் தாக்கத்திற்கு எதிர் வினையாகவும், அதேசமயம் தனக்குள் சுதந்திரமான தன் இயக்கமாகவும் இப்படி உயிரி தன்னைப் படைத்துக் கொண்டதன் விளைவாகவே உயிரிக்கு, மனிதனுக்கு சுதந்திரம் வாய்த்திருக்கிறது. இத்தகைய மனித சுதந்திரம் பற்றி மார்க்சியர் அறிந்து கொள்ளவில்லை என்கிறார் நாகராசன்.

மனிதனின் படைப்புச் செயல்குறித்து மார்க்ஸ், மார்சியராவதற்கு முன்பே ஆழமாகச் சிந்தித்து எழுதியுள்ளார். அவரது பொருளாதார தத்துவக் கையெழுத்துபடிகள் (1844) பற்றித் தமிழகத்தில்/ இந்தியாவில் முதன்முதலாகப் பேசியவர், எழுதியவர் நாகராசன் என்பதை இங்கு சொல்லத்தான் வேண்டும். இந்த கையெழுத்துப்

படிகளில்தான் மார்க்சின் அந்நியமாதல் கோட்பாடு இடம் பெற்றிருக்கிறது. பின்னாளில் மார்க்ஸ் பொருளியல் ஆய்வில் முழு அளவில் தீவிரமாக ஈடுபட்டதன் மூலம் அந்நியமாதல் என்பதைத்தான் அவர் ஆழமாக விளக்கினார் மார்க்ஸ் முதன்மையாக மெய்யியலாளர். அடுத்தபடியாகத் தான் பொருளியல் ஆய்வாளர் என்ற உண்மையை நாகராசன் முன்பே சுட்டிக் காட்டியுள்ளார். இந்த கையெழுத்துப்படிகளில் தான் மனிதனின் படைப்புச் செயல் குறித்து மார்க்ஸ் விரிவாகப் பேசினார்.

விலங்குகளிலிருந்து மனிதன் வேறுபட்டிருக்கிறான் என்பது பொதுப்படையான உண்மை. தனது உடனடியான உடலியல் தேவைகளில் முடங்கியிருப்பது விலங்கு. ஆனால் உடனடித் தேவைகளுக்கு அப்பாலான படைப்புச் செயலில் ஈடுபடுவது மனித இனம். விலங்குகளுக்கு நேற்று இன்று நாளை என்பது இல்லை. மனிதனுக்குத்தான் எதிர்கால நோக்கங்கள் உண்டு. இசை முதலிய படைப்புச் செயல் என்பது மனிதனின் உடனடித் தேவைகளை நிறைவு செய்வதற்காக அன்று மனிதனின் இத்தகைய படைப்புச் செயல்தான் அவனை இயற்கையிலிருந்து விடுபட்ட சுதந்திரவான் ஆக்குகிறது. இங்கு உயிரியின் தன் இயக்கம் காரணமாக உயிரி/மனித உயிரி பெற்ற சுதந்திரம் பற்றி நாகராசன் கூறியுள்ளதை இணைத்துக் காண முடியும். ஆனால் இதைப் படைப்புச் செயல்தான் மீண்டும் முரண்பட்ட சமூகச் சூழலில் அவனை அடிமையாக்குகிறது. பொருள் உற்பத்தி பெருகப்பெருக மனிதன் பொருளுக்கு வசப்பட்டு அதற்கு அடிமையாகிறான். அந்நியமாதல் நேர்கிறது. இந்தப் பொருளை ஏன் படைத்தோம் என்று வேதனைப்படுகிறான். விலங்குகளுக்கு இந்த வேதனை இல்லை.

இந்த வேதனையிலிருந்து மனிதன் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும். இது மீண்டும் ஒரு சுதந்திரமான படைப்புச் செயல். இயற்கையிலிருந்தும், சமூகத்திலிருந்தும், இறுதியில் தன்னிலிருந்தும் அந்நியமான மனிதன் மீண்டும் இயற்கையையும், சமூகத்தையும், தன்னையும் தன்வயப்படுத்திக் கொள்வதன்மூலமே தன்னை முழுமையான சுதந்திரவான் ஆக்கிக்கொள்ளமுடியும். முழு உலகத்தையும் மனிதன் இப்படித்தான் தனக்குரியதாக மீட்டுக் கொள்ளமுடியும். பொருளுக்கு வசப்பட்ட அடிமை இதைச் செய்யமுடியாது. பொருளின் ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவன் தான் இதைச் செய்யமுடியும். தன்னைத்

தன் உடனடித் தேவைகளை இழந்தவன்தான் தன்னைப் பெறமுடியும். தன் சூழலை மாற்றமுடியும். ஏசு முதலியவர்கள் இன்றும் நமக்குள் வாழ்வதற்கு இதுதான் காரணம் இப்படி நாகராசன் தொடக்கம் முதலே நிறையப் பேசிவருகிறார்.

4.

உயிரியக்கத்தின் உந்து விசை என்ன? என்ற கேள்வி எழுப்பி நாகராசன் தரும் விடை இங்கு மிக முக்கியமானது. உயிரி தன்னியக்கத்தின் வழியேதான் தன் சுதந்திரத்தைப் பெறுகிறது. புறத்திலிருந்து பெறும் உடனடித் தேவைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறது. பொருளுக்கு அடிமைப்பட்டவனுக்கு விடுதலை இல்லை. மனிதன்தான் இந்த உலகத்தின் மையம் என்ற மெய்யியல் உண்மையல்ல. இயற்கையின் மீது ஆதிக்கம் செய்வதன் மூலம் தான் பொருள் உற்பத்தியைப் பெருக்கி மனிதன் தனக்கான விடுதலையைப் பெறமுடியும் என்பது முழு உண்மையல்ல. பொருட் பெருக்கம் சோசலிசத்திற்கு வழி திறவாது. மனிதனின் தேவைகள் குறித்து மார்க்ஸ் எங்கும் பேசவில்லை. பொருட்களின் பெருக்கம் தான் வாழ்வை நிறைவு செய்யும் என்றால், சிறுபான்மையான ஆதிக்கவாதிகளுக்குத் தான் இந்த உலகம் என்றைக்கும் சொந்தமாக இருக்கும். பெரும்பான்மையான மக்களுக்கு அடிமைத்தனம் என்பதுதான் என்றைக்கும் உரிய தண்டனையாக இருக்கும். சிறுபான்மையினரான ஆதிக்கவாதிகள் மற்றும் அரசியல் வாதிகள்தான் மக்கள் தொகைப் பெருக்கம் பற்றி ஓயாமல் பேசுகிறார்கள். எளிய வாழக்கை என்பதன் மூலம் தான் எல்லோருக்கும் எல்லாம் கிடைப்பது சாத்தியமாகும். எளிய வாழ்க்கை பற்றி மார்க்ஸ் பேசவில்லை. இது மார்க்சின் குறை என்கிறார் நாகராசன்.

சுதந்திரம் பிரிவுபடாதது என்ற மார்க்சின் கூற்றில் அடங்கியுள்ள பேருண்மையைச் சுட்டிக் காட்டுவதில் தோழர் நாகராசனுக்கு எப்பொழுதும் தயக்கம் இருந்ததில்லை. பொருளையும், அதிகாரத்தையும் கூடுதலாகச் சேர்த்துக் கொள்பவன் அவற்றிற்குக் கூடுதலாகவே அடிமைப்பட்டவன் ஆகிறான். இவனுக்கும் சேர்த்து விடுதலைக்காக பாட்டாளி வர்க்கம் பாடுபடத்தான் வேண்டும் என்றார் மார்க்சு. இயந்திரங்களுக்கு மனிதன் அடிமையாக முடியாது. இயற்கையை அடிமைபடுத்துவதன் மூலம் மனிதன் சுதந்திரத்தைப் பெறுவதில்லை. இப்ற்கையில் எல்லா உயிர்களோடும் ஒத்த உரிமை

உடையவனாகத்தான் மனிதன் வாழவேண்டும். இயற்கையின் ஓர் உறுப்பு மனிதன் என்பது மட்டுமல்ல இயற்கையும் இவனுக்குள் ஓர் உறுப்பாகி இருக்கிறது. ஓர் உறுப்பை அழித்த நிலையில் மற்ற உறுப்புகளுக்கு இயக்கம் இருக்க முடியாது. இம்முறையில் மனிதனும் இயற்கையும் ஒத்திசைவோடு வாழ வேண்டும். இதன் மூலம் தான் மனிதனுக்குச் சுதந்திரம் சாத்தியம். எல்லா உயிரினங்களுக்கும் உரியது இந்த உலகம். இப்படி ஆழமாக இங்கு பேசுகிறார். சுதந்திரம் பிரிவு படாதது என்ற மார்க்சின் கூற்றை மார்க்சின் நெறியிலேயே மார்க்சையும் கடந்து சென்று ஆழ்ந்த விரிவான தளங்களில் வைத்து நாகராசன் அர்த்தப்படுத்துகிறார். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ வேண்டும் என்ற கீழ்த்திசை அறிவை நாகராசன் இங்கு மார்சியத்தின் மெய்யிலாக்குகிறார். இங்குதான் இராமனுசர் என்றும் சங்கரர் என்றும் நாகராசன் பேசுகிறார். சங்கரரிடம் குறை காணுகிறார். இராமனுசரை மேன்மைப்படுத்துகிறார். மேற்கத்திய ராமாலல் என்பவரைச் சுட்டிக்காட்டுகிறார். புத்தரையும், ஏசுவையும் உலகம் மறக்காதென்கிறார்.

5.

**மா**ர்க்சியம் பற்றி நாகராசன் அவர்களின் இத்தகைய ஆழமான புரிதலுக்கு மூலம் என்று மாவோவைத்தான் சொல்லமுடியும். மாவோவில் தொடங்கி விரிவாக அவர் பயணம் செய்கிறார் என்றும் சொல்ல வேண்டும். உற்பத்தி சக்திகளுக்கு முதன்மை தருவது குறித்த மாவோவின் திறனாய்வு தான் மாக்சியத்தை வேறு தளத்தில் வைத்துப் புரிந்து கொள்வதற்கான அடிப்படை இங்கிருந்து தொடங்கித்தான் மேலைமார்க்சியம் கீழை மார்க்சியம் என்று பேசினார். மேலை, கீழை என்பது திசைகளை குறிக்கும் சொற்கள் அல்ல. இந்த சொற்கள் வழியே அரசியல் மற்றும் மெய்யியல் குறித்து நாகராசன் பேசுகிறார். இந்தச் சொற்கள் குறிப்புச் சொற்கள். உற்பத்தி சக்திகளுக்கும் பகை முரண்பாட்டிற்கும் அழுத்தம் தருவது மேலை மார்க்சியம். உற்பத்தி உறவுகளுக்கும் நட்பு முரண்பாடுகளுக்கும் அழுத்தம் தருவது கீழை மார்க்சியம் .மேற்கில் கிழக்குமுண்டு. கிழக்கில் மேற்குமுண்டு. மேற்கு அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் வழிபடுகிறது. பொருட் பெருக்கத்தை வேண்டுகிறது. இதன் வழியே ஆதிக்கத்தை உலகளவில் திணிக்கிறது. இந்தப் போக்கு மார்க்சியத்தினுள்ளும் பதிந்துவிட்டது. இதைக் களைந்தாக வேண்டும். உறவுகளுக்கு, மனிதனுக்கு, இயற்கைக்கு

முதன்மை தர வேண்டும். இந்தப் புரிதலோடு தான் நாகராசன் மேற்குலகின் மார்க்சியத்தை ஆணியம் என்கிறார். கிழக்குலகத்தின் மாவோவின் மார்ச்யத்தை பெண்ணியம் என்கிறார். இங்குதான் இருவகையான தொழில் நுட்பங்கள் என்றும், சக்திகள் என்றும் பேசுகிறார். அறிவியலையும் இருவகைப்படுத்துகிறார். மேட்டுக் குடிகளின் அறிவியல் என்றும், மக்கள் அறிவியல் என்றும் வேறுபடுத்துகிறார். ஆதிக்கத்தை உள்வாங்கிக் கொண்ட, மேட்டுக்குடிகளின் தேவைகளை நிறைவேற்ற ஆய்வில் ஈடுபடும் விஞ்ஞானிகளை வேசிகள் என்கிறார். இத்தகைய விஞ்ஞானிகளின் உளவியல் பற்றி விரிவாகப் பேசுகிறார்.

நவீன அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் குறித்த சிக்கலை தொழில்நுட்பச் சிக்கலாக மட்டுமே நாகராசன் பார்க்கவில்லை. தொழில் நுட்பச் சிக்கல் என்பது வர்க்கங்களாக முரண்பட்ட சமூகத்தின் சிக்கல்; வரலாற்றின் வழியே நமக்கு வந்து சேர்ந்திருக்கின்ற சிக்கல். இதன் காரணமாகத்தான் நாகராசன் இந்தக் கட்டுரைகளில் ஆதிக்கம் என்றும், வரலாறு என்றும், மார்க்சியம் என்றும் விரிவாகப் பேசுகிறார். அன்றியும் அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் நாகராசன் முற்றாக ஒதுக்குகிறாரா? என்ற கேள்வி எழுப்பினால் இல்லை என்று உறுதியாகப் பதில் சொல்ல முடியும். நேருவைச் சாடுகிற நாகராசன் காந்தியைப் பாராட்டுவது இதனால்தான். மாவோவின் மக்கட்போர் என்ற கருத்தாக்கத்தை ஒரு நுட்பமான கோட்பாடாக்கி ஏகாதிபத்தியத்திற்கெதிரான மக்கட்போருக்கு மட்டுமல்லாமல் தொழில் வேளாண்மை, கல்வி, மொழி, இலக்கியம் என்ற பல தளங்களுக்கும் அதை விரிவு படுத்துகிறார். ஐன்ஸ்டீனை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார். சோவியத் யூனியனில் நடைபெற்ற மக்கள் அறிவியலுக்கான ஆய்வுகளைச் சுட்டிக்காட்டுகிறார். லைசென்கோ பற்றி விரிவாகப் பேசுகிறார். இரண்டாம் உலகப் போரின் போது அணுகுண்டு வெடிப்பைத் தொடர்ந்து, நவீன அறிவியல் தொழில்நுட்பம் செய்துவரும் கொடுமைகள் பற்றிப் பேசுகிறார். அறிவியல் என்று நவீன அறிவியல் ஆயிற்று என்ற ஆய்வில் ஈடுபடுவதில் பயனில்லை. இயந்திரங்களுக்கு மனிதன் தன்னை உட்படுத்திக் கொண்ட காலம் முதலே மனிதன் வெறுத்துப்போனது தெரிகிறது. அறிவியல் ஆய்வையும், தொழில்நுட்ப ஆய்வையும் செய்பவர்கள் விஞ்ஞானிகள் என்பது உண்மைதான். ஆனால்

இவர்களுக்குள் தங்கியிருப்பது முதலாளியம், ஏகாதிபத்தியம், பாசிசம், வன்முறை, ஆணியம் என்பதில் ஐயமில்லை ஆகவே விஞ்ஞானிகளின் வாழ்வும், வணிகமாக, அடிமைத்தனமாக, வேசித்தனமாக மாறியிருக்கிறது.

நவீன அறிவியல் தொழில் நுட்பங்களின் ஆதிக்கம் இன்று மென்மேலும் பலமடங்கு அதிகரித்து வருகிறது என்பதில் ஐயமில்லை. பசுமைப்புரட்சி என்பது இந்தப்போக்கின் கூர்மையான ஒரு வெளிப்பாடு. உயிரித் தொழில் நுட்பங்கள் இனி உலகில் எதுவும் செய்ய முடியும். கணிணி தொடர்புச் சாதனங்களின் வெடிப்பு, தகவல் புரட்சி ஆகியவை நவீன அறிவியல் தொழில் நுட்பங்களின் மாபெரும் வெற்றி/ஆதிக்கம் என்று சொல்லலாம். இத்தகையதொரு பேராதிக்கத்தினுள் நாம் மாட்டிக்கொண்டுள்ளோம். இயற்கையின் மீது இவை செலுத்தும் ஆதிக்கத்திற்கு அளவு இல்லை. நுகர்வு வெறி நமக்குள் ஆழப்பதிந்துள்ளது. அரசின் எல்லைகளை இவை தகர்க்கின்றன. சந்தைப் பொருளாதாரம் உலகத்தின் மீது தொடுக்கப்பட்டுள்ள மூன்றாவது உலகப்போர். நவீன அறிவியல் தொழில் நுட்பங்கள் மூலம்தான் இந்தப்போர் நம்மீது தொடுக்கப்பட்டுள்ளது. இந்தப் போரிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்வதற்கு நமக்கு வாய்த்திருக்கிற மாபெரும் மெய்யியல் மார்க்சியம் தவிர வேறு இல்லை. சூழலியம், பெண்ணியம் முதலியவற்றை உள்ளடக்கிய மார்க்சியம்தான் நமக்குரிய மெய்யியல், இதைச் சொல்வதற்குத் தான் இந்த நூல். மாவோ நெறியை நமக்குள் உயிர்ப்பித்துக் கொள்கிற நாகராசன் அவர்களின் இந்த நூல் இன்று நமக்கு வாய்த்திருக்கிற பெரும்பேறு. இதை பயன்படுத்திக்கொள்வது அறிவுடைமை.

*குறிப்பு : மேற்கத்திய நவீன அறிவியல் தொழில் நுட்பத்தினுள் மறைந்திருக்கிற அழிவின் தத்துவம் பற்றி எஸ்.என். நாகராசன் தொடர்ந்து எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு 'அழிவின் தத்துவம்' என்ற நூல். 1997-ல் வெளியான இந்த நூலுக்கு எழுதிய அறிமுக உரை.*

# பெரியாரியமும் மார்க்சியமும்

*1.*

தமிழகச் சூழலில் கைகோத்து இணைந்து இயங்கவேண்டிய பெரியாரியமும் மார்க்சியமும் சில சந்தர்ப்பங்களில் இணைந்தும் பலமுறைகளில் முரண்பட்டும் செயல்படுவது, தமிழ் மக்களின் வாழ்வியல் மேம்பாடு குறித்துச் சிந்திக்கிற அனைவருக்கும் வருத்தம் தருகிற ஒரு நிகழ்வு ஆகும். பெரியாரியத்தின் சில கூறுகளும், மார்க்சியத்தின் சில கூறுகளும் இணைந்து செல்வது பற்றி அவ்வப்போது சிலர் கூறிக் கொண்ட போதிலும் இவ்விரண்டின் இணக்கத்திற்கான கருத்தியல்களும் குறித்து ஆழமான ஆய்வு, இதுவரை நடைபெற்றதாகத் தெரியவில்லை. இந்த இரண்டு கருத்தியல்களையும் எதிர்திசையில் நிறுத்தி முரண்பாடுகளை முதன்மைப்படுத்துபவர்கள் தமிழ் மக்களின் விடுதலைக்கு எதிரானவர்கள் என்பதிலும் ஐயமில்லை. தமிழகத்தின் இன்றைய சூழலில் பெரியாரியமும் மார்க்சியமும் இணைந்து வருவதற்கான தேவைகள் மிகுந்து வருவதையொட்டி, இந்த அடிப்படையில் சில கருத்துக்களை நண்பர்களோடு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

*2.*

பெரியாரியம் இந்திய சமூகத்தைச் சாதியச் சமூகம்தான் என்று வற்புறுத்திக் கூறுவதை மார்க்சியர் அதே வடிவில் ஏற்பதற்கு இல்லை. வரலாற்றில் வர்க்க முரண்பாடு என்பதற்கு அழுத்தம் தரும் மார்க்சியர், சாதி என்பதை முற்றிலுமாக மறுப்பதும் இல்லை. மேற்கட்டுமானத்தின் ஒரு பகுதிதான் சாதி என்ற கருத்தை அண்மைக் காலத்தில் மார்க்சியர் கைவிட்டுவிட்டனர். சாதியும் வர்க்கமும் ஒன்றையொன்று ஊடுருவி உள்ளன என்ற ஒரு சில மார்க்சியரின் கருத்தை ஒதுக்கும் முறையில், சாதி என்பது வடிவம், வர்க்கம் என்பது உள்ளடக்கம் என்ற கருத்தும் கூட இன்று சில வட்டாரங்களில் முன்வைக்கப்படுகிறது. சாதி என்பது அடித்தளம் என்பதன் பொருளியல் கூறாகவும் செயல்படுவதை மார்க்சியர் சிலர் விளக்குகின்றனர். சாதிதான், வர்க்கம்தான் என்று ஒவ்வொரு தரப்பினரும் இறுக்கமான நிலைப்பாடு எடுப்பது தேவையில்லை யென்றே தோன்றுகிறது. சாதி ஒழிப்பு என்பதையும் வர்க்க போராட்டம் என்பதையும் இணைந்துச் செயல்படுத்துவதில் சிக்கல்கள் தீரவில்லை. சிந்தனையில் வைத்து இந்தச் சிக்கலைத்

தீர்ப்பது சாத்தியமில்லை. தீவிரமான செயல்பாட்டின் மூலமே தீர்வுக்காண வழி பிறக்கும்.

3.

இடையில் ஒன்றைச் சொல்லலாம். சாதியின் தோற்றம், வளர்ச்சி, தீர்வு பற்றிய ஆய்வை நிகழ்த்துவதற்கு மார்க்சிய ஆய்வுமுறையைத் தவிர வேறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. மார்க்சியர்களும் இயங்கியல் மற்றும் வரலாற்று பொருள்முதல்வாதம் முன்வைக்கிற ஆய்வுமுறை மிக முக்கியமானது என்று உறுதியாகச் சொல்ல முடியும். குறிப்பிட்ட எந்த வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் சாதி, மதம் மட்டுமல்லாமல் தனியுடைமை, அரசு முதலிய அமைப்புக்கள் தோன்றுகின்றன. எத்தகைய சூழலில் நிலைபெறுகின்றன. இவற்றின் தோற்றத்தோடும் வளர்ச்சியோடும் இன்றியமையாத உறவுடைய சமூகப் பிரிவுகள் யாவை? இவற்றின் தோல்வியும், அழிவும் எத்தகைய வரலாற்றுச் சூழலில், எத்தகைய போராட்டங்களின் வழியே நிகழும் என்பது பற்றிய மார்க்சிய ஆய்வுமுறையைத்தான் இந்தியாவில் சாதியம் பற்றிய ஆய்வுக்கும் பயன்படுத்த வேண்டும்.

இது குறித்து அம்பேத்கரின் ஆய்வு ஒன்றை இங்கு குறிப்பிடவேண்டும். இந்திய வரலாற்றின் தொடக்க காலத்தில் சில நூற்றாண்டுகள், சமூகத்தின் தலைமையை கைப்பற்றுவதற்காக பார்ப்பனர்களும் சத்திரியர்களும் ஒருவரோடு ஒருவர் கடுமையாகப் போராடினர். நாளடைவில இரு சமூகப் பிரிவினரும் ஒருவரையொருவர் அழித்துக் கொண்டிருந்த நிலையில் மற்ற சமூகப் பிரிவுகள் மேல் வருவதைப் பார்த்தனர். இனியும் நமக்குள் மோதல் நடப்பது கூடாது என்ற முடிவுக்கு வந்து தமக்குள் சமரசம் செய்து கொண்டனர். இப்படி செய்து கொண்டதன் மூலம் சமூகத்தின் தலைமையைத் தக்கவைத்துக் கொண்டனர். இந்திய வரலாறு இதன்பிறகு இதே கதியில் சென்றது என்று அம்பேத்கர் ஆய்ந்து உரைக்கிறார்.

இந்த ஆய்வுமுறை மார்க்சியத்திற்கு ஒத்த ஆய்வு முறை. தனியுடைமையும் அரசு அதிகாரமும் ஒரு பக்கம். கருத்தியல் இன்னொரு பக்கம். இரண்டும் கைகோத்து கொள்வதன் மூலம் சமூகத்தின் தலைமையைக் கைப்பற்றி நிலைநிறுத்திக் கொள்ள முடியும். எந்த ஒரு சமூகத்திலும் தனி ஒரு கருத்தியல் என்பது இல்லை. பார்ப்பனியம் போலவே சமணம், பௌத்தம், சைவம் என்பனவும்

அரசு அதிகாரத்தோடும் தனியுடைமையோடும் ஒத்துழைத்ததை வரலாற்றில் காண்கிறோம். இன்றைய வரலாற்றுச் சூழலிலும் இதே உண்மையைத்தான் விரிவாகப் பார்க்கிறோம். இன்றைய இந்திய அரசின் பொருளியல் முதலிய கொள்கையோடு ஒத்துழைக்காத கட்சி மற்றும் கருத்தியல் எது என்பது குறித்து நாம் தெளிவாக அறியலாம்.

தனியுடைமை, அரசு அதிகாரம் ஆகியவற்றோடு சாதியமும் இணைந்துதான் இந்தியாவில் செயல்பட்டன செயல்படுகின்றன. பார்பனியம் மட்டுமதான் என்று இல்லை. இன்னும் எத்தனையோ கருத்தியல்கள் இணைந்து செயல்படுகின்றன. இவற்றின் கூட்டிலிருந்து ஒன்றை மட்டும் தனியே பிரித்து ஒன்றை மட்டும் ஒழிப்பது சாத்தியமில்லை. இன்றைய முதலாளியத்தோடு சாதி இணைந்து செயல்படுகிறது. தேர்தலில் சாதி என்பது ஒரு முக்கியக் கூறு. தேர்தல் என்ற நடைமுறையை நம்பிச் செயல்படுபவர்கள் சாதியை ஒழிக்கமுடியாது / தடுக்கமுடியாது.

4.

பெரியாரியம் சாதி என்ற சிக்கலுக்கு மட்டுமல்லாமல் மதம், கடவுள், சடங்குகள், பார்ப்பனியம் முதலியவற்றுக்கும் அழுத்தம் தருகிறது. வரலாற்றில் இவை தானே தோன்றவில்லை, நிலை பெறவில்லை. இங்கும் மார்க்சிய ஆய்வுமுறை நமக்குப் பெரிதும் பயன்படுகிறது. உலக அளவில் உள்ள எந்த ஒரு சமூகத்திலும் மதம் இல்லாமல் கடவுள் நம்பிக்கை இல்லாமல் சடங்குகளை சார்ந்திராமல் இல்லை. கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். ஆன்மா முதலியனவும் குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலில் நமக்குத் தேவைப்பட்டு மனிதர்கள் தோற்றுவித்தக் கருத்தாக்கங்கள். சிலர் செய்த சதி என்ற அளவில் மட்டும் இவற்றை விளக்க முடியாது தனியுடைமையோ, அரசு அதிகாரமோ இல்லாமல் வரலாறு முன் செல்லவில்லை. முரண் இயக்கம் என்பது வரலற்றின் ஒரு முக்கியமான கூறு. சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகள் ஆண்டான் அடிமைத்தனம், போர்கள் முதலியவற்றோடு சேர்ந்துதான் அறிவியல் ஆக்கங்கள். நீர்ப்பாசனத் திட்டங்கள். கலை இலக்கியங்கள் என்று தோன்றின. ஒரு சேர இவை அனைத்தும் நல்லவை என்றோ தீயவை என்றோ சொல்ல முடியாது. இயற்கை, சமூகம் முதலிய சூழலில்தான் மனிதன் வாழ்கிறான். இவற்றை புரிந்துப் கொள்ளாமல் வாழ முடியாது. இதன் தொடர்ச்சியாகவே கடவுள், மதம், சடங்குகள் முதலியவை மனிதர்களால் படைத்துக் கொள்ளப்படுகின்றன. என்றைக்கும் இவை

ஒரே படித்தாக இருப்பதும் இல்லை. காலச்சூழலுக்கும் அறிவியல் வளர்ச்சிக்கும் தகுந்தவாறு இவற்றிலும் மாற்றங்கள் நிகழுகின்றன. வரலாற்றின் ஒரு கட்டத்தில் இவையனைத்துமே கேள்விக்குள்ளாகின்றன. இவை முற்றிலுமாக மறுக்கப்படுவதும் இல்லை. புதிய காலச்சூழலுக்கு ஏற்றவாறு இவற்றிலிருந்து சிலவற்றை நாம் எடுத்துக்கொள்கிறோம். சிலவற்றை மறுக்கிறோம்.

இவ்வகை ஆய்வு பெரியாரியத்தோடும் ஒத்துச் செல்லக்கூடியது என்றே கருத வேண்டி உள்ளது. தோழர் ஆனைமுத்து அவர்கள் தொகுத்த பெரியார் சிந்தனைகள் என்ற தொகுப்பிலிருந்து சிலவற்றை குறிப்பிடலாம்.

"வேதாந்தமும் கம்யூனிசமும் வேறுவேறு இல்லை. எல்லோரும் கடவுள் என்பது வேதாந்தம். கடவுள்களுக்கிடையில் பொருள் வகையில் ஏற்றத்தாழ்வேரு சாதி மற்றும் நிறம் என்ற வகையில் ஏற்றத்தாழ்வோ இருக்க முடியாது. கம்யூனிசமும் இதைத்தான் சொல்கிறது." இப்படியே மதமும் கம்யூனிசமும் வேறுவேறு இல்லை என்றும் பெரியார் விளக்கினார். "நாம் எல்லோரும் கடவுளின் குழந்தைகள் என்றால், குழந்தைகளுக்கிடையில் எந்த ஏற்றததாழ்வும் இருக்க முடியாது. எல்லோருக்கும் உலகம் சொந்தம். இதைத்தான் கம்யூனிசம் கூறுகிறது" என்று பெரியார் கூறுகிறார்.

மதம் என்பதைப் பார்ப்பனரோ, ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவரோ தம் தேவைகளுக்கு ஒத்த முறையில் பயன்படுத்துகிற அதே சமயத்தில் மதத்தின் உட்பொருள் குறித்து நாம் பார்க்கத் தவற முடியாது. இந்த அம்சத்திற்கு அழுத்தம் தருவதன் மூலம் மதபீடங்களுக்கு எதிராக மதங்களின் உட்பொருளை நாம் ஆற்றலோடு பயன்படுத்த முடியும்.

மதம் என்ற அமைப்பில் நடைபெறுவது வர்க்கப் போராட்டம் தான் என்று எங்கெல்ஸ் விளக்கினார். மதத்தின் உள்ளும், ஆதிக்கங்களுக்கு அனுசரணையான வலதுசாரிப் போக்கும், மக்களுக்கு அனுசரணையான இடதுசாரிப் போக்கும் ஒன்றோடு ஒன்று ஒத்தும் முரண்பட்டும் செயல்படுகின்றன. பார்ப்பனியத்தின் உள்ளும் இத்தகைய முரண்பாடு உண்டு. மக்களுக்கு அனுசரணையான இடது சாரிப் போக்குக்கு அழுத்தம் தருவதன் மூலம் வலதுசாரிப் போக்குகளை வெளிப்படுத்துகிற ஆதிக்கங்களை நாம் எதிர்க்க முடியும். மார்க்சியமும் கூட இவ்வகைப் புரிதலோடு

செயல்படுவது இல்லை. பெரியாரியரைப் போலவே இவர்களும் வரட்டுத்தனமாகத்தான் செயல்படுகின்றனர். இதன் விளைவாக மதமோ கடவுள் முதலிய கருத்துக்களோ, சடங்குகளோ, பார்ப்பனியமோ அழிந்துவிடுமென்று நாம் நம்புவதற்கில்லை.

பெரியார் முன்வைத்த இன்னொரு சமூகவியல் கருத்தும் இங்கு நம் சிந்தனைக்குரியது. 'பெரியார் சிந்தனைகள் தொகுப்பில்' இக்கருத்தும் காணப்படுகிறது. காலதேச வர்த்தமானங்களுக்கு ஒத்த முறையில் எந்த ஒரு சமூகத்திலும் சில பழக்கவழக்கங்கள், சடங்குகள் நடைபெறுகின்றன. இவற்றைத் தவறு என்று சொல்ல முடியாது. இப்படி விளக்கும் பெரியார் இஸ்லாமியர், சிற்றப்பன் மகளைத் திருமணம் செய்து கொள்வது முதலிய பல்வேறு பழக்கவழக்கங்களைக் குறிப்பிடுகிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் ஐவரைத் திரௌபதி திருமணம் செய்து கொண்ட கதையையும் குறிப்பிடுகிறார். இப்படியெல்லாம் சமூகத்தில் சில வழக்கங்கள் இருந்தன என்று தெளிவுபடுத்துகிறார்.

இந்த விளக்கம் சரியென்றால் புராணக் கதைகள் குறித்து, சடங்குகள் முதலியவை குறித்து நாம் முற்றான எதிர் நிலை எடுத்திருக்கவேண்டியது இல்லை. காலந்தோறும் சடங்குகள் மாறி வருகின்றன. இப்பொழுதெல்லாம் அரசியல் கட்சிகள் உண்ணாநோன்பு, பேரணி என்றெல்லாம் நடத்துவது சடங்கு அல்லாமல் வேறு என்ன? பணம், அதிகாரம் என்ற வடிவத்திலும் இன்று கடவுளர் காட்சி தருகின்றனர். புதிய புதிய கடவுளர்கள் தோன்றுகின்றனர். தலைவர் முதலியவர்களுக்கு உருவ வழிபாடும் தொடர்கிறது. தமிழ் வளர்ச்சிக்கு எதுவும் செய்யாமல் 'தமிழ் வாழ்க' என்று முழங்குவதுகூட மந்திரச் சடங்கு / வழிபாடன்றி வேறு என்ன. பெரியாருக்கு மட்டுமல்லாமல் மார்க்சுக்கும் இங்கு வழிபாடுகள் உச்ச அளவில் நடைபெறுகின்றன. பெரியாரியம் குறித்தோ, மார்க்சியம் குறித்தோ தொடர்ச்சியான ஆய்வுகள் கூட இல்லை. திருவண்ணாமலையில் பிராகாரங்களில் சுற்றிவருவதைப்போல இங்கும்தான் பெரியாரையும் மார்க்சியம் சுற்றி பக்தர்கள் காவடி எடுக்கிறார்கள்.

கடவுள், மதம், மார்க்சியம், சடங்குகள் முதலியவை சமூகத்தில் நிலவும் பொருளியல் முதலிய சூழலோடு தொடர்பு கொண்டு இருக்கின்றன. சிந்தனையில் வைத்து மட்டும் இவற்றை அகற்றுவது சாத்தியமில்லை எனினும் செயல்படாமலும் இருக்க முடியாது.

சமூக மாற்றத்தின் வழியேதான் இவற்றை அகற்றுவது நிறைவு பெறும். ஓசோ, ஜே.கே. முதலிய புதிய ஞானிகளும் இன்று வந்துவிட்டனர். தியானம் பற்றி இவர்கள் விரிவாகப் பேசினாலும் கடவுளென்ற இலக்கை முன்வைப்பது இல்லை. மதம் இவர்களுக்கு உடன்பாடு இல்லை. தெய்வம் என்பதை மறுக்கும் இவர்கள் தெய்வத்தன்மை என்று பேசுகிறார்கள். இவர்களைச் சுற்றி ஆயிரக்கணக்கில் நடுத்தர மக்கள் மற்றும் மேட்டுக்குடியினர் ஓடுகிறார்கள். இவர்கள் அனைவரும் முதலாளியக் கருத்தினர். முதலாளியத்திற்குச் சேவைச் செய்பவர்கள்.

5.

மேற்கிலிருந்து வந்த முதலாளியம் நம்மை இறுகப் பற்றிக்கொண்டுள்ளது. மேற்கத்தியரின் கல்வி, நாகரீகம், தொழில் முறை அரசமைப்பு, மருத்துவம் முதலியவற்றைக் கேள்வி இல்லாமல் நாம் ஏற்றுக் கொண்டோம். இவற்றைக் கேள்விக்கு உட்படுத்திய காந்தியடிகள் முதலியவரை நாம் பொருட்படுத்தவில்லை. மேற்கத்தியரின் அறிவினையும், தொழில் நுட்பங்களையும், சிந்தனைகளையும் நாம் கொண்டாடுகிறோம். கடைசியாக வந்திருக்கிற உலகமயமாதலோடும் நமக்கு முரண்பாடு இல்லை. இயற்கை, வேளாண்மை, தாய்மொழிக் கல்வியை நாம் வளர்த்தெடுக்க விரும்பவில்லை. பசுமைப் புரட்சியை நாம் இன்னும் பாராட்டுகிறோம். மேற்கத்தியர் இப்படித்தான் நம்மை இன்னும் ஆள்கின்றனர். அவர்களுக்கு நாம் நம் தேசம், பொருளியல் முதலிய அனைத்தையும் விட்டுக்கொடுக்கிறோம். நாம் இன்னும் அடிமைகளாக வாழ்கிறோம்.

முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட நிலையில் நாம் இவற்றுக்குத் தீவிரமான எதிர்நிலை எடுக்கவில்லை. முதலாளியத்தை பெரியார் மட்டுமில்லாமல் மார்க்சியரும் உள்வாங்கிக் கொண்டனர். காந்தியோடு பெரியாருக்கு ஏற்பட்ட முரண்பாடு விடுதலைப் போராட்டத்திலிருந்து அவரை முற்றிலுமாக விலக்கி வைத்தது. ஆங்கிலேயர் அகன்ற பிறகு பார்ப்பனருக்குத்தான் நாம் அடிமைப் பட நேரும் என்று முற்றிலுமாக நம்பியதன் விளைவாக விடுதலைப்போரில் தமக்குரிய பங்கை பெரியார் செய்யவில்லை. அரசியல் களத்தில் மட்டுமே முற்றான விடுதலை என்பது சாத்தியமில்லை. சமூகத்தளத்திலும் விடுதலை தேவை. அரசியல், பொருளியல், சமூகம் ஆகிய மூன்று தளங்களிலும்

விடுதலை என்பது ஒருங்கிணைந்து செல்வதையும் நாம் எதிர்பார்க்க முடியாது. பிளவுகளும் தவிர்க்க இயலாதவை எனினும் விளைவுகள் நமக்குச் சாதகமாக இல்லை.

கட்சி மார்க்சியர் பெரியாரை குறை கூறியதை நாம் ஏற்பதற்கு இல்லை. ஆங்கிலேயரோடு சில சந்தர்ப்பங்களில் மாக்சியரும் ஒத்துழைத்தனர். பேராய கட்சி விடுதலைப் போரில தொடர்ச்சியாகவும் உறுதியாகவும் ஈடுபடவில்லை. 1947 விடுதலை என்பது ஒரு போலித்தனமான விடுதலைதான் இதை பெரியார் புரிந்து கொண்டார். மார்க்சியர் புரிந்து கொள்ளவில்லை. தெலுங்கானா புரட்சிக் குறித்து ரஷ்யாவின் போதனையோடும் இந்தியாவில் முதலாளியத் தோடும்அரசு அதிகாரத்தோடும் மார்க்சியர் ஒத்துழைப்பதில் தவறவில்லை.

இங்கெல்லாம் என்ன பார்க்கிறோம்? முதலாளியம் நம்மையரியாமல் நமக்குள் நுழைந்து நம்மை வெற்றிகொள்கிறது. இதன் விளைவாக இந்தியாவிலும் உலக அளவிலும் ஆதிக்கங்களோடு நாம் ஒத்துழைக்கிறோம். கட்சி நடத்துவதற்கு பணம் தேவை. பணம் இல்லையேல் எதுவும் நடைபெறாது. அரசு அதிகாரத்தோடு அவ்வப்போது இணைந்து கொள்கிறோம். இத்தகைய தொடர்ச்சியான நடைமுறைகளின் விளைவாக விடுதலை பொய்யாய், கனவாய் மாறிவிட்டது. முதலாளியத்திற்கு இடம் கொடுத்து பெரியாரியமும் மார்க்சியரும் வலு அழிந்துவிட்டனர். எல்லாக் களங்களிலும் எதிரிகள் வலிமை பெற்று இருக்கின்றனர். இது குறித் நாம் கவனம் கொள்ளத் தவறவே கூடாது. பணம், அதிகாரம், நுகர்வியம், ஆங்கிலம், தனியுடைமை ஆகியவற்றிக் கொண்ட முதலாளியத்தின் மீது நமக்குள்ள பிடிப்பை நமக்குள்ளிலிருந்து வெளியேற்றினால் ஒழிய பெரியாரியம் என்றோ மாக்சியம் என்றோ, பேசுவதற்கான தகுதி நமக்கில்லை. சாதி நம்மை ஆழமாக பற்றி உள்ளது. தலித் மக்கள் மீது நாம் அமர்ந்து இருக்கின்றோம். பெண்ணை அடிமைப்படுத்தி நமக்கான சுகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். நாமே அறிவாளிகள் என்று கருதி பிறருக்கு போதனை செய்து கொண்டிருக்கிறோம். மேடையில் முழங்குகிறோம். தோரணைகளோடு நடந்து கொள்கிறோம். புகழ் மொழிகளுக்கு ஆளாகிறோம். நம்மை நாமே கேவலப்படுத்தி அழித்துக் கொண்டிருக்கிறோம். மாபெரும் வரலாற்று இயக்கத்தோடு நாம் இல்லை. அனைத்து நிலைகளிலும் அறிவுத்

தேடலில் நாம் ஈடுபடவில்லை. மக்களோடுதான் நமக்கு வாழ்க்கை என்பதை நாம் கடைப்பிடிக்கவில்லை. மக்களின் வாழ்வோடு நம்மை கரைத்துக் கொள்ளவில்லை. இந்நிலையில் பெரியாருக்கோ மார்க்சியத்துக்கோ துதிபாடி என்ன பயன்?

6.

பெரியாரியத்தையும், மார்க்சியத்தையும் இணைக்கிற மையச்சரடு என்று சமதர்மத்தை குறிப்பிடுவது பொருந்தும். தமிழகத்திற்கு சமதர்மம் என்ற கருத்தியலை அறிமுகப்படுத்திய முதல்வர்களில் ஒருவர் என்று பெரியாரை நாம் என்றும் மரியாதையோடு குறிப்பிடுவது தகும். கம்யூனிசக் கொள்கை அறிக்கையை தமிழகத்தில் முதன்முதலில் மொழிபெயர்த்து வெளியிட்டவர் பெரியார். சிங்காரவேலரோடு இணைந்து ஈரோடு திட்டத்தை உருவாக்கினார். அது செயல்படவில்லை எனினும் அதன் கூறுகள் தமிழகச் சூழலில் முக்கியமானவை. ஜமீன்தாரி மற்றும் லேவாதேவி ஒழிப்பு பிரிட்டிசாரின் சொத்துக்களை இழப்பீடின்றி எடுத்துக் கொள்ள வேண்டும் போன்ற திட்டங்கள் இன்னும் நினைத்துப் பார்க்கத்தக்கவை. நிலப்பிரபுத்துவத்திற்கு எதிராக எல்லா வடிவங்களிலும் பெரியாரியத்தை நாம் வளர்த்துப் பார்க்க முடியும். அதைப்போல அன்னிய நிறுவனங்கள் நம் பொருளியலையும் வாழ்வியலையும் ஊடுருவி அழிக்க முனையும் இத்தருணத்தில் பிரிட்டிசார் சொத்துக்களை இழப்பீடு இன்றி நாம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற கருத்தை நாம் பயன்படுத்தி இருக்க வேண்டும். அன்னிய நிறுவனங்களோடு ஒத்துழைக்கும் அரசையும் கட்சியையும் பெரியாரிய நோக்கில் நாம் மறுக்கத்தான் வேண்டும். மேற்கத்தியரின் தேவைகளுக்கு ஒத்தமுறையில் இங்குத் தரப்படுகின்ற பொறியியல் கல்வி, மருத்துவக் கல்வி, ஆங்கிலக் கல்வி முதலியவற்றை நாம் ஆதரிக்க முடியாது. சமதர்ம உணர்வு நமக்குள் தங்கி இருக்கும் என்றால் பெரியாரை நமக்குள் இப்படித்தான் செரிக்க வேண்டும். கட்சி மார்க்சியர் இப்படி செய்கின்றார்களா? என்று மக்கள் கேட்டுக் கொள்ளலாம்.

பெரியார் கம்யூனிசம் பற்றிய பரப்புரையை இடைக் காலத்தில் கைவிட்டார் என்ற குற்றச்சாட்டு நமக்கு உடன்பாடு இல்லை. சுயமரியாதை என்பதற்கான விரிவான விளக்கங்களைப் பெரியார் தொடர்ந்து எழுதினார். சுயமரியாதை என்பதன் உள்ளடக்கத்தில் சமதர்மம் ஓயாமல் ஒலித்தது என்பதற்கான உண்மையை எஸ்.வி.ஆர்.

தன் ஆய்வில் விரிவாகத் தொகுத்திருக்கிறார். கம்யூனிசம் என்ற கருத்தை மார்க்சியரும் தேவைப்படும் போதெல்லாம் கைவிடுவதிலும் தயங்குவது இல்லை.

மார்க்சியர் கூறும் சமதர்மம்/சோசலிசம் என்பது தான் விஞ்ஞான சோசலிசம். பெரியார் இத்தகையதொரு சோசலிசக் கருத்தை முன்வைக்கவில்லை. மார்க்சியர் முதலிவர்கள் முன் வைத்த சோசலிசம் / கம்யூனிசம் என்ற கருத்தே கூட எத்தனை விழுக்காடு சோசலிசம் என்றெல்லாம் பேசுவது இன்று தேவை இருக்கிறது. பெரியாரின் சமதர்மக் கருத்தை பகுத்தறிவுவாத சமதர்மம் என்று குறிப்பிடுவது கூட ஒருவகையில் பொறுத்தமாக இருக்கலாம்.

பெரியாரின் மெய்யியல் என்பது என்ன என்ற கேள்விக்கு சற்று ஆழ்ந்து பொருள் காண இயலுமானால், சுயமரியாதை / தன்மானம்தான் பெரியாரின் மெய்யியல் என்று விளக்க முடியும். பகுத்தறிவு என்பது கூட அவர் முன்வைத்த ஆய்வு முறை. இந்த ஆய்வு முறையின் வழியே அவர் முன்வைக்கும் இலக்கு தான்மானம். இதைப்பற்றிப் பெரியாரே விளக்கி உள்ளார். தொடர்ச்சியாகப் பல சக்கரங்கள் இணைந்திருக்கிற ஒரு இயந்திரத்தில் முதலில் உள்ள ஒரு சிறிய சக்கரத்தை நாம் சுழற்றுவோம் என்றால் இறுதியில் பெரிய சக்கரமும் சுழலவே செய்யும். தன்மானம்தான் இந்தச் சிறிய சக்கரம். ஒரு தொழிலாளி என்பவனுக்குத் தன்மானம் என்பது முதலாளிக்கு அடிபணியாமல் இருத்தல். பெண்ணுக்குரிய தன்மானம் என்பது ஆணின் ஆதிக்கத்தை மறுத்தல். இப்படித் தொடங்கும் விளக்கம் நம் சிந்தனையைப் பல திசைகளில் தூண்ட முடியும். இறுதியில் எந்த வகை ஆதிக்கமும் ஏற்றத்தாழ்வும் மனிதனுக்குத் தேவை இல்லை. ஆதிக்கங்களை முற்றாக அகற்றிய நிலையில்தான் மனிதன் மனிதனாகவே தன்மானத்தோடு, பகுத்தறிவோடு இருக்க முடியும்.

பெரியாருக்குள் நாம் காணுகிற இந்த விளக்கத்தை மார்க்சியம் மறுப்பதற்கில்லை. ஐரோப்பிய சமூகத்தில் கடந்த சில நூற்றாண்டுகளில் எத்தனையோ தத்துவங்கள் முன் வைக்கப்பட்டன. இவற்றில் ஒன்று மார்க்சியம். பெரியாரின் தன்மானம் என்ற மெய்யியலின் உள்ளும் மார்க்சியத்தின் கூறுகளை விரிக்க முடியும். இவ்வகையிலும் பெரியாரியத்தை நாம் வளர்த்தெடுக்க வேண்டும். மார்க்சியத்தின் ஒளியில் பெரியாரியத்தை வளர்த்தெடுப்பது நம் கடமை.

அரசு என்பதை சரியான அளவில் பெரியார் சரியான முறையில் புரிந்து கொள்ளவில்லை என்று மார்க்சியர் பெரியாரைக் குறை கூறுகின்றனர். அரசு என்பது சுரண்டப்படும் வர்க்கத்தைச் சுரண்டும் வர்க்கத்தின் சார்பில் ஒடுக்குகிற ஒரு வன்முறைக் கருவி என்பது மார்க்சியரின் வாய்பாடு. இந்த வாய்பாடு எந்த அளவுக்குந் சரியானது என்ற கேள்வியையும் மார்க்சியர் கேட்கின்றனர். அரசு அதிகாரத்தில் இடம் பெறுவதைப் பெரியார் என்றைக்கும் முற்றாக மறுத்தார். அரசு அதிகாரிகளையும் பெரியார் மதிக்கவில்லை. ஊழல் செய்யாமல் அதிகாரிகள் செயல்பட முடியாது என்பது பெரியாரின் அழுத்தமான கருத்து எனினும்அரசு அதிகாரத்தைத் தனக்குச் சாதகமாகப் பெரியார் பயன்படுத்திக் கொண்டார். இது பற்றியும் விமர்சனங்களுக்கு இடமிருக்கிறது. பெரியர் அளவுக்கு அவரைச் சார்ந்தவர்கள் அரசு அதிகாரத்தை விமர்சனம் செய்வது இல்லை. அரசு இல்லாமல் முடியாது என்று இவர்கள் நம்புகிறார்கள். அப்புறம் காவல்ச றை இல்லாமல் முடியாது. ராணுவம் இல்லாமல் முடியாது. அதிகா ரம் இல்லாமல் முடியாது. கோவில் இல்லாமல் முடியாது. ஊழல் இல்லாமல் முடியாது என்றெல்லாம் இவர்கள் சொல்வதற்கு இடமிருக்கிறது. அரசு அதிகாரத்தைப் பெரியார் அளவுக்குக்கூட மார்க்சியர் மறுக்கவில்லை என்பதை இங்கு நினைத்துப் பார்க்கலாம்.

மார்கசியரின் தொழிற்சங்கவாதத்தைப் பெரியார் மறுத்தார். தொழிலாளிகள் ஊதிய உயர்வு, போனஸ் என்றெல்லாம் குரல் எழுப்புவதையும் இதற்காகப் போராடுவதையும் பெரியார் ஒப்புக்கொள்ளவில்லை. போனஸ் முதலியவற்றை அந்தத் தொழில் நிறுவனத்தில் தனக்குரிய பங்காக / முதலீடாக தொழிலாளிகள் மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற கருத்தைப் பெரியார் முன்வைத்தார். முதலாளியத்தை இத்தகைய கோரிக்கை ஒழிக்கும் என்று பெரியார் நம்பினார்.

இந்தச் சிக்கலை இன்னும் சற்று ஆழமாகப் பார்ப்பதற்கு இடமிருக்கிறது. முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியரைப் போலவே பெரியாருக்குள்ளும் முதலாளியம் வெகுநுட்பமாகச் செயல்பட்டது. இன்னும்கூட முதலாளியத்தை நமக்குள்ளிருந்து வெளியேற்ற முடியாமல் தவிக்கிறோம். வரலாற்றில் முதலாளியம் வெற்றி பெறுமா சோசலிசம் வெற்றி பெறுமா என்ற சிக்கலில் இன்னும் கூட தீர்வு ஏற்படவில்லை என்று ஒருமுறை மாவோ குறிப்பிட்டதை நாம் இங்கு கவனத்தில் கொள்ள

வேண்டும். இந்தச் சிக்கலின் ஆழம் நமக்குள் தட்டுப்படுகிறதா என்றும் கேட்டுக்கொள்ளலாம். முதலாளியத்தை நாம் நினைக்கிற அளவுக்குக் கடந்து செல்லத்தான் முடியவில்லை. லெனின் கூட இப்படி ஒரு சிக்கலை எதிர்கொண்டார். நாமும் இந்த சிக்கலுக்குள் இருக்கிறோம். இது குறித்த விரிவான ஆய்வுகள் இன்னும் தேவை.

இந்த நிலையில் ஒன்றை இங்கு குறிப்பிடலாம். சாதியத்திற்கு, மதத்திற்கு, பார்ப்பனியத்திற்கு எதிரான போராட்டம் என்பது முதலாளியத்தின் எல்லைக்குள்தான் நடைபெறுகிறது. முதலாளிய சமூகத்தின் உள்ளும் சமத்துவம் தேவை எனற முறையில் இந்தப் போராட்டத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியும். தனிநபர்க்கிடையில் எந்த வடிவத்திலும் ஏற்றத்தாழ்வு வேண்டாம். ஒவ்வொருவருக்கும் ஒரு வாக்கு என்பதுபோல. இது முதலாளியத்திற்கு ஒத்த கருத்துததான். இதன் பிறகுதான் சமதர்மத்தற்கு நாம் செல்ல முடியும். இப்படி ஒரு நிலைப்பாடு பெரியாரியத்திற்கு உடன்பாடுதான். முதலாளிய எல்லைக்குள் இருந்துகொண்டு சாதியத்தையோ, மதத்தையோ, பார்ப்பனியத்தையோ முற்றாக ஒழிக்க முடியுமா என்ற கேள்விக்கும் இங்கு இடமுண்டு.

இங்கு மேலும் ஒன்றைக் குறிப்பிடலாம். சாதிக்கு எதிரான மத ஆதிக்கத்திற்கு எதிரான அதைப் போலவே பார்ப்பனியத்திற்கு எதிரான போராட்டத்தில் பெரும்பாலும் மார்க்சியர் ஈடுபடவில்லை. சமூக மாற்றத்தையொட்டி சாதி முதலியவை தானே ஒழியும் என்பது மார்க்சியரின் வாய்பாடு . இப்படி எல்லாம் சாதி முதலியவை அழியமாட்டா. சமூகம் மாற்றம் என்பதையும், சாதி ஒழிப்பு என்பதையும் தனியே பிரிப்பதிலும் பயன் இல்லை. அதேபோல சாதி முதலியவற்றுக்கெதிரான தனிப் போராட்டங்களையும், நாம் மறுப்பதற்கில்லை. இறுதி இலக்கு சமூக மாற்றம். புரட்சிகரமான சமூக மாற்றம் பெரியாரும் விரும்பிய சமூக மாற்றம் சாதிக்கெதிரான போராட்டத்தை முற்றாக தனிப்படுத்துவதன் மூலம் சாதி ஒழிப்பு சாத்தியமா என்ற கேள்வியும் தற்பொழுது நமக்கு முன் இருக்கிறது. இன்னும் ஒன்று மார்க்சியர் என தம்மை நம்புகிறவர் சாதி முதலிய உணர்வுகளிலிருந்து நம்மை எந்த அளவுக்கு விடுவித்துக்கொண்டார் என்பதும் மார்க்சியர் தம்மைக் கேட்டுக்கொள்ள வேண்டிய ஒரு கூர்மையான கேள்வி? மார்க்சியக் கட்சிக்குள்ளும் பார்ப்பனியத் தலைமை செய்த குளறுபடிகள் இன்று

வெளிப்படையாகத் தெரிய வந்திருக்கின்றன கூடவே ஒன்றைச் சொல்லாம். பார்ப்பனிய உள் நுழைவால்தான் மார்க்சியம் இங்கு அறவே கெட்டது என்பதில் உண்மையில்லை. ஆக்கமுறையில் இங்கு மார்க்சியம் கற்கப்படவோ செயல்படுத்தப்படவோ இல்லை. மார்க்சிய கட்சிக்குள்ளும் கோளாறுகள் உண்டு. மார்க்சியத்தைக் காட்டிலும் தம் கட்சிக்கும் தலைமைக்கும் இவர்கள் தரும் மரியாதை அருவருக்கத்தக்கதாக இருக்கிறது.

7.

திராவிடஇயக்கத்திற்கும், மார்க்சிய இயக்கத்திற்கும் இடையிலிருந்த முக்கியமான முரண்பாடுகளில் ஒன்று திராவிட இனம் / திராவிட நாகரிகம் பற்றிய திராவிட இயக்கத்தின் கொள்கை. அதிலும் திராவிடம் என்ற கொள்கையை மார்க்சியர் இன்று வரை ஏற்பது இல்லை என்பது மட்டுமல்ல கடுமையான எதிர்ப்பு உணர்வுடன் பார்க்கின்றனர். இந்தியாவின் தொன்மையான வரலாறு பற்றி மார்க்சியர் அறியவில்லை. புகழ்பெற்ற சில அறிஞர்கள் ஆராய்ந்து உரைத்தபடி இந்திய நாகரிகத்தின் மேல் அடுக்கு ஆரிய நாகரிகமாக இருக்கலாம். ஆனால் இந்திய நாகரிகத்தின் அடித்தளம் திராவிட நாகரிகம் தான். இந்தியாவின் நெடுங்கால வரலாற்றை தெற்கிலிருந்து தான் தொடங்க வேண்டும் என்று சில வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். திராவிட நாகரிகம் உலகியல் சார்ந்தது. மனித வாழ்க்கைக்கு முதன்மை தருவது. ஆரிய நாகரிகம் இதற்கு எதிரானது. மார்க்சியருக்கு இந்த உண்மைகள் ஏற்புடையனவாக இல்லை என்பது ஒரு பெரும் வியப்பு.

திராவிட இனம் என்று இவர்கள் பேசியதை இட்லர் முதலியோர் முன்வைத்த இனக்கொள்கை என்று மார்க்சியர் எடுத்துக்கொண்டனர். இட்லரின் கொள்கை பாசிசத்திற்கு இடம் கொடுத்தது. ரஷியாவின் மீது படையெடுத்தான் இட்லர். இதன் காரணமாகவும் இட்லரின் இனக்கொள்கையை மார்க்சியர் கடுமையாகச் சாடினர். திராவிட இயக்கம் முன்வைத்த தேசிய இனம் என்ற கொள்கை மார்க்சியக் கொள்கைக்கு எதிரானது இல்லை. சம்பத் முதலியவர்கள் பின்னர் ஆராய்ந்து உரைத்தபடி திராவிட இயக்கம் முன்வைத்த கொள்கையை தமிழ்த் தேசியம் என்றே புரிந்து கொண்டிருக்க முடியும். திராவிட இயக்கத்தார் பார்ப்பனியத்தைக் கடுமையாக சாடியுள்ளதன் காரணமாகவும் மார்க்சியர் இவர்களை மறுத்தனர். இந்திய சமூகம் சாதிய சமூகம்தான் என்ற திராவிட

இயக்கத்தின் கருத்தை மறுத்து வர்க்கச் சமூகம் தான் என்ற கருத்தை முன் வைத்தவர் மார்க்சியர்.

இன்று சில உண்மைகள் தெளிவாகி உள்ளன. மார்க்சிய வட்டாரத்திலும் ஒரு சிலர் இந்திய சமூகத்தில் சாதி பெற்ற செல்வாக்கை ஏற்கத் தொடங்கி உள்ளனர். பார்ப்பனியத்தையும் சாடுகின்றனர். பாரதிதாசனை மட்டுமல்லாமல் பெரியாரையும் போற்றத் தொடங்கி உள்ளனர். தேசிய இனம் என்ற கருத்தையும் ஏற்கின்றனர். மார்க்சியத்தின் குறிப்பிட்ட சில பகுதியினர் இத்தகைய கருத்தைக் கொண்டிருக்க, இன்னும் ஒரு பகுதியினர் முன்கூறிவந்த கருத்தையே இன்றும் கொண்டிருக்கின்றனர்.

தமிழகச்சூழலில் "திராவிட இனம்" என்று இனிப் பேச வேண்டாம். தமிழ் இனம் என்றுதான் பேச வேண்டும் என்ற கருத்துக்கு அழுத்தம் தந்து திராவிடம் என்ற கருத்தை வெறுக்கத்தக்கதாக ஒதுக்குகின்றனர் தமிழ் உணர்வாளர்களில் ஒரு பகுதியினர். கேரளம், கர்நாடகம், ஆந்திரா ஆகிய தேசிய இனங்களை உள்ளடக்கி திராவிட இனம் என்று என்னதான் வற்புறுத்தி பேசியபோதிலும் அக்கருத்து செயல்படவில்லை. ஆகவே அதை இன்று கைவிடுதலில் தவறு இல்லை. இதற்காக ஆரியத்திற்கெதிரானது திராவிடம் என்ற கருத்தை நாம் இன்றைக்கும் கைவிட முடியாது. திராவிடம் என்ற சொல்லுக்கு மாற்றாக 'தமிழகம்' என்று பேசுவதும் பொருத்தமானதுதான்.

8.

திராவிட இயக்கத்தின் ஒரு கிளை என்ற முறையில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் முன்னிறுத்திய சில கருத்துக்களையும் இங்கு சேர்த்துப் பார்க்க வேண்டும். தமிழ் மக்களின் தொன்மை, மேன்மை, தனித்தன்மை, உலகியல் சார்பு, சாதிக்கும் மதத்திற்கும் அழுத்தம் தராதபோக்கு ஆகியவற்றை இவர்கள் முதன்மைப்படுத்தினர். தமிழ்நாடு தமிழருக்கே என்ற கருத்தை முன்வைத்தவர் பெரியார். தமிழைக் காட்டுமிராண்டி மொழி என்று அவர் சில காரணங்களைச் சொல்லி விமர்சனம் செய்தாரே ஒழிய தமிழுக்கெதிராக அவரை தமிழ் மக்களுக்கெதிராக நிறுத்த முடியாது. வடவர்களின் இதிகாசங்களைப் பெரியார் கடுமையாகச் சாடினார். தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்று உள்ள மூடநம்பிக்கைகளைச் சாடுவதில் குறை வைத்துக்கொள்ளவில்லை. திருக்குறளைப்

பெரியார் போற்றிய போதிலும் இறுக்கமாகப் படித்தால் 300 குறள்கள் தான் தேறும் என்றும் அவர் கூறினார்.

ஒரு தெய்வம் உண்டு என்ற பாரதிதாசனைக்கூட அவர் கடிந்துரைத்தார். இந்நிலையை என்றும் அவர் ஆதரிக்கவில்லை. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது பெரியார் நம்மோடு இல்லை. அவ்ரது இறுதிப் பேருரையில் தமிழ்நாட்டைத் தனியே பிரிக்க வேண்டும் என்பதற்கான காரணங்களை அவர் அழுத்தமாகச் சொன்னார். பெரியார் எந்த வகையிலும் தமிழ் மக்களின் நலன்களுக்கு எதிரானவர் என்று பேசுவதற்கு இடமில்லை. அறுபது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்களோடு இயைந்தும் கரைந்தும் அவர் இருந்தார். இன்னும் அவர் நெடுங்காலத்திற்கு நம்மோடு இருப்பார்.

மண்ணுக்கேற்ற மார்க்சியம் என்று இன்று நாம் பேசும்பொழுது பெரியாரை ஒதுக்கிவிட்டுபேசவே முடியாது. பெரியாரின் தாய் மொழி கன்னடம் என்று சொல்வதன் மூலம் அவரைத் தமிழ் மக்களிடமிருந்து தமிழ் உணர்விலிருந்து, தமிழ் வரலாற்றிலிருந்து வேறுபடுத்திப் பார்க்க முடியாது. இதன் காரணமாகவே பெரியாரிடம் தமிழ் மக்கள் கொண்டிருக்கிற பாசத்திற்கு அளவில்லை. இத்தகைய பாசத்தையும் பற்றையும் தமிழகத்தில் வாழ்ந்த, வாழ்கின்ற மார்க்சியர் எவரும் பெறவில்லை. தோழர் ஜீவா அவர்களை ஒரு விதிவிலக்காக குறிப்பிடலாம். அவரையும் கட்சிக்குள் இருந்த மார்க்சியர் என்ன பாடுபடுத்தினர். எந்த இடத்தில் வைத்திருந்தார்கள் என்றெல்லாம் இன்று தெளிவாக அறிந்து கொள்கிறோம்.

தேசிய இனம் என்ற கருத்து 1948வரை கட்சி மார்க்சியரும் வற்புறுத்தியிருந்தனர். விடுதலைக்குப் பிறகு தேசிய இனங்களுக்குக்கிடையில் சமத்துவமென்ற அடிப்படையில்தான ஒரு கூட்டாட்சி அமையும் என்று மார்க்சியர் உட்பட பலரும் நம்பி இருந்தனர். சோவியத் ஒன்றியமும் இத்தகைய கூட்டாட்சி முறையைக் கொண்டிருந்தது. 1946க்கு பிறகு நிலைமை மாறுகிறது. வலுவான மைய அரசு தேவை என்று நேரு முதலியவர்கள் வைத்த கொள்கை ஏற்கப்பட்டது. மைய அரசின் உறுப்புக்களாக மாநிலங்கள் ஏற்கப்பட்டன. மார்க்சியரும் இதற்கு ஒப்புக் கொண்டனர். எப்படி ஒப்புக் கொள்ள முடியுமென்று இன்றும் நாம் கேட்டுக் கொள்ளலாம். சோவியத் ஒன்றியத்தின் உள்ளும் கூட்டாட்சி என்ற கொள்கை

பெயரளவுக்கே செயல்பட்டது. அங்கும் தேசிய இனங்கள் ஒடுக்கப்பட்டன. ரஷ்ய தேசிய இனம்தான் தன்னை முதன்மைபடுத்திக் கொண்டது. இந்த எதார்த்த நிலையை இந்தியாவில் மார்க்சியமும் ஒப்புக் கொண்டிருக்க வேண்டும்.

இந்திய அரசின் ஆட்சிமொழியாக இந்தி என்பதை மார்க்சியர் ஏற்கின்றனர். தேசிய ஒருமைப்பாடு என்பதை மார்க்சியர் அழுத்தமாக வற்புறுத்துகின்றனர். அரசனைக் காட்டிலும் அரசு விசுவாசத்தை கூடுதலாக இவர்கள் கொண்டு இருக்கின்றனர். தமிழின் தொன்மை, மேன்மை முதலியவற்றோடு இவர்களுக்கு உடன்பாடு இல்லை. வர்க்கப் பார்வை என்ற முறையில் வள்ளுவர், இளங்கோ முதலியவர்களை இவர்கள் குறைத்தே மதிப்பிட்டுள்ளனர்.

இந்த இடத்தில் இன்னொன்றையும் கூறலாம். அரசியல் அரங்கில் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு மக்கள் மத்தியில் இருநத செல்வாக்குக்கு நிகரான செல்வாக்கை மார்க்சியரால் பெற முடியவில்லை. திராவிட இயக்கத்தினர்தான் மண்ணோடும் மக்களோடும் நெருக்கமாக உறவு கொண்டிருந்தனர். தொடக்கத்தில் மார்க்சியத்தற்கு இத்கைய நெருக்கம் இருந்ததை மறுப்பதற்கில்லை. நாளடைவில் நெருக்கம் குறைந்தது மட்டுமல்ல தமிழ் மக்களுக்கும் தமிழ் உணர்வுக்கும் எதிராகச் செயல்பட்டனர். ராஜாஜி முன் வைத்த குலக்கல்வி முறையை மார்க்சியர் எதிர்க்கவில்லை என்பது ஒரு சான்று. திராவிட இயக்கத்தினர் சாதியம், மதம், பார்ப்பனர், வடவர் ஆதிக்கம் என்றெல்லாம் சாடியபோது இவர்களோடு மார்க்சியர் இணைந்து இருக்கவில்லை. சரியான மார்க்சியத்தை இவர்கள் கொண்டு இருப்பார்கள் என்றால் தமிழ் மக்களுக்கு எதிரான நிலைபாட்டை இவர்கள் எடுத்திருக்க முடியாது.

9.

மெய்யியல் என்ற அடிப்படையில் திராவிட இயக்கத்தின் சில கருத்துக்களையும் மார்க்சியரின் சில கருத்துக்களையும் இங்கு ஆராய்வது பொருந்தும். திராவிட இயக்கத்தின் நாத்திகக் கொள்கையும் மார்க்சியரின் பொருள் முதல் கொள்கையும் சில கூறுகளில் ஒன்றுபோலத் தென்பட்டபோதிலும் இரண்டும் பெருமளவு வேறுபட்டவை. நாத்திகம், கடவுள், சாதி, மதம் முதலியவற்றை முற்றாக மறுக்கிறது. மனிதனின் பகுத்தறிவுகளுக்கு அழுத்தம் தருகிறது. உள்ளுணர்வுக்கு இங்கு இடமில்லை. வாழ்வின் புதிர்கள்

குறித்து இங்கு பேசுவதற்கில்லை. கைரேகை, ஜோதிடம் முதலியவற்றின் சில கூறுகள் ஆய்வுக்கு உரியவை என்ற கருத்துக்கு இங்கு மரியாதை இல்லை. பெரியார் சில சந்தர்ப்பங்களில் கூறியபடி மனிதன் நாயாக, நரியாக நடந்து கொள்கிறான். நாய்கூட மோசம் இல்லை. மனிதன் அதைவிடக் கீழானவன். மனிதனின் தோற்றம் குறித்து இங்கு ஆய்வுக்கு இடமில்லை. தொடக்க காலத்தில் மதம் மனிதனின் நன்மைக்காகத்தான் தோன்றியது என்று கூட குறிப்பிடும் பெரியார் அதற்கு மேல் ஆய்வுக்குள் செல்லவில்லை. பரிணாம முறையில் மனிதனைப் பார்க்கும் டார்வினியக் கோட்பாடு பெரியாருக்கு உடன்பாடுதான். ஆனால் டார்வினியத்தின் முதலாளியக் கூறு பற்றி பெரியாருக்குப் பார்வை உடன்பாடுதான். ஆனால் டார்வினியத்தின் முதலாளியக் கூறு பற்றி பெரியாருக்குப் பார்வை இல்லை. பல களங்களிலும் நடைபெற்றுவரும் அறிவியல் ஆய்வுகளைப் பெரியார் அக்கறையோடு கற்கவில்லை. வரலாறு குறித்து இன்றுவரை ஆய்வுகள் நடைபெறுகின்றன. இங்கர்சால் என்ற ஒரு சிலரோடு பெரியாரின் நாத்திகவாதம் முற்றுப் பெறுகிறது. உலகளவில் நாத்திகவாதம் பல திசைகளில் விரிவு பெற்றுள்ளதைப் பெரியார் கற்கவில்லை. நாத்திகம் கடவுள் முதலியவற்றை மறுக்கிறதே ஒழிய இவ்வகைக் கருத்துக்கள் எத்தகைய வரலாற்றுச் சூழலில் ஏற்பட்டன என்பது பற்றி இவர்களுக்கு ஆய்வு இல்லை.

மார்க்சியரின் பொருள் முதலியல், நாத்தியவாதத்தைவிட விரிவானது மட்டுமல்ல ஆரோக்கியமானது. வாழ்வியல் தான் சிந்தனையைத் தீர்மானிக்கிறது என்ற அடிப்படையோடு பொருள் முதலியல் தொடங்குகிறது. மெய்யியலை கருத்து முதலியல் என்றும் பொருள் முதலியல் என்றும் பாகுபடுத்துகிறது. மதம் முதலிய எல்லாவகைக் கருத்தியல்களையும் வரலாறு மற்றும் பொருளியல்ச் சூழலில் ஆராய்கிறது. வரலாற்றில் செயல்படும் முரண்பாடு குறித்து ஆழமாகப் பேசுகிறது. இயங்கியல் பற்றிச் சொல்கிறது. வர்க்கப் போராட்டத்திற்கு அழுத்தம் தருகிறது. வர்க்கங்களற்ற சமூகத்திற்கு கம்யூனிசம் என்று பெயரிடுகிறது. தனியுடைமை, அரசு ஆகியவற்றின் தோற்றம் மறைவு என்றெல்லாம் பேசுகிறது. மதம் மக்களுக்கு அபின் என்ற ஒற்றை வாசகத்தில் மதம் பற்றிய திறனாய்வை மார்க்சியம் முடித்துக் கொள்வதில்லை. மதம் என்ற நிறுவனத்தின் உள்ளும் நடைபெறுவது வர்க்கப்போராட்டம் என்கிறது மார்க்சியம். வாழ்நிலைதான் சிந்தனையை தீர்மானிக்கிறது என்பதற்கு அழுத்தம்

தந்த போதிலும், சிந்தனையும், வாழ்நிலையைப் பாதிக்கிறது என்பதை சேர்த்துக் கொள்கிறது.

இம்முறையில்தான் கலை இலக்கியங்கள் மெய்யியல் முதலியவற்றின் தேவையை வலியுறுத்துகிறது. பொருளே முதல் என்பதோடு மார்க்சியம் தன்னை நிறுத்திக் கொள்வது இல்லை. கருத்து முதலியலுக்குள்ளும் இருக்கும் உண்மையை மார்க்சியம் மறுப்பதே இல்லை. கடவுள் என்ற கருத்தியலுக்குள் மனிதம் சார்ந்த சில உண்மைகள் இருக்கக்கூடும். கடவுள், மதம் ஆகியவற்றின் மறுப்பை மார்க்சியம் என்றும் முதன்மைபபடுத்துவது இல்லை. இவற்றின் உள்ளே இருக்கும் மக்கள் சார்பை மறுத்துவிட முடியாது. குறிப்பிட்ட வரலாறு மற்றும் பொருளியல்ச் சூழலில் மதம், கடவுள், சடங்கு முதலியவற்றிற்கு அழுத்தம் ஏற்பட்டு விடுகிறது. இவற்றை வைத்துப் பயன்பெறும் சில சமூகப் பிரிவினரும் இருக்கின்றனர். பொருளியல் சூழல் மாறும் போதுதான் சாதிமதம் முதலியனவும் அழிவதற்கான வாய்ப்பு ஏற்படும். அவசரப்பட்டுப் பயன் இல்லை எனினும் கருத்தியல் தளத்தில் மட்டுமே வைத்து இவற்றை விமர்சனம் செய்வதை மார்க்சியர் முற்றாக செய்வது இல்லை. 1917 புரட்சிக்குப் பிறகு லெனின் கூட ஒரு சந்தர்ப்பத்தில், பிரெஞ்சு சமூகத்தில் வால்டேர் முதலியவர்கள் முன்வைத்த நாத்திகவாதத்தை ரஷ்யாவிலும் பரப்ப வேண்டும் என்று எழுதினார். இயங்கியல் அடிப்படையிலான பொருள் முதல்வாதம் சிக்கலானது மட்டுமல்ல அறிவுமிக்கவர்கள் மட்டுமே புரிந்துகொள்ளக் கூடியது. சாதாரண மக்களுக்கு நாத்திகவாதம் தான் ஏற்கக்கூடியது. தமிழகச் சூழலில் நாத்திகவாதத்தை முன்னிறுத்திய பெரியாரைக் குறை சொல்வதற்கு இல்லை.

10.

இறுதியாக சிலவற்றை இங்கு குறிப்பிடலாம். மார்க்சியரைப் பொறுத்தவரை வரலாறு முதலிய பல துறைகளிலும் சிறந்த படிப்பாளிகளாக இருக்கிறாாகள் என்பது உண்மைதான். இவர்கள் அளவுக்குப் பெரியாரையோ அவரைச் சார்ந்தவர்களையோ பெரிய படிப்பாளிகள் என்று சொல்ல முடியாது. ஆனால் பெரியாரைப் பொறுத்தவரை மக்களைப் படித்தவர், தமிழ் மண்ணை அறிந்தவர், தமிழ் மக்களோடு எந்த வேறுபாடும் இல்லாமல் கலந்தவர், கரைந்தவர். அவருடைய படிப்பறிவு வெறும் புத்தகங்களை மட்டும் படித்த அறிவு அன்று. மக்களின் வறுமையை, கல்வியறிவு

இன்மையை, சிந்தனைத்திறம் இல்லாதத் தன்மையை, அவர்களது அறியாமையை, மூடநம்பிக்கையைக் கற்றவர் பெரியார். அவர்களை வைத்து ஏமாற்றித் தந்திரமாக வாழ்பவா குறித்து அறிந்தவர் பெரியார். படித்தவர்கள், அறிவாளிகள் என்று தம்மைக் கருதிக்கொள்பவர்கள் எவ்வாறு மக்களை ஏமாற்றுகிறார்கள் என்று அறிந்தவர். சாதி, தீண்டாமை முதலிய கொடுமைகளை அறிந்தவர். கட்சிக்காரர்களின் சூழ்ச்சிகளை அறிந்தவர். கம்யூனிஸ்டுகள் என்பவர்கள் இந்த மக்களோடு இல்லை. அன்னியப்பட்டு இருக்கிறார்கள். இப்படி இருப்பது மக்களை நேசிப்பது ஆகாது/பெரியாரை ஒரு நாட்டு மருத்துவர் என்று கூறினால், மார்க்சியரை ஆங்கில மருத்துவர் என்று கூறுவது பொருந்தும். மார்க்சியர் இன்னும் மக்களை நெருங்கி இருக்க வேண்டும். மண்ணிலிருந்து மார்க்சியத்தை வளர்க்க வேண்டும். பெரியாரை மதிக்காத மார்க்சியர் தமிழ் மண்ணோடு உறவு கொள்ள முடியாது. பெரியார் மக்களுக்கான முழுமையான பணியை மேற்கொண்டவர். ஆனால் பெரியார் இன்னும் வளர்ந்து இருக்க வேண்டும். மார்க்சியத்தைக் கற்பதன் மூலம் தம்மை வளர்த்துக் கொள்ள முடியும். கட்சி மார்க்சியரின் மார்க்சியம் தனக்குள்ளே பல முடக்கங்களைக் கொண்டது. இதன் காரணமாகத்தான் பெரியாரியத்தோடு இவர்கள் முரண்பாடும் பகைமையும் கொண்டனர். இதனால் மாாக்சியமும் மக்களுக்கான விடுதலைக் கோட்பாடாக அமையவில்லை. இன்றேனும் இக்குறைகள் தீரவேண்டும். தமிழகச் சூழலில் பெரியாரியமும் மார்க்சியமும் கைகோத்துக் கொண்டாலொழிய தமிழக மக்கள் விடுதலையை முன் நோக்கிச் செல்ல முடியாது. சோவியத் யூனியனோடு ஒட்டி இருந்து மார்க்சியத்தை நாசப்படுத்தியது போலவே இந்திய தேசியத்தோடு ஒட்டி இருந்து மார்க்சியத்தையும் தமிழக மக்களையும் நாசப்படுத்துவதை மார்க்சியர் கைவிடவேண்டும்.

*குறிப்பு : தோழர் வே. ஆனைமுத்து அவர்களை ஆசிரியராகக் கொண்ட 'சிந்தனையாளன்' இதழின் 2004 பொங்கல் மலருக்காக எழுதப்பட்ட கட்டுரை.*

# பெண் விடுதலை, மண் விடுதலை

1.

பெண் உரிமை என்பதும், பெண் விடுதலை என்பதும் ஒன்றல்ல. இரண்டும் வெவ்வேறானவை.

பெண் உரிமை என்று சொல்லும்போது, பெண்ணுக்குக் கல்வித் தேவை. குடும்பத்தில் பெண்ணுக்குரிய வேலைகளை ஆணும் பகிர்ந்து கொள்ள வேண்டும். அரசு மற்றும் தனியார் அலுவலகங்களில் பெண்ணுக்கு, வேலை வேண்டும். காவல் மற்றும் படைத் துறையிலும் பெண் இடம் பெற முடியும். மறுமணம் செய்துகொள்ளப் பெண்ணுக்கு உரிமையுண்டு. குழந்தை பெற்றுக் கொள்வதா? வேண்டாமா? என்று தீர்மானிக்கும் உரிமை பெண்ணுக்கும் உண்டு. சொத்துரிமை பெண்ணுக்குத் தேவை. அரசியலிலும் பெண்ணுக்கு இடமுண்டு. இப்படிப் பெண்ணுக்கு தேவையான உரிமைகள் எனப் பலவற்றைப் பட்டியல் போட முடியும். திருமணம் தேவையா? இல்லையா? என்பதைப் பெண்ணே தீர்மானிக்கலாம். காதலிக்க உரிமை உடையவள் பெண்.

இப்படியெல்லாம் பெண்ணுக்கு உரிமைகள் தேவையென்று நாம் பேசும்போது, ஆணுக்கு நிகரான உரிமைகள் பெண்ணுக்கும் தேவை என்ற உணர்வோடு பேசுகிறோம். பெண் தனித்து வாழலாம். அதிகாரியாகலாம். முதலாளியாகலாம். சேவகியாகலாம். என்றெல்லாம் இது பொருள்படுகிறது. வேறு வகையில் சொன்னால் ஆணின் அதிகாரத்தில் பெண்ணும் பங்கு போட்டுக் கொள்ளலாம். தொழில் செய்யலாம். சொத்து சேகரிக்கலாம். குடும்பத்தை நிர்வாகம் செய்யலாம். பெண் துறவியாகலாம். மத நிறுவனத்தில் குரு பீடத்தில் அமரலாம். இயன்ற பொழுதெல்லாம் தன் அதிகாரத்துக்கு உட்பட்ட ஆணை தண்டிக்கலாம். சட்டத்தைக் கையில் எடுத்துக கொள்ளலாம். நீதிபதியாகலாம். நிர்வாகம் செய்யலாம். கையில் ஆயுதத்தோடு சுற்றி வரலாம். பெண் உரிமை என்பது இப்படியெல்லாம் பல தளங்களில் விரிவு பெறலாம்.

2.

இப்பொழுது பெண்ணுக்குத் தேவையான உரிமைகள்

கிடைத்துவிட்டன என்று வைத்துக் கொள்வோம். இதனால் பெண்ணுக்கு விடுதலை கிடைத்து விட்டதா? பெண் தன்னை விடுவித்துக் கொண்டாளா? என்று நம்மை நாமே கேட்டுக் கொள்வோம்.

அப்படியானால் உரிமை என்பதும் விடுதலை என்பதும் வெவ்வேறா? என்பது பற்றி இப்பொழுது சிந்திக்கலாம்.

இன்றைய சமுதாய, அரசியல், பொருளியல் சூழலில் ஆண்தான் ஆதிக்கம் செய்கிறான் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம். இது உண்மைதானா? முதலாளி ஆதிக்கம் செய்கிறான். தொழிலாளி முதலாளியின் ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டு இருக்கிறான். அதிகாரி ஆதிக்கம் செய்கிறான். அவனது அதிகாரத்தை ஏற்று ஊழியர்கள் செயல்படுகின்றனர். தலைவன் அதிகாரம் செய்கிறான். தொண்டன் ஒத்துச் செல்கிறான். குரு கட்டளை இடுகிறார். பக்தன் அவருக்குப் பணிவிடை செய்கிறான்.

இவைகூட தோற்றம்தான். உண்மையல்ல. முதலாளி பணத்திற்கு, உடமைக்குச் சேவகம் செய்கிறான். அரசு, அதிகாரம் செய்கிறது. அதிகாரி ஒத்துழைக்கிறான். மதம் அதிகாரம் செய்கிறது. புரோகிதன் ஒத்து இயங்குகிறான். உடமை என்றோ, அரசு என்பதோ, மதம் என்றோ இல்லாத காலம் என ஒன்று இருந்தது. அப்பொழுது எவரும் யாரையும் அதிகாரம் செய்யவில்லை. எல்லோரும் சமதையாக, ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்து வாழ்ந்தனர். அங்கு ஆதிக்கமில்லை. அதிகாரமில்லை. பணமில்லை. மதமில்லை. ஆணுக்குப் பெண் அடிமை இல்லை. இது வரலாற்றுக்கு முற்பட்ட காலம்.

இங்கும் ஒரு உண்மையை நாம் காண முடியும். இந்தச் சமூகத்தில் பெண்ணுக்குத்தான் தலைமை இருந்தது. தலைமை என்பது அதிகாரம் செய்வதாக இல்லை. தாய் அன்பு செய்பவள். பகிர்ந்து கொடுப்பவள். இவள் இயற்கையைப் போல, மழையைப் போல, காற்றைப்போல, இவளுக்கு வேறுபாடில்லை. எதையும் தனக்கென இவள் வைத்துக் கொளவதில்லை. இவள்தாள் இயற்கை.

3.

**கா**லம் மாறியது. வரலாற்றுக்குள் நுழைகிறோம். தனியுடைமையும், அரசு அதிகாரமும், வந்துவிட்டன. மெல்ல, மெல்ல

மதபீடங்களும் உருவாகின. ஆயுதங்கள், போர்க் கொடுமைகள், ஏற்றத் தாழ்வுகள் தோன்றிவிட்டன. இயற்கையை ஒருசிலர் வசப்படுத்திக் கொண்டார்கள். அதிகாரத்தைச் சிலர் வசப்படுத்திக் கொண்டார்கள். ஆண்டான் அடிமை முறை தோன்றிவிட்டது. ஆண்டவன் அதிகாரம் செய்கிறான். அடிமைச் சேவகம் செய்கிறான். ஆண்டவன் அடிமையை அடிக்கலாம். வதைக்கலாம். விற்கலாம். அடகு வைக்கலாம். கொல்லலாம்.

இப்படிப்பட்ட காலம்தான், வரலாறுதான் இன்றைக்கும் தொடர்கிறது. இன்றைக்குச் செயல்படுவது முதலாளியம், ஏகாதிபத்தியம், அரசு அதிகாரம், மத அதிகாரம், சாதி அதிகாரம். இவற்றோடு ஒத்துழைப்போர்கள், அதிகாரத்தில் இருப்பவர்கள். இவர்களின் அதிகாரம்தான் எல்லாத் திசைகளில் செயல்படுகிறது.

பணம்தான் கடவுள் என்று பணத்தைத் தேடி சேகரித்துக் காப்பாற்றி வைப்பவன். பணத்திற்கு அடிமையாகிறான். பெயரளவில் இவன் முதலாளி. ஆனால் பணத்துக்கு அடிமை பணமே தனக்கு வாழ்வு. அதுவே தனக்கு மோட்சம் என்று நம்பி பணத்தையே பற்றிக் கொண்டு வாழ்பவன் அச்சத்தோடு வாழ்பவன். இவனிடமிருந்து எந்தச் சமயத்திலும் பணம் பறி போகலாம். பலருக்குச் சேர வேண்டிய செல்வத்தை இவன் பறித்துக் கொண்டவன். ஆகவே இவனிடமிருந்து தனக்குத் தேவையான செல்வத்தை யாரும் பறித்துச் செல்லலாம். ஆகவே இவன் அச்சத்தில் வாழ்கிறான். பணத்தையே பற்றிக் கொண்டு வாழ்பவனுக்குப் பாதுகாப்பு இல்லை. இன்பம் இல்லை. இவனுக்கு நல் உறவுகள் இல்லை. இயற்கையின் பேரழகு இவனுக்குத் தெரியாது.

இப்படித்தான் அரசு அதிகாரத்தை பற்றிக் கொண்டவனும் அச்சத்தில் வாழ்கிறான். இவன் அதிகாரத்தை வேறொருவர் எந்தச் சமயத்திலும் கைப்பற்றிக் கொள்ளலாம். ஆதிக்கம் என்பது அதை செலுத்துபவன் எவனோ அவனுக்கு நிம்மதி தராது. யார் மீது செலுத்துகிறானோ அவர்களுக்கும் நிம்மதி இல்லை. ஆதிக்கம் எந்த வகையில் செயல்பட்டாலும் அது மனிதனுக்கு நல்லது இல்லை. மனிதப் பண்பை, வாழ்வை, இன்பத்தை, அழகுணர்வை, நல்ல உறவுகளை இது நாசமாக்கும்.

ஆதிக்கம் செய்பவனுக்குக் கிடைக்கும் பாதுகாப்போ, பெருமையோ, பெருமிதமோ, இன்பமோ, தற்காலிகமானது.

மலை உச்சியில் வாழ்பவன் நிம்மதியாக வாழ முடியாது. தரையில் வாழ்வதுதான் அவனுக்குப் பாதுகாப்பு. மனிதர்கள் அனைவரும் ஏற்றத் தாழ்வு இல்லாமல் ஒருவரை ஒருவர் அதிகாரம் செய்யாமல், ஒருவர் மற்றவருக்கு உதவி செய்து, கிடைப்பதைப் பகிர்ந்து கொண்டு வாழ்வதில்தான் மனிதர்கள் நிம்மதியாக, மகிழ்ச்சியாக வாழ முடியும். அன்பில்தான் மனிதன் தழைக்க முடியும். திருடன் எப்பொழுதும் நிம்மதியாக வாழ முடியாது. கொலைகாரனுக்கும், குற்றவாளிக்கும் நிம்மதி இல்லை. கொள்ளைக்காரனுக்கும், நிம்மதியில்லை. முதலாளிக்கும், அதிகாரிக்கும் நிம்மதி இருக்க முடியாது. புரோகிதனும் மற்றவர்களை ஏமாற்றித்தான் வாழ முடியும். பொய் சொல்லிப் புராணக் கதைகள் சொல்லி தன்னையும், பிறரையும் ஏமாற்றிக் கொண்டுதான் வாழ முடியும். இவர்களுக்கெல்லாம் கிடைப்பது தற்காலிக இன்பம். அதே சமயத்தில் நீங்காத துயரம். இதுதான் இன்றைய சமூகம்.

4.

இப்பொழுது தொடங்கிய இடத்துக்கு மீண்டும் செல்லலாம். ஆண் அதிகாரம் செய்கிறான். ஆதிக்கம் செய்கிறான் என்பது உண்மைதானா? முதலாளி ஆண் என்றாலும் பணத்துக்கு அடிமை. பணம்தான் அவனை அதிகாரம் செய்கிறது. முதலாளிக்கு ஊழியம் செய்பவர்கள் ஆண்கள். இவர்கள் முதலாளியின் அதிகாரத்துக்குச் சேவகம் செய்யும் அடிமைகள் இவர்களுக்குத் தன்னுரிமை இல்லை. விடுதலை இல்லை. பணத்திற்கு ஏவல் செய்யவும் முதலாளி என்ற அடிமைக்கு இவர்கள் அடிமைகள். இப்படியேதான் அரசு அதிகாரிகளும், அரசுக்குச் சேவகம் செய்கிறார்கள். அதிகாரிகள் ஆண்கள்தான் என்ற போதிலும் இவர்களும் அதிகாரத்துக்கு அடிமைகள்.

ஆண் என்ற இந்த அடிமை பெண் மீது தன் அதிகாரத்தைச் செலுத்துவதன் மூலம் தற்காலிக இன்பம் காண்பவன். இவனுக்கும் விடுதலை இல்லை. இவன் மற்றவர்களுக்கும் விடுதலை தரமாட்டான். சுருக்கமாக இப்படிச் சொல்லாம். முதலாளியம் இருக்கும்வரை அரசு அதிகாரம் இருக்கும் வரை இராணுவம், காவல்துறை, சட்டம்

என்றெல்லாம் இருக்கும்வரை, மனிதர்களுக்கு விடுதலை இல்லை. இவர்களெல்லாம் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு, தன்னையும் கட்டுகளுக்கு உட்படுத்திக் கொண்டு, விடுதலை என்பது என்னவென்றே தெரியாமல் வாழ்பவர்கள். இவர்கள்தான் போட்டி, பொறாமை, வம்பு, வழக்குகள், தற்பெருமை, சூது, போதை, காமம், என்பவற்றுக்கெல்லாம் தம்மை இழந்து தம்மைத்தாமே அழித்துக் கொண்டு, தம்மைத் தாமே சிறுமைப்படுத்திக் கொண்டு வாழ்பவர்கள். இவர்களுக்குத்தான் சாதிப் பெருமை, மதம், சடங்குகள், சாத்திரங்கள், தேவைப்படுகின்றன.

இவர்களுக்கு வரலாறு தெரியாது. வாழ்க்கை தெரியாது. பிரபஞ்சம் தெரியாது. கலைகள் தெரியாது. இவர்கள் அசலான மனிதர்களாக இல்லை. இவர்கள் போலிகள். போலித் தனங்களில் வாழ்பவர்கள். இவர்கள் மூடர்கள். இவர்களுக்கு இயற்கை தெரியாது. குழந்தைக்களை அறியமாட்டார்கள். இவர்கள் தம்மையும் நோகடித்துக் கொண்டு பிறரையும் நோகடிப்பவர்கள்.

இவர்கள் கற்ற கல்வி அசலான கல்வி இல்லை. யாருடைய தேவைக்காகவோ, தம்மை மற்றவருக்கு அடிமைப்படுத்தி வாழ்வதற்கு கல்வி என்று எதையோ கற்றிருக்கிறார்கள். இவர்கள் நோய்களை உற்பத்தி செய்வதற்காகவே மருத்துவம் கற்றவர்கள். இவர்கள் அழகுகளை, ஆபரணங்களை உற்பத்தி செய்வது என்பது பிறரை அடிமைப்படுத்துவதற்காக. இவர்கள்தான் பிறரைக் குற்றவாளிகள் என்று சட்டம் செய்து பலரைச் சிறையில் அடைப்பதன் மூலம் தம்மை நீதிவான்கள் என்று மெய்பித்துக் கொள்கிற அயோக்கியர்கள். பலருக்குச் சேர வேண்டிய செல்வத்தை அபகரித்துத் தம்மிடம் வைத்துக் கொள்வதன் மூலம் தாம் செய்த குற்றங்களை மறைப்பதற்காகச் சட்டம் செய்தவர்கள். இவர்களுக்குக் கடவுள் என்பது என்னவென்று தெரியாது. உண்மை தெரியாது. அன்பு தெரியாது.

5.

முதலாளியமும், அரசு அதிகாரமும், மத அதிகாரமும் எந்த வடிவத்தில் இருந்தாலும், மனிதர்களுக்கு இவற்றில் இருந்து விடுதலை இல்லை. பெண்ணுக்குக் கிடைக்க வேண்டிய உரிமை என்பவை, முதலாளியத்துககு, அரசு அதிகாரத்துக்கு, மத அதிகாரத்துக்கு சேவை

செய்வதன் மூலம் தம்மை இவற்றுக்கு அடிமைப் படுத்திக் கொள்வதற்கு கிடைக்கின்ற உரிமைகள்தான் இத்தகைய உரிமைகள் தற்காலிக இன்பம் தருபவை. நிரந்தரமான விடுதலைக்கு இவை வழி விடுவதில்லை.

ஆணும் இவற்றிக்கெல்லாம் சேவை செய்வதின் மூலம் மேலும் மேலும் தம்மை அடிமைத்தனத்தில் ஆழ்த்திக் கொள்பவன்தான். எந்த ஒரு கட்டத்திலாவது முதலாளி தனக்குச் சேர்ந்திருக்கிற செல்வம் போதும் என்று கருதமாட்டான். அப்படியானால் இவனுக்கு ஊழியம் செய்பவர்கள் மேலும் மேலும் இவனுக்குச் செல்வத்தை சேர்த்துக் கொடுப்பதன் மூலம் இவன் அதிகாரத்தைப் பலமடங்கு பெருக்குவதன் மூலம் தம் அடிமைத்தனத்தை மேலும் மேலும் அதிகரித்துக் கொள்பவர்கள்.

ஏற்றத்தாழ்வு இல்லாத தனி உடமையை அரசு அதிகாரத்தை மேலும். மேலும் சேகரித்துக் கொள்வதற்கு தேவை இல்லாத ஓர் உலகில்தான் மனிதர்கள் தமக்கிடையில் சமததுவத்தோடு வாழ முடியும். இயற்கையைத் தொடர்ந்து அழிப்பதன்மூலம் செல்வத்தை தமக்கென மேலும் மேலும் சேகரித்துக் கொள்கிற பெரும் முதலாளிகள் வாழ்கிற நாள் வரைக்கும் இயற்கை மேலும் மேலும் மாசுப்படுவதை, அழிவதை நம்மால் தடுக்க முடியாது. இயற்கையை இப்படி முதலாளிகள் மேலும் மேலும் வசப்படுத்திக் கொள்வதின் மூலம் நமக்கான வாழ்வியல் ஆதாரங்களை அழிக்கிறார்கள். நோய், நொடிகளைப் பெருக்குகிறார்கள்.

பெண்தான் இயற்கையின் இன்னொரு வடிவம். இவளுக்குத்தான் தாய்மை என்பது, அன்பு என்பது. பகிர்ந்து கொள்வது என்பது புரியும். இவள் அரவணைப்பில்தான் உலகம் பத்திரமாக இருக்கும். பாதுகாப்பாக இருக்கும். இவளுக்குப் போர் தேவையில்லை. ஆயுதங்கள் தேவையில்லை. இராணுவம் தேவையில்லை. அன்பான குழந்தைகள் வளர்வதற்காக உலகத்தை இவள்தான் படைக்க முடியும்.

உரிமைகள் என்ற பெயரில் தமக்கு கிடைப்பதை ஆண்களிடம் இருந்து எடுத்துக் கொள்வதன் மூலம் இவள் புதிய உலகத்தைப் படைக்க முடியாது. ஆண்கள் செய்த ஆதிக்கத்தால், காயப்பட்ட உலகத்தை இவள்தான மருந்திட்டு ஆற்றமுடியும். இதுவரை உலகில் நடந்த போர்கள் இனியும் தேவையில்லை. நாடுகளுக்கு இடையில்,

இனங்களுக்கு இடையில் இனியும் மோதல்கள் அவசியம் இல்லை. உலகத்தை முப்பது முறை அழிப்பதற்குத் தேவையான அணு ஆயுதங்கள் அமெரிக்கா முதலிய நாடுகளில் குவித்து வைக்கப்பட்டுள்ளன. இன்றுள்ள அறிவியல், தொழில் நுட்பங்களின் மூலம் உலகில் அனைவருக்கும் தேவையான உணவை உற்பத்தி செய்ய முடியும். கல்வி தர முடியும். சுகாதார வசதிகளை செய்துதர முடியும். இவற்றை எல்லாம் செய்ய தாய்மைப் பண்பு தலைமைக்கு வர வேண்டும். இதைப் பெண்தான் செய்ய முடியும். தாய்தான் செய்ய முடியும். ஆண்களால் அழிவுப்பட்ட உலகைப் பெண்ணால் தான் புணரமைக்க முடியும். பெண் விடுதலை என்பது இதுதான். இதற்காகத்தான் பெண் விடுதலையின் மூலம்தான் ஆதிக்கவாதிகளிடம் இருந்து மண் விடுதலை பெறும்.

6.

பெண்ணுக்கு இப்பொழுது கல்வி வாய்ப்புகள் கூடி வருகின்றன. அதிகாரங்களிலும் பெண்ணுக்கு வாய்ப்புகள் கூடி வருகின்றன. குடும்ப நிர்வாகத்தில் பெண்ணுக்குரிய முதன்மை இடம் இப்பொழுது எல்லாம் மதிக்கப்படுகிறது. நிர்வாகத்தைப் பெண்கள் சிறப்பாகச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை மிகுந்து வருகிறது. கலைகளை பெண்தான் காப்பாற்றி வருகிறாள். கோவில்களில் பெண் தெய்வங்களுக்கு இன்னும் மரியாதை இருக்கிறது.

பெண்கள் இந்த வாய்ப்புகளை இப்பொழுது/இனி சரியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உரிமைகளோடு பெண்கள் முடங்கிவிடக் கூடாது. ஆதிக்கத்துக்குச் சேவை செய்கிற போக்கை பெண்கள் அனுமதிக்க முடியாது. ஆண் ஆதிக்கம் என்பது அவனது அடிமைத்தளத்தின் இன்னொரு பொய் முகம். அவனது முகத்திரையைக் கிழித்து அவனது உண்மை வடிவத்தை, அவனுக்குக் காண்பிக்க வேண்டும். உண்மையான கல்வி எது என்பதை இனிப் பெண்தான் வகுக்க முடியும். உலகில் அமைதியை இனிப் பெண்தான் நிலை நிறுத்த வேண்டும். போர் ஆயுதங்களை கடலில் கொட்ட வேண்டும். வரலாற்றை இனிப் பெண்கள் புதிதாக படைக்க முடியும். ஆண்களின் ஆதிக்கத்தில் உலகம் இனியும் அழிய முடியாது. பெண்கள்தான் இனி உலகத்தை உய்விக்க வேண்டும். தாய்மையில், அன்பில், சமத்துவத்தில் தழைப்பதுதான் தெய்வம் - தெய்வீகம்.

மீண்டும் சொல்லலாம். பெண் உரிமை என்பது ஒரு வாய்ப்பு விடுதலை என்பது இலக்கு. பெண் விடுதலையின் மூலமே மண் விடுதலை ஆகும்.

*குறிப்பு : 2005, மார்ச் 8ஆம் நாள் திண்டுக்கல்லில் நடைபெற்ற அனைத்துலகப் பெண்கள் நாளைக் கொண்டாடுவதற்காக சகொ. பவுலின் அவர்கள் கேட்டுக்கொண்டபடி எழுதிய கட்டுரை.*

## உலகமயமாதலும் காந்தியமும்

நான் காந்தியவாதி அல்ல. மார்க்சியத்தை நான் நம்புகிறேன் என்ற போதிலும், காந்தியத்தை என்றும் மார்க்சியத்திற்கு எதிர் நிலையில் நான் வைத்துப் பார்க்கவில்லை. அன்றியும் காந்தியத்தின் ஆக்கக் கூறுகளை மார்க்சியம் உள் வாங்கிக் கொள்ள முடியும் என்றும் நான் கருதுகிறேன். காந்தியத்திற்கு எதிராக மார்க்சியத்தை நிறுத்துபவர்கள். வன்முறை என்ற சிக்கல் குறித்தே கவனத்தைக் குவிக்கிறார்கள். காந்தியடிகளும் வன்முறையை என்றும் முற்றாக எதிர்க்கவில்லை.

1942 ஆகஸ்டில் நடைபெற்ற மாநாட்டில் வெள்ளையனே வெளியேறு என்ற கருத்தை முன் வைத்துக் காந்தியடிகள் உரையாற்றும் பொழுது "இந்த நொடி முதல் இது நாள்வரை உங்களுக்கு நான் விதித்திருந்த கட்டுப்பாடுகளை நீக்கிக் கொள்கிறேன். வெள்ளையனிடமிருந்து விடுதலை பெறுவதற்காக நீங்கள் எதுவும் செய்யலாம்." இப்படி தெரிவித்ததன் அடிப்படையில்தான் லோகியா முதலியவர்கள் வன்முறை நெறியில் சென்றார்கள். 1944ல் பீகாரில் ஜமீன்தார்களிடமிருந்து நிலங்களைப் பறித்துக் கொள்வதற்கான இயக்கத்தை உழவர்கள் நடத்திய போது, "சுதந்திர இந்தியாவில் இப்படி இப்படி ஒரு இயக்கம் நடைபெறும் என்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்" என்று லூயி பிஷர் கேட்டபோது "பத்து நாட்களுக்கு நான் மவுனமாக இருப்பேன். அதற்குள் சிக்கல் தீர்ந்துவிடும்" என்றார் காந்தியடிகள். காஷ்மீருக்குள் பாகிஸ்தான் படைகள் நுழைந்தபோது கடைசியாக காந்தியடிகள் இந்தியப் படைகளை அனுப்பலாம் என்று அனுமதித்தார்.

வரலாற்றில் வன்முறையை அறவே தவிர்க்க இயலாது என்பது உண்மைதான். அதற்காக எந்தச் சிக்கலையும் வன்முறை கொண்டே தீர்க்க வேண்டும் என்று மார்க்சியம் கூறவில்லை. பகை முரண்பாடுகளைத் தீர்ப்பதற்கு வன்முறையைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் நட்பு முரண்பாட்டைத் தீர்ப்பதற்கு வன்முறையைச் சிறிதளவும் பயன்படுத்துவது கூடாது. இப்படிக் கூறுகிறது மார்க்சியம். பகைவர் யார், நண்பர் யார் என்று

தீர்மானிப்பதில் அவ்வப்பொழுது சில சிக்கல்கள் எழுவதும் சாத்தியம்தான்.

சமூகத்தின் பொருளியல் கட்டமைப்புக்குள் முதலாளியும் மாட்டிக் கொண்டிருக்கிறான் என்று பார்க்கிற மார்க்சியம் பொருளியல் கட்டமைப்பை மாற்றுவதன் மூலம் அவனையும், மனிதனாக்க வேண்டும் என்கிறது. இந்தக் கருத்திற்குக் கட்சி மார்க்சியர் அழுத்தம் தருவதில்லை. உடமையாளனுக்குள்ளும் மனிதன் இருப்பதை மார்க்சியம் மறுப்பதில்லை. இந்த இடத்தில் காந்தியடிகளின் பார்வை மரியாதைக்குரியது என்பதிலும் ஐயமில்லை.

காந்தியடிகள் உறுதியாகக் கடைப்பிடித்த சத்தியாகிரகம் என்பது. தன்னளவில் ஓர் உறுதியான ஆயுதம். எத்தகைய எதிரியையும் உறுதியாக மாற்றவல்லது இந்த ஆயுதம். காந்தியடிகள் அளவுக்கு உறுதியாக நம்மவர் கடைப்பிடிக்க இயலுமானால் நிச்சயம் சிக்கல்கள் தீரும் என்பதிலும் ஐயமில்லை.

கோழைகள் இந்த ஆயுதத்தை ஏற்க முடியாது. வீரர்களுக்கு மட்டுமே இந்த ஆயுதம் உரியது என்றும் காந்தியடிகள் கருதினார். நம்மவரில் இத்தகைய வீரர்கள் எத்தனை பேர் உள்ளனர் என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். வன்முறை அறவே கூடாது என்று உபதேசம் செய்பவர்களில் பலர் கோழைகளாகவும் இருக்கக்கூடும். நடுத்தர மக்களாகிய நாம் வாழ்க்கை வசதிகள் பலவற்றில் ஊறி இருக்கிற நிலையில் நமக்குள் வீரத்திற்கு இடம் இல்லை.

பொருள் வசதியற்றவர்கள் வீரத்தோடு இருக்க முடியும். வெள்ளையர் ஆதிக்கத்தை சாத்தானின் ஆட்சி என்று காந்தியடிகள் வர்ணித்தார். இன்று நம்மைத் தொடர்ந்து ஊடுருவி வரும் உலகமயமாதலை காந்தியடிகள் இன்று இருந்தால் எத்தனை கடுமையான சொற்களைக் கொண்டு வர்ணிப்பார் என்பதை நாம் கற்பனை செய்ய இயலவில்லை. அந்நியர்களின் ஆதிக்கத்திற்கு நம் அரசியல்வாதிகள் மட்டும் அல்லாமல் நடுத்தர மக்களும் தொடர்ந்து பலியாகி வருகிறார்கள். மேற்கத்திய நாடுகளோடு போட்டிபோடும் அளவுக்கு இந்திய முதலாளிகளிடம் மூலதனமோ நவீன அறிவியல் தொழில் நுட்பங்களோ இல்லை. இவற்றைப் பெறுவதற்காக அந்நிய நிறுவனங்களோடு கூட்டுச் சேர்ந்து கொள்ளும் முறையில் அவர்கள்

செயல்படவே முந்துகிறார்கள். இதன் மூலம் இந்தியாவின் இயற்கை வளங்களை அந்நியர்களுக்கு விட்டுக் கொடுக்கிறார்கள்.

உலக நிதி நிறுவனங்களும், உலக வர்த்தக நிறுவனமும் இடும் கட்டளைகளுக்கேற்ப பொதுத்துறை நிறுவனங்களைத் தனியார் மயப்படுத்துகிறார்கள். ஏற்றுமதி, இறக்குமதி என்ற முறையில் அந்நியர்களுக்கு ஏராளமான சாதகங்களை அரசியல்வாதிகள் செய்கிறார்கள்.

சுதேசியம் என்று இவர்கள் பேசியது எல்லாம் பொய்யாகிவிட்டது மட்டுமல்லாமல், சுதேசியம் என்பதற்கும் புதுப் பொருள் கற்பிக்கிறார்கள். மேற்கத்தியர் நமக்குத் தர விரும்பாத முதல் தரமான தொழில் நுட்பங்களை நாமே படைத்துக் கொள்ள வேண்டும் என்பது இவர்களின் சுதேசியம்.

கிராமங்கள் அழிவது பற்றி இவர்களுக்குக் கவலை இல்லை. வேளாண்மையை இவர்கள் பொருட்படுத்தவில்லை. உலக மயமாதலின் விளைவாக வேலை வாய்ப்புகள் குறையும். வறுமை அதிகரிக்கும். சுரண்டலோடு ஒடுக்குமுறையும் அதிகரிக்கும். ஏற்றத் தாழ்வுகள் பெருகும் என்ற உண்மைகளை எல்லாம் இவர்கள் மறுக்கிறார்கள்.

இந்தியா மீண்டும் அந்நியர்களுக்கு முழு அளவில் அடிமைப்படும் என்ற உண்மையை மறுக்கிறார்கள். உலக மயமாதல், தனியார் மயப்படுத்தல், சந்தைப் பொருளாதாரம் முதலிய போக்குகளை இனி நம்மால் மறுப்பதற்கு இல்லை என்றும், இத்தகைய சூழலில் நாம் என்ன செய்ய வேண்டும் என்பது குறித்துத்தான் நாம் சிந்திக்க வேண்டும் என்றும் நம் நண்பர்கள் கூறுகிறார்கள். இவர்களுள் காந்தியவாதிகளும் இருக்கிறார்கள். இங்குதான் நமக்கு நெருக்கடி அதிகரிக்கிறது. இந்தியா மீண்டும் அடிமைப்படுவதை இன்று காந்தியடிகள் இருந்திருந்தால் எந்த அளவிளாலது ஒப்புக்கொள்வாரா? இந்திய அரசு உடனடித் தேவைகளின் நிர்பந்தங்களைச் சொல்லி உலக வர்த்தக நிறுவனத்தில் கையெழுத்திட்டது. நாடாளுமன்றத்தையோ, மாநில அரசுகளையோ மையஅரசு கலந்து கொள்ளவில்லை.

உலகமயமாதல் நம்மீது திணிப்பது உச்ச அளவிலாள சுரண்டல்.

இதை முதலாளியம் என்றுகூட நம்மால் ஒப்புக் கொள்வதற்கில்லை. முதலாளியம் குறித்த மார்க்சியத்தின் வரையறைகள் இங்கு செயல்படுவதும் இல்லை. தொழிலாளர்களின் உழைப்புத் திறனை மென்மேலும் சுரண்டுவதற்காக முதலாளியம் நவீன இயந்திரங்களைப் புகுத்தும். உபரி மதிப்பு என்பது இப்படித்தான் உற்பத்தியாகும். இந்த மார்க்சிய வரையறைக்கு இப்பொழுது அறவே வாய்ப்பில்லை.

நவீன இரசாயன மற்றும் தானியங்கு சாதனங்கள் பெருமளவில் புகுத்தப்படும் பொழுது, தொழிலாளிகளுக்கு இங்கு இடம் இல்லை. சுரண்டலின் அளவும் பலமடங்கு அதிகரிக்கிறது. உபரிமதிப்பென்று இதைச் சொல்வதற்கு அறவே இடம் இல்லை. லெனின் வரையறை கூறிய ஏகாதிபத்தியம் என்றுகூட இதற்குப் பெயர் சொல்லமுடியாது. அறிவைச் சொத்துரிமை ஆக்குவதை கார்ல்மார்க்சோ. காந்தியடிகளோ ஏற்கமுடியாது.

உலக வர்த்தக நிறுவனத்திற்கு எதிராக உலக அளவில் கடுமையான போராட்டங்கள் எழுகின்றன. மேற்கத்திய நாடுகளில் உருவாகும் போராட்டங்கள் வன்முறையில் முடிவடைகின்றன. உலக மயமாதல் என்பது முதலாளிய அபத்தம் என்று அவர்கள் கூறுகின்றனர். வர்த்தக நிறுவனங்களைத் தகர்க்கின்றனர். ஜெர்மன் அதிபர் அண்மையில் இப்படிக் கூறினார். "காலங் காலமாக மனிதன் வகுத்த அறநெறிகளை இப்பொழுது நம்மால் இழந்துவிட முடியாது."

நவீன அறிவியல் தொழில் நுட்பம் என்பது குளோனிங் முறையில் அரசின் தேவைகளை ஒட்டி மனிதர்களை அறிவாளிகளாகவோ, படைவீரர்களாகவோ, அல்லது முட்டாள்தனமான உழைப்பாளிகளாகவோ உற்பத்தி செய்ய முடியும். இதன் விளைவு என்னவாக இருக்க முடியும். உலக மயமாதலைச் செயல்படுத்தும் பன்னாட்டு நிறுவனங்கள் மலட்டு விதைகளை உற்பத்தி செய்ததைப் போலவே மனிதர்களையும் உற்பத்தி செய்ய முடியும்.

வரலாற்றில் வளர்ந்து வந்த மனித நாகரிகத்திற்கு அழிவு நேரும். மார்க்சியம் மட்டுமல்லாமல், காந்தியவாதியும் இத்தகைய கடும் போக்கை ஏற்க முடியாது. காந்தியடிகள் கிராம சுயராஜ்யம் என்றும், தீர்மானத் திட்டங்கள் என்றும் சுய தேவைப் பூர்த்தி என்றும் சர்வோதயம் என்றும் பல படியாகப் பேசினார். செயல்பட்டார்.

இயந்திரங்களை காந்தியடிகள் முற்றாக மறுக்கவில்லை. உடலும் கூட ஓர் இயந்திரம்தான் என்றார். இயந்திரங்களினால் பெறுகும் உற்பத்தியின் பயன்கள் சமூகத்திற்குப் பரவலாக வேண்டும் என்றார் காந்தியடிகள். மையத்தில் அதிகாரத்தைக் குவிப்பதை காந்தியடிகள் ஏற்கவில்லை. பரவலாக்கல் என்பது காந்தியின் கொள்கை. உடல் உழைப்பு இன்றியமையாதது. உழைக்காமல் ஒருவர் உண்பது கூடாது. எளிய வாழ்க்கை நமக்குப் போதும். கிராமங்கள் புத்துயிர் பெற வேண்டும். முதலாளிகள் தர்மகர்த்தாக்களாகச் செயல்பட வேண்டும். ஆயுதங்கள் தேவை இல்லை. இவ்வாறெல்லாம் காந்தியடிகள் கூறியதோடு இவற்றை நம்பினார்.

நாம் நடுத்தர மக்கள். படிப்பாளிகள். அரசுப் பதவிகள் முதலியவற்றில் நாம் இருக்கிறோம். வாழ்க்கை நமக்கு உறுதிப்பட்டிருக்கின்றது. கை நிறைய ஊதியம் பெறுகிறோம். சொந்த வீடு, நவீன வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருக்கிறோம். இவற்றின் வழியே நாம் என்ன ஆகியிருக்கிறோம். நுகர்வியத்திற்கு நாம் குறைந்தளவுக்கேனும் இடம் கொடுத்திருக்கிறோம். அரசு அதிகாரம், முதலாளிகளின் அதிகாரத்திற்கு நாம் இடம் கொடுத்திருக்கிறோம். இவற்றுக்கு நாம் வசப்பட்டிருக்கிறோம். நம் வழி''ாகத்தான் அரசதிகாரம் முதலியவை மக்கள் மீது செலுத்தப்படுகின்றன. மக்களை அரசும், முதலாளிகளும் சுரண்டுவதற்கு நாம் ஒத்துழைக்கிறோம். இதற்காகத்தான் அரசும் முதலாளியும் நமக்கு நல்ல ஊதியம் வழங்குகிறார்கள். மக்களின் வாழ்க்கைத் தரம், பண்பாடு முதலியவற்றை அழிப்பதன் மூலம்தான் நமக்கான வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருக்கிறோம். நம் கல்வி அறிவு, பதவி, மூளைத்திறன், நூலக வசதி முதலியனவெல்லாம் இப்படித்தான் நமக்குக் கிடைத்தன. உலகமயமாதலையும் நாம்தான் செயல்படுத்துகிறோம். ஒரு மார்க்சியன் மட்டுமல்லாமல் ஒரு காந்தியனும் இப்படித்தான் இன்று சிந்திக்க வேண்டும். வாழ்க்கை வசதிகளை முழு அளவில்விட்டுக் கொடுத்தால் ஒழிய, உண்மையான மார்க்சியனாகவோ, காந்தியவாதியாகவோ நாம் இருக்க முடியாது. நம்மால் இப்படிவிட்டுக்கொடுக்க முடியாது.

வாழ்க்கை வசதிகள் நம்மை ஆட்கொண்டுள்ளன. இவற்றின் மூலம் நாம் அந்நியர்களுக்கும் சேவை செய்கிறோம். ஓரளவுக்கேனும் இவை குறித்துச் சிந்திக்கும்பொழுது மனச் சான்று நம்மைக்

குடைகிறது. ஏதாவது செய்தாக வேண்டும் என்று துடிக்கிறோம். உலகமயமாதலை உண்மையாக எதிர்ப்பதென்றால், அந்நிய நிறுவனங்களுக்கு எதிராக மட்டுமல்லாமல், நம் அரசுக்கெதிராகவும், அரசியல்வாதிகளுக்கு எதிராகவும், நிறுவனங்களுக்கெதிராகவும் நாம் கடுமையாகப் போராட வேண்டும். பதவியில் உள்ளவர்கள், பத்திரிக்கையாளர்கள் உலகமயமாதலை ஒப்புக்கொள்கின்றனர். ஆங்கிலக் கல்வி தேவை/கணினி முதலிய தொழில்நுட்பக் கல்வி தேவை. இப்படிக் கற்றால்தான் அமெரிக்கா செல்ல முடியும் என்று கூறுபவர்களை நாம் எதிர்க்க வேண்டும். இப்படிப்பட்டவர்களை வெளியில் மட்டும் அல்லாமல் நமக்குள்ளும் கண்டுகொண்ட நிலையில்தான், உலகமயமாதலை எதிர்க்க முடியும். நம்மால் எதிர்க்கும் திறன் இல்லையென்று கரதும் நண்பர்கள் நஞ்சை உண்பதைத் தவிர நமக்கு வாழ்க்கை இல்லை. எப்படி இதைச் செரிப்பது என்றுதான் இனிச் சிந்திக்க வேண்டும் என்றும் கூறுகிறார்கள். இந்தப் போக்குக்கு காந்தியவாதிகள் எப்படி பலியாக முடியும்?

மிகக் கடுமையான முறையில் இரண்டு மாதங்களுக்குமேல் போராடிய பிறகு டில்லியில் பால்கோ நிறுவனத் தொழிலாளிகள், வேறு வழியில்லை என்று விட்டுக் கொடுத்தார்கள். தொலைத் தொடர்பு பணியில் உள்ளவர்கள், வங்கி ஊழியர்கள், ஆயுள் காப்பீட்டுக் கழக ஊழியர்கள் முதலியவர்கள் பெயர் அளவுக்குப் போராடி இனி நம்மால் முடியாது என்று ஓய்ந்துவிட்டார்கள். என்ட்ரான் நிறுவனத்தோடு இனி அரசு ஒத்துச்செல்ல முடியாது என்ற நிலை தோன்றியுள்ளது. அந்நிய நிறுவனத்தினர் நம்மை அச்சுறுத்துகிறார்கள். உச்ச நீதிமன்றம் நமக்கு ஆதரவாய் இல்லை. நர்மதை நதியின் அணைக்கட்டின் மட்டத்தை உயர்த்துவதற்கு உச்ச நீதி மன்றம் ஒப்புக் கொள்கிறது. உலகநிதி நிறுவனம் பணம் தருகிறது.

உலக மயமாதலின் விளைவாகத் தொழிலாளர்களுக்கு பாதிப்பு இருக்க முடியாது என்று அரசு நாள் தவறாது பொய் சொல்லுகிறது. அரசியல் கட்சிகள் ஒத்தும் முரண்பட்டும் செயல்படுகிறார்கள். நெருக்கடிகள் அதிகரிக்கின்றன. நாள்தோறும் தற்கொலைகள் அதிகரிக்கின்றன. தொடர்ந்து விபத்துக்கள். கொலைகள். கோடிக் கணக்கில் ஊழல்கள். நிலைமை பொறுத்துக்கொள்ளக்கூடியதாக இல்லை. காந்தியவாதிகள் மக்களை ஏமாற்றிவிடக்கூடாது.

சத்தியாகிரகம் என்பது வீரர்களுக்குரிய கூர்மையான ஆயுதம். மக்களைத்திரட்டி இந்த ஆயுதத்தைக் கடுமையாகப் பயன்படுத்துவதைத் தவிர காந்தியவாதிகளுக்கு வேறுவழியில்லை. மனச் சாட்சி உள்ள மார்க்சியரும் காந்தியவாதிகளோடு கைகோத்துக்கொள்ள முடியும். என்ன செய்வது? எங்கே தொடங்குவது என்றுதான் இனித் திட்டமிட வேண்டும்.

*குறிப்பு : உலகமயமாதலும் காந்தியமும் என்னும் பொருளில் கோவையில் காந்தியவாதிகள் கூட்டிய கருத்தரங்கு நடைபெறுவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் கருத்தரங்கிற்குப் பொறுப்பான அறிஞர். மா.பா.குருசாமி அவர்களுக்கு எழுதிய மடல். பாரதிய ஜனதா கட்சி கூட்டணியின் ஆட்சி அப்போது நடைபெற்றது. நாள் : 27–6–2001*

# தமிழகத்தில் மெய்யியல் – இருபதாம் நூற்றாண்டுச் சூழல்

இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் இந்தியாவில், குறிப்பாகத் தமிழகத்தில் மெய்யியல் சிந்தனைகள் குறித்துச் சிலவற்றை இங்கு சொல்லலாம். மேற்குலகில் இருநது வந்த மெய்யியல் சிந்தனைகள், பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்திய மெய்யியலை வெகுவாகப் பாதித்ததை பிரம்ம சமாஜம், இராமகிருஷ்ணர் இயக்கம் முதலியவற்றின் வழியே வெளிப்படையாக அறிய முடியும். விவேகானந்தர், அரவிந்தர் ஆகியவர்களுக்குள் எழுச்சிபெற்ற தீவிரமான மெய்யியற் போக்கை, மேற்கத்திய மெய்யியலை உள்வாங்கிக் கொண்டதோடு அதன் விளைவாகவும், அதற்கு எதிர்வினையாகவும் இந்திய மெய்யியலுக்குள் இவர்களின் வழியே ஏற்பட்ட எழுச்சி என்றே குறிப்பிடுவது பொருந்தும். இத்தகைய போக்கு இன்றுவரை தொடர்வதை நம்மால் புரிந்துகொள்ள இயலுமென்றாலும் மேற்கத்திய ஆதிக்கத்திற்கு எதிர்நிலையில் நமக்குள் இறுக்கம் கொண்ட சமயவாதப் போக்கையும் நாம் இனங்காண முடியும். இந்தியாவின் விடுதலைப் போராட்ட வரலாற்றினுள் இந்த இருவகைப் போக்கின் தாக்கங்களையும் நாம் காணலாகும். திலகர், காந்தி முதலியவர்களை இப்படித்தான் நாம் புரிந்து கொள்ளமுடியும்.

சமயம் என்பதும் மெய்யியல் என்பதும் தமக்குள் ஒத்தும் முரண்பட்டும் செல்லும் இருவகை சிந்தனை மற்றும் வாழ்வியல் போக்குகள். தொன்மைக்காலம் முதல் தொடர்ந்துவரும் சமயங்கள் சமய நிறுவனங்கள் எத்தகையனவாக இருந்த போதிலும் கடந்த சில நூற்றாண்டுகளுக்குள் தொடர்ந்து வளர்ச்சி பெறும் அறிவியல் சார்ந்த ஆய்வு முறைகள் வழியே நமக்குப் பல தெளிவுகள் ஏற்பட்டு உள்ளன. சமயம்/சமய நிறுவனம் என்ற கட்டமைப்பினுள் வரலாறு மற்றும் பொருளியல் சார்புகளைக் காணமுடியும். சமயம் என்பதை மானுடவியல் நோக்கிலிருந்தும், சமூகவியல் மற்றும் உளவியல் நோக்கில் இருந்தும் ஆராய்ந்து சில/பல உண்மைகளைக் கண்டறியமுடியும். சமய நிறுவனங்கள் என்பதைத் தனியுடைமை மற்றும் அரசு அதிகாரத்தோடும் நெருக்கமான உறவுடையவை. இவை தவிர அறிவியல் மற்றும் கலையியல்/அழகியல் நோக்கிலிருந்தும் சமயத்தை நம்மால் ஆராய முடியும்.

சமயம் என்ற கட்டமைப்பை இவ்வாறு பகுத்து/தகர்த்து

ஆராயும்பொழுது இன்றைக்கும் நம் வாழ்வுக்கும் வரலாற்று இயக்கத்திற்கும் தேவையான சில கூறுகளைச் சமயத்திற்குள் நாம் கண்டுதெளிய முடியும். சடங்குகள் இல்லாமல் சமூகத்தின் கட்டமைப்பை நாம் புரிந்துகொள்ளவோ காப்பாற்றவோ இயலாது. ஆகவே காலாவதியான சடங்குகளைக் கைவிடும்போதே இன்றும் நமக்குத் தேவையான சில சடங்குகளை நாம் தக்கவைத்துக் கொள்ளவேண்டும். கடவுள், ஆன்மா, மோட்சம், நரகம், வீடுபேறு, பாவம், புண்ணியம் ஆகிய கருத்தாக்கங்களிலிருந்து இன்றும் நாம் மீட்டுக்கொள்ள வேண்டிய உணர்வுகளும் கருத்துநிலைகளும் இருக்கின்றன. உலகம் மற்றும் பிரபஞ்ச அளவில் தொடர்கின்ற இயற்கையையும் மனிதனின் வாழ்வியலோடு தொடர்புடைய சமூகம் மற்றும் வரலாற்று இயக்கத்தையும் புரிந்துகொள்வதற்கும் அதனோடு ஒத்தோ முரண்பட்டோ இயங்குவதற்கும் உரிய நெறிமுறைகளைச் சமயங்கள் கொண்டுள்ளன என்ற புதியவகைப் புரிதலோடு ஆராயும்போது சமயத்தின் வழியே இன்றும் தக்கவைத்துக் கொள்ள வேண்டிய மனித அனுபவத்தின் திரட்சிக்குத் தேவையான முக்கியத்துவத்தை நாம் காண முடியும்.

இயற்கை, வரலாறு, சமூகம், தனியுடமை, அரசு நிறுவனங்கள் முதலியவற்றின் வழியிலும் இவற்றைக் கடந்தும் மனிதன் தனது முற்றான விடுதலை நோக்கி முன்செல்லும் ஒரு மாபெரும் முயற்சி என்பதற்கான வரலாற்று இயக்கத்தினுள் ஒரு வடிவம் என்ற முறையில் சமயம் குறித்து நமக்கான பார்வையைப் படைத்துககொள்ள முடியும்.

இவ்வகைப் புரிதலோடுதான் இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் இந்திய/தமிழக சமயம் மற்றும் மெய்யியல் போக்கை நாம் பார்க்கிறோம். மனித வாழ்வியலிலிருந்து சமயத்தை வெளியேற்ற இயலாது என்பதை ஒப்புக் கொள்ளும்பொழுதே சமயத்தினுள் இதுநாள் வரை செயல்பட்ட மெய்யியற் கூறுகளுக்கு அழுத்தம் தருவதும், இயலுமானால் மனித விடுதலை நோக்கில் மெய்யியற்கூறுகளை சமயம் என்ற தொகுப்பினுள்ளிலிருந்து விடுவித்துப் பார்ப்பதும் இத்தகைய ஆய்வில் நமக்குரிய தேவைகள்.

இவ்வகை நோக்கில் சிலவற்றை இங்கு தொகுத்துச் சொல்லலாம். மரபு முறையில் வந்த சைவ சமயத்தினுள் வள்ளலார் ஏற்படுத்திய பிளவு அல்லது மாற்றம் இன்றும் மரியாதையோடு குறிப்பிடத்தக்கது. அன்பும், சிவமும் ஒன்றுதான் என்று திருமூலர் கண்டுரைத்த அன்புநெறியை வள்ளலார் சைவ சமயத்தினுள்ளிலிருந்து

விடுவித்தாரென்று குறிப்பிடுவது பொருந்தும் இவர் நெறி ஒரு வகையில் இடதுசாரிநெறி. இந்த நெறி இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் திரு.வி.க.வின் வழியே மார்க்சியத் தாக்கத்தோடு ஒரு புதுப்பொலிவைப் பெற்றது வள்ளலார் நெறியை அடுத்து வந்தவர்கள் இதை வளர்த்தெடுக்கவில்லை. சைவ சமயத்தினுள் இன்னொரு வகையான பிளவை ஏற்படுத்தியவர் என்று மறைமலையடிகளைக் குறிப்பிடலாம். சிவனைப் பற்றிய கட்டுக்கதைகளை இவர் மறுத்ததையும், மண உறவை மறுத்த மடாதிபதிகளின் நோக்கோடு இவர் முரண்பட்டதையும் இங்கு சிறப்பாகக் குறிப்பிடலாம். சைவத்தைத் தமிழ்ச் சமயம் என்பதில் இவருடைய துணிவு பாராட்டத்தக்கது. வேளாளரோடு சைவத்தின் சார்பை இவர் கண்டுரைத்தது இலரது சமூகவியல் நோக்கைத் தெளிவு படுத்துகிறது. எனினும் சைவத்தின் சாதியச் சார்பு இறுகுவதற்கு இவர் காரணமாக இருந்தார் என்ற குற்றச்சாட்டிலிருந்து இவரை விடுவிப்பது கடினம்.

யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த ஆறுமுக நாவலர் என்ற பெரியவரையும் இங்கு நாம் குறிப்பிட வேண்டும். ஆங்கிலேயரின் அரசதிகாரம் இறுகி வரும் சூழலில் கிறித்துவ மதப்பரவல் அதிகரித்து வந்த சூழலுக்குத் தீவிரமான எதிர்வினை தரும் முறையில் ஆறுமுக நாவலரவர்களின் இயக்கம் அமைந்திருந்தது.

எதிரியின் ஆளுகையைத் தடுத்து நிறுத்துவதென்ற முறையில் தம்மை இறுக்கிக் கொள்ளுவதாகிய தவிர்க்க இயலாத போக்கை, வலது சாரிப் போக்கை இவர் வழியே நாம் காண முடியும். தமிழ்நாட்டில் செயல்பட்ட சைவமடங்களனைத்தும் தம் உடைமைகளையும் வகைப்பட்ட அதிகாரத்தையும் தக்கவைத்துக்கொள்ளும் வகையில் செயல்பட்டன என்பதைத் தவிர மனித விடுதலையென்ற நோக்கில் ஒரு சிறு அசைவைக் கூட இவர்கள் செய்யவில்லை. இவர்களுக்கு நடுவில்தான் குன்றக்குடி அடிகளார் ஒரு மாபெரும் வீச்சோடு செயல்பட்டார். இவர் வழியே சைவம் பெற்ற ஆக்கங்களைக் காட்டிலும் தமிழ்ச் சமூகம் பெற்ற ஆக்கம் மிகப்பெரிது என்று குறிப்பிடலாம். பகுத்தறிவு மற்றும் மார்க்சியம் ஆகியவற்றின் ஊட்டத்தோடு சைவ சமயத்திற்குப் புதுப்பொலிவு தர அடிகளார் முயன்றார். எனினும் சைவ சமய எல்லைக்குள்ளிருந்துதான் இவர் செயல்பட வேண்டியிருந்தது. இவ்வகையில் சைவ மடங்களின் ஆதிக்கத்திலிருந்து இவர் தம்மை விடுவித்துக்கொள்ள இயலாதவராகத்தான் இருக்க நேர்ந்தது.

தமிழகச் சூழலில் சைவ சமயம் தனக்குள்ளிருந்து விடுவித்த ஒரு பேரியக்கம் எனத் திராவிட இயக்கத்தை நாம் குறிப்பிடலாம். ஆரியத்தோடு ஒத்தும், முரண்பட்டும் அதுநாள் வரை செயல்பட்ட சைவ சமயம், இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் சமூக ரீதியில் தன்னை திரட்டிக்கொள்ளும் நோக்கில் திராவிட இயக்கமாகப் பரிமாணம் கொண்டது. இத்தகைய தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தவர் பேராசிரியர் சுந்தரனார் அவர்கள்.

பெரியார் தலைமையில் பின்னர் செயல்பட்ட திராவிடர் இயக்கம் சைவ சமயத்தோடு தான் கொண்டிருந்த உறவை ஒரு கட்டத்தில் முறித்துக்கொண்டது. பார்ப்பனர் அல்லாதார் இயக்கமென்ற முறையில் செயல்பட்ட நீதிக்கட்சியினுள் இணைந்திருந்தவர்கள் பிறகு எதிர்த்திசைகளில் பிரிந்து சென்றனர். இந்தப் பிரிவுக்குப் பிறகு சைவம் தன் கூட்டிற்குள் சென்று முடங்கியதென்றே சொல்லலாம். குன்றக்குடி அடிகளாரும், பெரியாரும் என்னதான் நெருங்கிவந்தபோதிலும், சைவத்தினுள் இருந்த சமூக சக்திகளுக்கு முற்றான விடுவிப்பு இன்றளவும் சாத்தியமில்லை.

பார்ப்பனியத்தோடு இவர்கள் கொண்ட முரண்பாடுகள் தமிழகச் சூழலில் எந்தவொரு இயக்கத்தினுள்ளும் இன்றளவும் தீவிரமாகச் செயல்படுவதை நாம் காண முடியும். தமிழகத்திற்குள் வந்த கிறித்தவ மத இயக்கங்களும், பார்ப்பனியத்திற்கெதிரான போராட்டத்தில் விட்டுக்கொடுக்காமல் இன்றளவும் செயல்படுகின்றன. இந்தியாவில் நிலவும் சாதியக் கட்டமைப்பின் தலைமையிலிருக்கும் பார்ப்பனருக்கு எதிரான இயக்கத்தில் தான் இவர்களனைவரும் தத்தமக்குரிய முறையில் செயல்படுகின்றனர். அரசு அதிகாரத்தில் பார்ப்பனர் பெற்ற இடம் குறித்து இவர்கள் ஆத்திரம் கொள்வதற்கான நியாயத்தை நாம் ஏற்கமுடியும். அதேசமயம் அன்னியர் ஆதிக்கத்தின் ஆதரவோடு தனியுடைமை முறை இங்கு தக்கவைக்கப்படுவதற்கும் இந்தத் தனியுடைமை அதிகாரத்தோடு சாதிய அமைப்பு ஒத்தியங்குவதற்குமான இணைப்பைத் தகர்த்தாலன்றி சாதிய அமைப்பையோ பார்ப் பனியத்தையோ தகர்க்க முடியாது என்ற உண்மையை இவர்களனைவரும் இன்றளவும் கண்டும் காணாதும் இருந்து வருகின்றனர்.

கடவுளையும், மதத்தையும் காப்பாற்றுவதை தனியுடைமை மற்றும் அரசமைப்பைத் தக்கவைத்துக் கொள்வதோடு இவர்கள் இணைத்துக் காண்கின்றனர். இதன் காரணமாக மனித விடுதலையென்ற நோக்கில் இவர்கள் செயற்படுவதில் சுணக்கம் கொள்கின்றனர்.

மனித விடுதலைதான் சமயத்தின் மெய்யியல் உள்ளடக்கம் என நாம் காண முடியுமானால் இவர்கள் சமயத்தைக் காப்பாற்றும் எண்ணத்தோடு மனித விடுதலைக்கெதிராகத்தான் செயல்படுகின்றனர் என்று நாம் சொல்ல முடியும்.

மேற்கிலிருந்து வந்த சில மெய்யியல சிந்தனைகளின் தாக்கம் குறித்து நாம் இன்னும் சிலவற்றைக் குறிப்பிடலாம். கிறித்துவ மதம் மட்டுமல்லாமல் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பனவற்றை உள்ளடக்கிய சனநாயகம் என்ற கருத்தாக்கமும் பொருள்முதல்வாதம் என்ற கருத்தாக்கமும் மேற்கிலிருந்து இங்கு வந்து சேர்ந்ததையும் நாம் குறிப்பிடலாம். கிறித்வ மதம் அன்பு குறித்து இங்கு அதிகம் பேசியது. இந்திய மக்களுக்கு கல்வியும், மருத்துவமும் தந்தது. சுதந்திரம், சமத்துவம் என்ற கோட்பாடுகள் இந்தியச் சமயத்தினுள் தீவிரமான கிளர்ச்சியை ஏற்படுத்தியது. எம்மதமும் சம்மதம் என்ற கருத்தாக்கம் இங்கு வலிமை பெற்றதை பரமஹம்சர் வழியே நாம் காண்கிறோம். விவேகானந்தருக்குள் சோசலிசக் கருத்தாக்கத்தை நாம் காண்கிறோம். இந்தியாவிற்கான விடுதலை என்பது சமயத்திற்குள்ளிருந்தும் ஒரு பேரெழுச்சியை ஏற்படுத்தியது. இந்தியா என்பதை பாரதமாதா என்று கண்டதோடு இவள் விடுதலைக்காக ஆயுதமேந்தவும் இளைஞர்கள் மத எல்லைக்குள்ளிருந்து முன்வந்தனர். இயேசுவைக் கூட இந்தியத் தெய்வங்களின் பட்டியலில் இணைத்துக்கொள்ளச் சிலர் முன்வந்தனர். இயேசு ஒரு இந்திய சன்யாசிதான் என்றும்கூட கிறித்துவ எல்லைக்குள்ளிருந்து குரல் எழுந்தது.

மேற்கத்திய தாக்கத்திற்கெதிராக இந்து நாகரிகத்தையும், இந்து மதத்தையும், தக்கவைத்துக்கொள்ளும் நோக்கில் விடுதலை இயக்கத்தில் தம்மை இணைத்துக்கொண்டவர்களில் பலர் இந்துத்துவம் என்ற தீவிரப்போக்கைத் தோற்றுவித்தனர். வேற்றுமைக்குள் ஒற்றுமை காண்பது இந்துமதம் என்ற டாக்டர் இராதாகிருஷ்ணன் முதலியவர்களின் ஆய்வுகள் இங்கு நாளடைவில் புறக்கணிக்கப்படலாயிற்று. விவேகானந்தரின் அத்வைத நோக்கிலான சமத்துவம் இங்கு இந்துத்துவத்திற்குள் இடம்பெறவில்லை. காந்தி, இராதாகிருஷ்ணன் முதலியவர்கள் போற்றிய இந்துமதம் என்பதன் பன்முகப் பார்வை இன்று மதிக்கப்படவில்லை. மனித விடுதலைக்கான கூறுகள் ஒவ்வொன்றையும் இந்து மதத்தின் எல்லைக்குள்ளிலிருந்து வெளியேற்றுகிற போக்கு இன்று தொடர்கிறது. இதன் விளைவாக

மதவாதம் முன்னுக்கு வரும். அதே சமயம் மதம் அழியும். அதாவது மதம் என்பதனுள்ளிருக்கும் ஆக்கச் சக்திகளுக்கு அழிவு நேரும். மத நிறுவனம் என்பதினுள்ளிருக்கும் புரோகிதச் சக்திகள் ஆக்கம் பெறும்.

இந்தியாவில் சார்வாகம் என்றும், பூதவாதம் என்றும் நிலவி வந்த பொருள் முதலியல் கருத்துக்கள் இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் ஆக்கம் பெற்றதை நாம் புரிந்துகொள்ளலாம். அரசியலிலிருந்தும், பொருளியலிலிருந்தும் மக்களைப் பிரித்துப் பார்க்க முடியாது. மக்களுக்கு நீர் வேண்டும், நிலம் வேண்டும் என்பதன் தொடர்ச்சியாகப் பொருள் முதலியலின் இன்றியமையாமையை நாம் ஏற்ற முடியும். ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து நாட்டை விடுவிக்க வேண்டும் என்பதனுள் இந்தக் கருத்தியல்தான் இடம்பெறுகிறது. இதன் தொடர்ச்சியாகவும், வளர்ச்சியாகவும் தமிழகத்திற்கு மார்க்சியம் வந்து சேருகிறது. பெரியாரின் பகுத்தறிவு இயக்கம் மார்க்சியத்தோடு இணைந்து இங்கு அற்புதங்களை நிகழ்த்தியிருக்க முடியும். இதற்கான வாய்ப்புக்களை இந்த இருவகை இயக்கங்களும் தவறவிட்டன. மதம் என்பதை மக்களுக்கு அபின் என்று பார்க்கும்போதே இதயமற்ற உலகின் இதயம் என்றும் பார்த்திருக்க முடியும். மதத்தினுள்ளும் வர்க்கப்போராட்டம் தொடர்வதைத் தமிழக வரலாற்றின் வழியேயும் கண்டிருக்க முடியும்.

திராவிட இயக்கம் சைவ சமயத்தின் இடதுசாரிப் போக்கினரோடு இணைந்து செயல்பட்டிருக்க முடியும். மதத்தினுள்ளிருக்கும் புரோகிதச் சக்திகள், தனியுடைமை அரசதிகாரம் ஆகியவற்றோடு இணைந்திருப்பதையும், மதத்தின் எல்லைக்குள்ளிருக்கும் மெய்யியல் கூறுகள் மனித விடுதலையோடு உறவு கொண்டிருப்பதையும் இவர்கள் புரிந்துகொண்டிருக்க முடியுமானால் தனியுடைமைக்கு எதிராகவும் ஆங்கிலேயரின் அரசதிகாரத்திற்கு எதிராகவும் இணைந்து செயல்பட்டிருக்க முடியும். இந்து மதத்தினுள்ளிருந்தே விடுதலைக்கான இறையியல் தோன்றியிருக்க முடியும். குன்றக்குடி அடிகளாரின் முயற்சிகள் பெரும் வீச்சோடு செயல்பட்டிருக்கும்.

இறுதியாக இப்படிச் சொல்லலாம். மெய்யியற்பார்வை இல்லாமல் வாழ்வு இல்லை, இயக்கம் இல்லை, விடுதலை இல்லை. ஆதிக்கங்களுக்கெதிராக என்றும் செயல்படுவது மெய்யியல். ஆதிக்கத்தை உள்வாங்கிக் கொண்ட எந்த இயக்கமும் மனித விடுதலைக்கு எதிர்நிற்கும். திராவிட இயக்கமோ, மார்க்சிய இயக்கமோ இந்த விதிக்கு விலக்காக இருக்க முடியாது. நமக்கு மெய்யியல் வேண்டும். விடுதலை வேண்டும். 20ம் நூற்றாண்டின்

இறுதியிலேனும் இதைப் புரிந்து கொள்கிறோம்.

தமிழ் வரலாற்றில் மெய்யியலுக்கு எத்தகைய இடம் இருந்த போதிலும் 20ம் நூற்றாண்டுச் சூழலில் பலமுனையில் இருந்து மோதல்கள் நிகழுகின்றன. வாழ்வில் மெய்யியலுக்கு எப்பொழுதும் வெளிப்படையான இடம் இல்லை. சமயத்தினுள்ளும் அரசியல் முதலியவற்றினுள்ளும் ஆழத்தில் இருந்தபோதிலும் அடிப்படை ஆதாரமாக மெய்யியல் இருப்பதில்லை. மெய்யியல் ஒதுக்கப்பட்டு அரசியல், மதம் முதலியவை வாழ்வை அடைத்துக் கொள்கின்றன. கடுமையான சிக்கல் நேரும்பொழுதுதான் நாம் எங்கிருக்கிறோம்? எங்கே போகிறோம்? என் வாழ்விற்கு அர்த்தமென்ன? என்றெல்லாம் சிந்திக்கிறோம். இப்பொழுதுதான் மெய்யியல் மையத்திற்கு வருகிறது. அரசியலென்றும், மதமென்றும் நாம் செயல்பட்ட போதெல்லாம் உடைமைக்கும் அதிகாரத்திற்கும் நாம் இடங்கொடுத்திருக்கிறோம்.

பொருளியல் சக்திகள் நம்மைத் தமக்குள் முடக்கி வைக்கின்றன. அவற்றிற்குச் சேவகம் செய்து நம்மை நாம் இழந்தோம். கடவுள் என்றும் சடங்குகள் என்றும் சாதி என்றும் பணம் என்றும் கட்சி என்றும் நாம் வாழ்ந்த பொழுதெல்லாம் நம்மை நாமே கண்டுகொள்ள முடியவில்லை. இவை நமக்குள் அதிகாரமாக, பக்தியாக, இன்பமாக, வெறியாக மாறி நம்மை அடைத்துக்கொண்டிருந்த போது நமக்கு உண்மைகள் தெரியவில்லை. இவற்றை எப்பொழுதெல்லாம் இழக்க நேரிடுகிறதோ, அப்பொழுதெல்லாம் நமக்குள் தேடுகிறோம். இத்தகைய தேடல், மெய்யியலுக்கான தேடல்.

20ம் நூற்றாண்டுச் சூழலில் நமக்கு நேர்ந்தது என்ன? என்பது குறித்து மெய்யியல் நோக்கிலான தேடலின் அவசியம் குறித்துத்தான் இந்தக் கட்டுரை. காங்கிரசு கட்சியோ, பிறவகை இயக்கங்களோ அதிகாரத்தில் பங்கு பெறுவதற்கான அரசியலை நடத்திக் கொண்டிருந்தன. இவர்களின் அரசியலை மனித விடுதலைக்கான அரசியலென்று சொல்லமுடியாது. சமய வகைப்பட்ட இயக்கங்களும், இத்தகைய அரசியலைத்தான் நடத்திக்கொண்டிருந்தன. இவையனைத்தையும் குறுகிய நோக்கிலான கருத்தியல் என்று சொல்லமுடியுமே தவிர கருத்தியல் தளத்தைக் கடந்து செல்வதாகிய மெய்யியல் என்று இவற்றை நாம் சொல்ல முடியாது. மெய்யியல் என்பது சாதியைக் கடந்து வர்க்கங்களைக் கடந்து அதிகாரத்தைக் கடந்து அமைப்புக்களைக் கடந்து இயங்க வேண்டும். குறுகிய வரையறைகளுக்குள் செயல்படுவது கருத்தியல். வரையறைகளுக்குள்

தான் அடைபட்டிருப்பதை உணர்ந்து இவற்றைக் கடந்து செல்வது மெய்யியல்.

கடவுள், சடங்கு என்று தொடங்கினாலும் இவற்றின் வழியே இவற்றைக் கடந்து சென்று எல்லாவற்றினுள்ளும் நாம் நிறைய வேண்டும். இயற்கையோடும் உயிர்களோடும் நாம் இரண்டறக் கலந்துவிட வேண்டும். ஏற்றத்தாழ்வுகளுக்கு இங்கு இடமில்லை. அன்பென்றும் சிவமென்றும் இங்கு பேசமாட்டோம். நாமே அன்பாய் அமர்ந்திருப்போம்.

உடைமையையும், அதிகாரத்தையும் கட்டி வளர்க்கும் எந்த அமைப்பும் மனித விடுதலைக்காக முழு அளவில் செயற்பட இயலாது. அமைப்பு வேண்டாம் என்பதில்லை அமைப்பு தேவைப்படுகிறது என்கிற போதே அதனுள் நாம் இறுகுகிறோம் என்பதை அறிந்து அதை கலைத்துக்கொள்வது பற்றியும் நாம் கவனம் கொள்ளவேண்டும். கடவுள் என்ற உணர்வில் நாம் வயப்படும்பொழுதே நம்மை நாமேதான் இப்படி வசப்படுத்திக் கொள்கிறோம் என்ற புரிதலையும் பெறுவது போலத்தான் இதுவும். எந்த அதிகாரமுமில்லாமல் எல்லா அதிகாரத்தையும் வெளியேற்றிவிட்டு இயல்பாக இருத்தல். இந்த நிலை தமிழகத்தில் சைவத்தைப் போலவே திராவிட இயக்கம் மற்றும் மார்க்சிய இயக்கங்களும் மெய்யியல் பார்வைகளை மையத்தில் வைத்து இயங்கவில்லை. முதலாளியம் மற்றும் காலனியாதிக்கத்தின் ஊடுருவலோடுதான் இவை செயல்பட்டதன் காரணமாக மெய்யியல் பார்வையைத் தமக்குள்ளிருந்து தள்ளிவைத்தே இவை செயல்பட்டன. கிறிஸ்துவ அமைப்புக்களுக்கும் இந்தத் திறனாய்வு பொருந்தும். நெருக்கடிச் சூழல் தீவிரப்பட்ட இன்றைய நிலையில் தான் ஒரு மீள் பார்வை என்ற முறையில் நம்மைநாமே கிழித்துப் பார்த்துக் கொள்கிறோம். இப்பொழுதேனும் மனிதர்களாவோம் என்ற முறையில்தான் இந்த மீள்பார்வை.

குறிப்பு: சென்னை "அருட்கடல்" இறையியல் இறைவாக்கினர் அருள்திரு. லூர்துசாமி அவர்களைப் பாராட்டும் முறையில் அவரது மாணவர்களின் கட்டுரைத் தொகுப்பில் இடம்பெற்ற கட்டுரை. 1999



கேவை ஞானி அவர்கள் ஆசிரியர், இதழாளர், கவிஞர், மார்க்சியர், எழுத்தாளர். எல்லாவற்றுக்கும் மேலாக அபூர்வமான மனிதர். இவரது இயக்கங்களுள் ஒன்றான வெளியீடு மிகவும் குறிப்பிடத் தக்கவை.

காவ்யா